# தொல்காப்பியம்

## களவியல்

### உரைவளம்

க.வெள்ளைவாரணன்

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்



19

# தொல்காப்பியம்

## களவியல்

### உரைவளம்

பேராசிரியர் க. வெள்ளைவாரணன்

ஆய்வுரை



பதிப்புத் துறை



மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

பதிப்புரிமை :

பதிப்புத் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை — 625 021.

*Publications Division*
*Madurai Kamaraj University*
*Madurai—625 021.*

பதிப்பு எண் : 68

விலை: ரூ. 13/-

பதிப்பு விவரங்கள் :

1. உரைவள ஆசிரியர் : பேராசிரியர் க. வெள்ளைவாரணன்
(Prof. K. Vellaivaranan)

2. தலைப்பு : தொல்காப்பியம் - களவியல் - உரைவளம்
(Tolkappiyam - Kalaviyal - Variorum edition)

3. பதிப்பு
i) இடம் : மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
(Madurai Kamaraj University, Madurai-21)
ii) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை (Publications Division)
Madurai Kamaraj University, Madurai-21.
iii) ஆண்டு : 1983 - முதற் பதிப்பு

4. மொத்த பக்கங்கள் : 277+6

5. பொருள் : தொல்காப்பிய உரைவளம்

அச்சும் அமைப்பும் : மணியம் பிரஸ், மதுரை-9.

## களவியல்

## பதிப்புரை

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் மூன்றாவது இயலாக அமைந்தது களவியல். பொருளதிகாரத்தின் முதலியலாகிய அகத்திணையியலில் அன்பினைந் திணையொழுகலாற்றின் பொதுவிலக்கண முணர்த்திய தொல்காப்பியனார் அகத்திணைப் பகுதியாகிய களவு கற்பு என்னும் இருவகையொழுகலாறுகளுள் களவொழுக்கத்திற்குரிய விதிகளை இவ்வியலில் விரித்துக் கூறியுள்ளார். இவ்வியலுக்கு இளம்பூரணருரையும் நச்சினார்க்கினியருரையும் வழங்கி வருகின்றன. இவ்விரண்டுரைகளையும் சூத்திரந்தோறும் கால அடைவில் முறையே அமைத்து இவ்வுரைகளைப் பயில்வார்க்கு உறுதுணையாகிய உரைவிளக்கங்கள் அவ்வவ்வுரைகளின் கீழ் அடிக்குறிப்பாகத் தரப்பெற்றுள்ளன. சூத்திரந்தோறும் இவ்விரண்டுரைகளின் பின்னே தொல்காப்பிய மூலத்தையடியொற்றிக் கருத்துரையும் பொழிப்புரையும் கொண்ட ஆய்வுரைப் பகுதி எளிய நடையில் எழுதிச் சேர்க்கப்பெற்றுள்ளது.

இறையனார் களவியலில் தொல்காப்பிய நூற்பாக்களையும் தொடர்களையும் எடுத்தாண்ட பகுதிகள் இப்பதிப்பில் உரிய இடங்களில் எடுத்துக்காட்டி விளக்கப்பெற்றுள்ளன. உரையாசிரியர் காட்டிய உதாரணப்பாடல்களில், உரையாசிரியர்களால் சிறப்பு முறையில் எடுத்துக்காட்டி விளக்கந்தரப் பெற்றவை உரைகளில் உள்ளவாறே முழுவுருவில் பதிக்கப் பெற்றன. ஏனையவற்றுக்கு முதற்குறிப்பும் நூற்பெயரும் எண்ணும் தரப்பெற்றன.

பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

# தொல்காப்பிய நூற்பா

| | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 |
|---|---|---|---|---|
| | | பக்க எண் | | |
| 1) | இன்பமும் பொருளும் | 7 | 10 | 15 |
| 2) | ஒன்றே வேறே | 20 | 23 | |
| 3) | சிறந்துழி ஐயஞ் | 27 | 28 | |
| 4) | வண்டே இழையே | 29 | 30 | |
| 5) | நாட்டம் இரண்டும் | 32 | 34 | 35 |
| 6) | குறிப்பே குறித்தது | 35 | 36 | |
| 7) | பெருமையும் உரனும் | 37 | 38 | |
| 8) | அச்சமும் நாணும் | 40 | 41 | |
| 9) | வேட்கை ஒருதலை | 42 | 43 | 45 |
| 10) | முன்னிலை யாக்கல் | 46 | 48 | 53 |
| 11) | மெய்தொட்டுப் பயிறல் | 54 | 64 | 78 |
| 12) | பண்பிற் பெயர்ப்பினும் | 80 | 83 | 86 |
| 13) | பாங்கர் நிமித்தம் | 86 | 87 | [illegible] |
| 14) | முன்னைய மூன்றும் | 90 | 91 | |
| 15) | பின்னர் நான்கும் | 90 | 91 | 92 |
| 16) | முதலொடு புணர்ந்த | 92 | 94 | |
| 17) | இருவகைக் குறிபிழைப் | 96 | 100 | 107 |
| 18) | காமத் திணையிற் | 108 | 110 | 111 |
| 19) | காமஞ் சொல்லா | 112 | 113 | 11[illegible] |
| 20) | சொல்லெதிர் மொழிதல் | 115 | 115 | 11[illegible] |
| 21) | மறைந்தவற் காண்டல் | 119 | 127 | 15[illegible] |
| 22) | வரைவிடை வைத்த | 154 | 155 | 15[illegible] |
| 23) | உயிரினுஞ் சிறந்தன்று | 160 | 160 | 16[illegible] |
| 24) | நாற்றமும் தோற்றமும் | 164 | 180 | 2[illegible] |
| 25) | களவல ராயினுங் | 212 | 215 | 22[illegible] |
| 26) | தாய்க்கும் வரையார் | 226 | 226 | 22[illegible] |
| 27) | கிழவோன் அறியா | 227 | 227 | 22[illegible] |

* 1) இளம்பூரணம்
2) நச்சினார்க்கினியம்
3) ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

1) இளம்பூரணம்
2) நச்சினார்க்கினியம்
3) ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| இறை. | — | இறையனார் அகப்பொருள் |
| ஐங்குறு. | — | ஐங்குறுநூறு |
| ஐந். எழு. | — | ஐந்திணை எழுபது |
| கம்ப. | — | கம்பராமாயணம் |
| கலித். | — | கலித்தொகை |
| குறள். | — | திருக்குறள் |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிலப். | — | சிலப்பதிகாரம் |
| திணை. ஐம். | — | திணைமொழி ஐம்பது |
| திணை. நூற். | — | திணைமாலை நூற்றைம்பது |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நற். | — | நற்றிணை |
| பா.வே. | — | பாட வேறுபாடு |
| புற.வெ.மா. | — | புறப்பொருள் வெண்பா மாலை |
| புறம். | — | புறநானூறு |
| பெருங். | — | பெருங்கதை |

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### களவியல்

---

**இளம்பூரணம்** : இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் களவியல் என்னும் பெயர்த்து.[1] களவொழுக்கம் உணர்த்தினமையாற் பெற்றபெயர். அஃதாதல் ஈண்டு உரைக்கின்றதனால் பயன்இன்றாம்; களவென்பது அறம் அன்மையின் [எனில்], [2] அற்றன்று; களவு என்னும் சொற்கண்டுழியெல்லாம் அறப்பாற்படாதென்றல் அமையாது.[3] களவாவது, பிறர்க்குரிய பொருள் மறையிற் கோடல். இன்னதன்றி,[4] ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலை வழாம னிற்றலால் இஃது அறமெனப்படும்.[5] அன்னதாதல் இச்சூத்திரத்தானும் விளங்கும்.

அஃதற்றாக, மேலை ஓத்தினோடு இவ்வோத்திற்கு இயைபு என்னையெனின், மேல் கைக்கிளை முதற் பெருந்திணை இறுவாயாக எழுதிணை ஓதி, அவற்றின் புறத்து நிகழுந் திணைகளும்

---

1. இது களவொழுக்கம் உணர்த்தினமையால் களவியல் என்னும் பெயர்த்-தாயிற்று.

2. 'களவென்பது அறம் அன்மையின் ஈண்டு உரைக்கின்றதனால் பயன் இன்-றாம் எனில்' என இயைத்துப் பொருள் காண்க.

3. 'களவெனும் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னும் சொற்கேட்டுக் காமம் தீதென்பதூஉம் அன்று; மற்றவை நல்லவாமாறும் உண்டு' எனவரும் இறையனார் களவியலுரையினை அடியொற்றியமைந்தது இவ்வுரைப் பகுதியாகும்.

4. 'இன்னதன்றி' என்பதனை, 'இஃது அன்னதன்றி' எனத் திருத்துக.

5. 'அறநிலை வழாமன்றலால்' என்பது முன்பதிப்பிலுள்ள பாடம்; 'அறநிலை வழாமனிற்றலால்' என இங்குத் திருத்தப் பெற்றது.

ஓதிப்போந்தார். அவ்வெழுதிணையினும் ஒருதலை வேட்கை[1] யாகிய கைக்கிளையும், ஒப்பில்கூட்டமாகிய பெருந்திணையும்[2] ஒழித்து இருவ ரன்பும் ஒத்த நிலைமையாகிய நடுவண் ஐந்திணைக்கண்ணும் புணர்ப்பும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலுமாகிய உரிப்பொருள் களவு, கற்பு என்னும் இருவகைக் கைகோளினும் நிகழுமாதலின், அவ்விருவகைக் கைகோளினுங் களவாகிய கைகோள் இவ்வோத்தினுள் உணர்த்துதலான் அவற்றின்பின் கூறப்பட்டது. இது நடுவணைந்திணைக்கண் நிகழும் பொருட்பாகுபாடாயின், அகத்திணையியலின் பின் வைக்கற்பாலது எனின், ஆண்டு வைக்கக் கருதின், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' [புறத்திணை-௱க] என்னும் மாட்டேறு பெறாதாம், அதனிடைக் களவியலும் கற்பியலும் கிடத்தலான் என்க.[3]

மற்றும் அஃது யாங்ஙனம் உணர்த்தினாரோ எனின்,

*'காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்[4]*
*பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்று*
*ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு[5]*
*மறையென மொழிதன் மறையோர் ஆறே'.*

(செய்யுளியல்-௧௭அ)

---

1. ஒருதலை வேட்கையாவது, ஒருவன் ஒருத்தியென்னும் இருபாலருள் ஒருவரிடத்தே மட்டும் தோன்றும் விருப்பம். இஃது ஒருதலைக் காமம் எனவும் வழங்கப் பெறும்.

'கைக்கிளை யுடைய தொருதலைக் காமம்' (3)

என்பது நம்பியகப் பொருள்.

2. ஒப்பில் கூட்டமாவது, ஒருவன் ஒருத்தியென்னும் இருவரிடையே அன்பின்றி நிகழும் பொருத்தமில்லாத கூட்டுறவு. இது பொருந்தாக் காமம் எனப்படும்.

'பெருந்திணை யென்பது பொருந்தாக் காமம்' (4)

என்பது நம்பியகப் பொருள்.

3. அன்பின் ஐந்திணையொழுகலாற்றின் பொது விலக்கணம் உணர்த்தும் அகத்திணையியலின்பின் அதன் சிறப்பியல்புகளாகிய களவு, கற்பு என்னும் ஒழுகலாறுகளின் இலக்கணம் உணர்த்தும் களவியல், கற்பியல் என்னும் இயல்களை வைத்தல் முறையாயினும், அங்ஙனம் வைப்பின், 'வெட்சிதானே குறிஞ்சியது புறனே' என்பது முதலாக அகத்திணை ஏழனோடும் புறத்திணை ஏழனையும் மாட்டெறிந்து கூறும் புறத்திணை யிலக்கணம் திறப்படப் புலனாகாதவாறு களவியலும் கற்பியலும் இடைப் பட்டுக் கிடக்குமாதலால், அகத்திணையியலின்பின் அகத்தொடு தொடர்புடைய புறத்திணையின் இலக்கணங் கூறும் புறத்திணையியலை வைத்து, அகத்திணையின் சிறப்பிலக்கணமுணர்த்தும் களவியலை அதன்பின் வைத்தார் ஆசிரியர் என மேலை இயலோடு இவ்வியலுக்குள்ள தொடர்பினை விளக்குவது இவ்வுரைப் பகுதியாகும்.

4. இடந்தலைப்பாடும். பா. வே.

5. அறைந்த சார்பொடு. பா. வே.

என்பதனான் இந்நால்வகையும் இதனுள் உரைக்கப்படுகின்றதென்று கொள்ளப்படும். காமப்புணர்ச்சியெனினும், இயற்கைப்புணர்ச்சியெனினும், முன்னுறு புணர்ச்சி யெனினும், தெய்வப் புணர்ச்சி யெனினும் ஒக்கும். இவையெல்லாம்காரணப்பெயர். அஃதாவது[1] ஒத்தார் இருவர் தாமே கூடுங் கூட்டம். இடந்தலைப்பாடாவது, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிற்றைஞான்றும் அவ்விடத்துச்சென்று எதிர்ப் படுதல். பாங்கற் கூட்டமாவது இப்புணர்ச்சி பாங்கற்கு உரைத்து, நீயெமக்குத் துணையாக வேண்டுமென்ற[2] அவன் குறிவழிச் சென்று தலைமகள் நின்ற நிலையை யுணர்த்தச் சென்று கூடுதல். தோழியிற் கூட்டமாவது, இவற்றின் பின்னர் இக்கூட்டம் நீடச்சேறல் வேண்டித் தோழியை இரந்து பின்னின்று அவள் வாயிலாகக் கூடுதல். இவை நான்கும் இம்முறையே நிகழும்என்றுகொள்க. இனி இம்முறைநிகழாது இடையீடுபட்டு [ம்] வரும். அஃதாமாறு, தலைமகள் எதிர்ப்பட்டுழி அன்புடையார் எல்லார்க்கும் இயற்கைப் புணர்ச்சிமுட்டின்றிக்கூடுதல் உலகியல் அன்மையான் தலைமகளை யாதானும் ஓரிடத்து எதிர்ப் பட்ட தலைமகன் அவள் காதற்குறிப்புணர்ந்துநின்று, கூட்டத்திற்கு இடையீடு உண்டாயுழியும்ஆண்டுச்சென்ற வேட்கைதணியாதுநின்று, முன்னை ஞான்று கண்டாற்போலப் பிற்றைஞான்றும் காணலாகுமோ என ஆண்டுச்சேறலும், தலைமகளும் அவ்வாறே வேட்கையான் அடர்ப் புண்டு ஆண்டுவருதலும் ஆகியவழிப் புணர்ச்சி நிகழும். ஆண்டு ஆயத் தாரானாதல் பிறரானாதல் இடையீடுபட்டுழித் தன்வருத்தத்தினைப் பாங்கற்கு உணர்த்தி அவன் தலைமகள் நின்றுழி யறிந்து கூற, ஆண்டுச்சென்று புணரும். அவ்விடத்தும் இடையீடுபட்டுழித் தோழி வாயிலாக முயன்றெய்தும். இவ்வாறும், ஒரோவொன்று இடையீடு பட்டு வருதலும் உளவாம். அவ்வாறாயின், இயற்கைப் புணர்ச்சி இடையீடுபட்டுழிவரைந்தெய்தல்தக்கதன்றோஎனின், வரைந்தெய்துந் திறம் நீட்டிக்குமாயின் வேட்கை நிறுத்தலாற்றாதார் புணர்ச்சி கருதி முயல்ப. இவ்வாறு சான்றோர் செய்யுள் வந்தனவும் உளவோ எனின், சான்றோர் செய்யுட்களும்இவ்வாறுபொருள் கொள்ள ஏற்பன உள. அவையாவன:—

*'மருந்திற் றீரா மண்ணின் ஆகாது*
*அருந்தவ முயற்சியின் அகற்றலும் அரிதே*
*தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய*

1. காமப் புணர்ச்சியாவது.
2. 'வேண்டுமென்றவழி' என்றிருத்தல் பொருத்தமுடையதாகும்.

தேனிமிர் நறவின் தேறல் போல
நீதர வந்த நிறையருந் துயரம்நின்
ஆடுகொடி மருங்கின் அருளின் அல்லது
பிறிதிற் றீரா தென்பது பின்நின்று
அறியக் கூறுதும் எழுமோ நெஞ்சே
நாடுவளங் கொண்டுபுகழ் நடுதல் வேண்டித்தன்
ஆடுமழைத் தடக்கை அறுத்துமுறை செய்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்த
விளங்குமுத் துறைக்கும் வெண்பல்
பன்மாண் சாயல் பரதவர் மகட்கே.'

இதனுள், 'ஆடுகொடி மருங்கின் அருளின் அல்லது[1] பிறிதில் தீராது' என்பதனான் இயற்கைப் புணர்ச்சி இடையீடுபட்டுப் புணர்ச்சி கருதிக் கூறியவாறு காண்க.

'மயில்கொல் மடவாள்கொல் மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளிர்—குயில்பயிரும்
கன்னி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு.' (திணைமொழி-௩௧)

இதனுள் ஐயநிலையைப் பாங்கற்கு உரைத்தலின் புணர்ச்சி இன்றாயிற்று.

'கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்ந்த துகள்படு கூழைப்
பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
அருளினும் அருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா நெஞ்சே என்னதூஉம்
அருந்துயர் அவலந் தீர்க்கும்
மருந்து பிறிதில்லையா னுற்ற நோய்க்கே.'

(நற்றிணை-௧௪௰)

1. பாட்டிலும் உரையிலும் 'ஆடுகொடி மருங்குனி னருளின் அல்லது' எனத் திருத்திக் கொள்ளுதல் பொருட்பொருத்தமுடையதாகும்.

இதனுள், 'அருளினும் அருளாளாயினும்' என்றமையால் கூட்டமின்மையும், 'பின்னிலை முனியல்' என்றமையால் இரந்து பின்னிற்பானாகத் துணிந்தமையும், [1] தோழியிற் கூட்டத்து இயற்கைப் புணர்ச்சிக்கு ஒருப்பட்டமையும் உணர்க.

*'நறவுக்கமழ் அலரி நறவு வாய்விரிந்து
இறங்கிதழ் கமழும் இசைவாய் நெய்தற்
கண்ணித் தலையர் கருங்கைப் பரதவர்
நின்னையர் அல்லரோ நெறிதாழ் ஓதி
ஒண்சுணங் கிளமுலை ஒருஞான்று புணரின்
நுண்கயிற் றுறுவலை நுமரொடு வாங்கிக்
கைதை வேலி இவ்வூர்ச்
செய்தூட் டேனோ சிறுகுடி யானே.'*

பெரியீரெனச் சேட்படுத்தவழிக் கூறியது.

*'கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்மலர் கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூல் ஆகம் பொருந்தினள் வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற பேரியல்
அம்மா அரிவையோ அல்லள் தெனாஅது
ஆஅய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய வுருகெழு கவாஅன்
நேர்மலை நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் கொல்லெனத் துணியுமென் னெஞ்சே.'*

(அகம்-கக அ)

1. துணிந்தமையானும். பா. வே.

இது தோழியிற் கூடிய தலைமகன் கூற்று.

> 'அவரை பொருந்திய பைங்குரல் ஏனல்
> கவரி மடமா கதூஉம் படர்சாரல்
> கானக நாட மறவல் வயங்கிழைக்
> கியானிடை நின்ற புணை.' (ஐந்திணையெழு-க)

இதனானே முந்துற்ற கூட்டமின்மை யுணர்க. இனி ஒரு கூட்டமும் நிகழாது ஆண்டு வந்தடைவேட்கை இருவர்க்கும் தணியாது நின்று வரைந்தெய்தலும் ஒன்று. இவ்வகையினான் இக்களவொழுக்கம் மூவகைப்படும்.[1]

க. 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.

1. ஒத்த அன்பினராகிய ஒருவனும் ஒருத்தியும் நல்லூழின் ஆணையால் எதிர்ப்பட்டுக் கூடும் இயற்கைப் புணர்ச்சியிலும் அதனையடுத்து நிகழும் இடந்தலைப்பாடு பாங்கற் கூட்டம் எனவரும் கூட்டங்களிலுந் தலைவன் தலைவி இருவரும் உள்ளப் புணர்ச்சியளவே நின்று மெய்யுறு புணர்ச்சி நிகழாது இடையீடு பட்டுப் பின்னர்த் தோழியின் துணைபெற்று மெய்யுறு புணர்ச்சி பெறுதலும் உண்டு எனவும், இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்னும் நான்கிடத்தும் மெய்யுறு புணர்ச்சி நிகழாதாயின் ஒத்த அன்பினராகிய இருவருள்ளத்தும் கிளர்ந்தெழுந்த வேட்கை தணியாது நிற்ப, அவ்விருவரும் உலகத்தார் அறிய மணஞ் செய்து பின்னர் மெய்யுறுதல் உண்டு எனவும், இவ்வகையால் இக்களவொழுக்கம் மூவகைப்படும் எனவும் இவ்வுரையில் இளம்பூரணர் குறிப்பிடுகின்றார். அவர் கூறும் மூவகைக் களவொழுக்கமாவன :

(i) இயற்கைப் புணர்ச்சி நிகழும் நிலையிலேயே தலைவன் தலைவியை மெய்யுறும் களவு,

(ii) இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்னும் கூட்டங்களில் உள்ளப் புணர்ச்சியளவே நின்று தோழியிற் கூட்டத்தில் தலைவியை மெய்யுறும் களவு,

(iii) மேற்குறித்த நால்வகைக் கூட்டத்தும் உள்ளப் புணர்ச்சியளவே கூடிநின்று உலகத்தார் அறிய மணஞ் செய்து கொண்டபின் மெய்யுறப்பெறும் களவு, என்பனவாம். இங்குக் குறித்த மூன்றாம் வகையினை விளக்கும் முறையில் அமைந்தது கபிலர் ஆரியவரசன் பிரகத்தனுக்குத் தமிழறிவுறுத்தற்குப் பாடிய பெருங்குறிஞ்சி யென்னும் குறிஞ்சிப்பாட்டாகும்.

என்பது சூத்திரம்.

இனி, இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், காமப் புணர்ச்சிக்கு இலக்கண வகையாற் குறியிடுதலை உணர்த்துதல் நுதலிற்று,

(இதன் பொருள்) : இன்பமும் பொருளு......காணுங் காலை என்பது—இன்பமும் பொருளும் அறனும் என்று சொல்லப் பட்டு, அன்பொடு புணர்ந்த நடுவண் ஐந்திணையிடத்து நிகழும் காமக் கூட்டத்தினை ஆராயுங்காலத்து என்றவாறு.

அன்பொடு புணர்ந்த ஐந்திணை என்றதனால் கைக்கிளை பெருந் திணையை ஒழித்து நின்ற முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனக் கொள்ளப்படும். அவை அன்பொடு புணர்ந்தவாறு என்னை யெனின், கைக்கிளை பெருந்திணையைப் போலாமை, ஒத்த அன்பின ராகிப் புணர்தலும்பிரிதலும் இருத்தலும் ஊடலும்இரங்கலும்நிகழ்த்துப ஆகலானும், அவை நிகழுங்கால் அத்திணைக்கு உறுப்பாகிய இடமும் காலமும் கருப்பொருளும் துணையாகி நிகழுமாகலானும், இவை அன் பொடு புணர்ந்தனஎன்க. அஃதேல், ஐந்திணைப் புறத்தவாகிய வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்பனவும் அன்பொடு புணர்ந்தன வாம் எனின், அவை [யும்] அன்புடையார் பலர் கூடி நிகழ்த்துபவை யாகலின், அன்பொடு புணர்ந்தனவாம்.

*அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை* (குறள்-எசு)

என்பதனானும் கொள்க.

இனி, இவ்வைந்திணையும் இன்பமும் பொருளும் அறமும் ஆயின வாறு என்னையெனின், புணர்தல் முதலாகிய ஐந்துபொருளும் இன்பந் தருதலின் இன்பமாயின. முல்லை முதலாகிய ஐந்திணைக்கும் உறுப் பாகிய நிலமும் காலமும் கருப்பொருளும் இவற்றின் புறத்தாகிய வெட்சி வஞ்சி உழிஞை தும்பை என்பனவும் வாகையுள் ஒரு கூறும் பொருளாகலானும், புணர்தல் முதலாகிய உரிப்பொருளான் வருவ தோர் கேடின்மையானும், பொருளாயின. இவ்வொழுக்கங்கள் அறத் தின்வழி நிகழ்தலானும், பாலையாகிய வாகைப்படலத்துள் அறநிலை கூறுதலானும், இவை அறமாயின. அஃதேல், கைக்கிளை பெருந் திணையும் இவற்றின் புறமாகிய பாடாண்பாட்டும் காஞ்சியும் அற முதலாகிய மூன்றுமன்றி அன்பொடு புணர்தல் வேண்டுமெனின், காஞ்சி அன்பொடு புணராமையும் பாடாண்பாட்டு அன்பொடு புணர்தல் ஒரு

தலையன்மையும் அவ்வோத்தினுள் கண்டுகொள்க. ஏனையிரண்டும் அன்பொடு புணராமை மேற்சொல்லப்பட்டன. இனி அவை அறனும் பொருளுமாய் இன்பமாகா: அஃதேல். அறனும் பொருளும் ஆகா மையும் வேண்டுமெனின், குலனும் குணனுங் கல்வியும் உடையராகிய அந்தணர் என விசேடித்தவழி, ஏனையோர்க்கு இம்மூன்று பொருளும் இயைதல் வேண்டுமென்னும் நியமம் இன்மையின் ஏற்றவழிக் கொள்ளப்படும்.

இனி, ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம் என்பது புணர்தல் முதலாகிய உரிப்பொருளும், அந்நிலமும் காலமும் கருப்பொருளும், களவினும் கற்பினும் வருதலின், அவை ஒரோவொன்று இருவகைப் படும். அவற்றுள், புணர்ச்சியாகிய இருவகையினும் களவாகிய காமக் கூட்டம் எனக் கொள்க.

இன்னும் அன்பொடு புணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக் கூட்டம் என்றதனால் எல்லா நிலத்தினும் காமக்கூட்டம் நிகழப்பெறும் என்று கொள்க. அவ்வாறாதல் சான்றோர் செய்யுளகத்துக் காண்க.[1]

மறையோர் தேளத்...யோரியல்பே என்பது—மறையோரிடத் தோதப் பட்ட மணம் எட்டனுள்ளும் துறையமை நல்யாழினை யுடைய ராகிய துணைமையோர்[2] நெறி என்றவாறு.

மறையோர் என்றது அந்தணரை. தேளம் என்றது அவரதாகிய நூலை. மணம் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. பிரமமாவது, கன்னியை அணிகலன்அணிந்து பிரமசாரியா யிருப்பானொருவனுக்குத்

---

1. புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி நிலத்திற்கேயுரியவாகக் கூறப்படினும் எல்லா நிலத்தினும் காமச் கூட்டம் நிகழப் பெறும் என்பதனை, ''அன்பொடு புணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம்'' என்ற தொடரால் தொல்காப்பியனார் புலப்படுத்தியுள்ளார் என்பதும், இவ்வாறு எல்லா நிலத்தினும் புணர்தல் ஒழுக்கம் நிகழ்தல் உண்டு என்பதனைச் சங்கச் சான்றோர் இயற்றிய அகத்திணைச் செய்யுட்களிற் காணலாம் என்பதும் இவ்வுரைத் தொடர்களால் இனிது புலனாம்.

2. கந்திருவர் ஆவார் தெய்வத்தன்மை வாய்ந்த பதினெண்கணங்களுள் 'ஒரு கணத்தினைச் சார்ந்தோர். இவர்கள் இசைத் துறைகளை வளர்க்கும் யாழினை ஏந்தி ஆணும் பெண்ணுமாக இருவராய் இணைந்து செல்லும் இயல்பினராதலின் துறையமை நல்யாழ்த் துணைமையோர்' என்று குறிக்கப்பெற்றனர்.

தானமாகக் கொடுப்பது. பிரசாபத்தியமாவது, மகட்கோடற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டியவழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது. ஆரிடமாவது, ஒன்றானும் இரண்டானும் ஆவும்ஆனேறும் வாங்கிக்கொடுப்பது.[1] தெய்வமாவது, வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவற்கு வேள்வித்தீ முன்னர்க் கொடுப்பது. காந்திருவமாவது ஒத்த இருவர் தாமே கூடுங்கூட்டம். அசுரமாவது, வில்லேற்றினானாதல் திரிபன்றி யெய்தானாதல் கோடற்குரியனெனக் கூறியவழி அது செய்தாற்குக் கொடுத்தல். இராக்கதமாவது, தலைமகள்தன்னினும்தமரினும் பெறாதுவலிதிற்கொள்வது. பைசாசமாவது, களித்தார்மாட்டுந் துயின்றார்மாட்டுங் கூடுதல்.

> *'அறனிலை ஒப்பே பொருள்கோள் தெய்வம்*
> *யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே*
> *இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய*
> *மறையோர் மன்றல் எட்டவை அவற்றுள்*
> *துறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பினதன்*
> *பொருண்மை என்மனார் புலமை யோரே'*

என்பதனாலுங்கொள்க.துறையமை நல்யாழ்த் துணைமையோராவார் கந்திருவர். அவர் இருவராகித் திரிதலின் துணைமையோர் என்றார். துணையன்பாவது[2] அவர் ஒழுகலாறோடொத்து மக்கண்மாட்டு நிகழ்வது. ஈண்டுக் காமக்கூட்டமென ஓதப்பட்டது மணவிகற்பமாகிய எட்டனுள்ளுங் கந்திருவமென்றவாறு. மாலைசூட்டல் யாதனுள் அடங்குமெனின், அதுவும் ஒத்த அன்பினராய் நிகழ்தலிற் கந்திருவப் பாற்படும்.

அறனும் பொருளும் இன்பமும் என்னாது, இன்பமும் பொருளும் அறனும் என்றது என்னை எனின், பலவகை உயிர்கட்கும் வரும் இன்பம் இருவகைப்படும். அவையாவன: போகம் நுகர்தலும் வீடுபெறுதலும் என. அவற்றுள் வீடுபேறு துறவறத்தில் நின்றார்க்

1. ஒன்றானும் இரண்டானும்—ஒன்றாயினும் இரண்டாயினும்.
ஆ — பசு, ஆனேறு — எருது.

2. 'துணையன்பாவது' என அச்சுப் புத்தகத்திற் காணப்படும் தொடர், 'துணைமையோரியல்பாவது' என்றிருத்தல் வேண்டும். துணைமையோர் — ஒப்புடைய இருவர். அவர்தம் இயல்பாவது, ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட முதற் காட்சியிலேயே வேட்கையால் உள்ளம் ஒத்துக்கூடுதல்.

கல்லது எய்தல் அரிதாயிற்று. போகநுதர்தல் மனையறத்தர்க் கெய்துவது. அவரெய்தும் இன்பமும் அவ்வின்பத்திற்குக்காரணமாகிய பொருளும் அப்பொருட்குக் காரணமாகிய அறனும் எனக் காரிய காரணம் நோக்கிவைத்தார் என்க.

இதனாற்சொல்லியது ஈண்டுக் களவென்றோதப்படுகின்ற ஒழுக்கம் அறம்பயவாத புறநெறியன்று; வேதவிதியாகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு.[1]

**நச்சினார்க்கினியம்**

இவ்வோத்துக் களவு கற்பென்னுங் கைகோள் இரண்டனுள் களவு உணர்த்தினமையிற் களவியலென்னும் பெயர்த்தாற்று; பிறர்க்குரித்தென்று இருமுதுகுரவரால் கொடையெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவருங்கரந்த உள்ளத்தோடு எதிர்ப் பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க்குரிய பொருளை மறையிற் கொள்ளுங் களவன்றாயிற்று. இது வேதத்தை 'மறைநூல்' என்றாற் போலக் கொள்க [2]

*"களவெனப் படுவது யாதென வினவின்*
*வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தல்*
*முளையெயிற் றமர்நகை மடநல் லோளொடு*
*தளையவிழ் தண்டார்க் காமன் அன்னோன்*
*விளையாட்டிடமென வேறுமலைச் சாரல்*
*மானினங் குருவியொடு கடிந்து விளையாடும்*
*ஆயமுந் தோழியும் மருவிதன் கறியா*
*மாயப் புணர்ச்சி என்மனார் புலவர்."*

---

1. தந்திரம்—நூல்; என்றது, நூலிற் போற்றியுரைக்கப்பட்ட ஒழுக்கத்தினை விகற்பம் — வகை; கூறுபாடு.

2 உலக மக்கள் பலர்க்கும் எளிதிற் புலப்படாது மறைந்துள்ள நுண்பொரு களை உணர்த்துதல் பற்றி வேதம் 'மறைநூல்' எனப் பெயர் பெற்றுற் போன்று உலகத்தார் அறியாதவாறு ஒத்த அன்புடைய ஒருவன் ஒருத்தியாகிய இருவரிடையே, மறைவின் நிகழும் அன்பின் ஐந்திணை ஒழுகலாறு 'களவு' எனப் பெயர் பெற்றது என்பதாம். பிறர் பொருளைக் கவரும் கள்வர் மறைந்து ஒழுகுமாறு போன்று அன்புடைய காதலர் இருவரும் உலகத்தா ரறியாது மறைந் தொழுகுதலின் அவர்தம் கரந்தவொழுக்கம் களவெனப் பெயர் பெறுவதாயிற்று. களவென்பது ஒப்பினல் ஆயபெயர்.

இக் களவைக் 'காமப்புணர்ச்சியும்' (தொல். பொ. செய். 187) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்திற் கூறிய நான்கு வகையானும் மேற்கூறுமாறு உணர்க.

இன்பத்திற்குப் பொதுவிலக்கணம் அகத்திணை யியலுட் கூறி அதற்கினமாகிய பொருளும் அறனுங் கூறும் புறத்திணையை, அதன் புறத்து நிகழ்தலிற், புறத்திணை யியலுட்கூறி யீண்டு அவ்வின் பத்தினை விரித்துச் சிறப்பிலக்கணங் கூறுதலின் இஃது அகத்திணை யியலோடு இயைபுடைத்தாயிற்று. *'வழக்கு...... நாடி' என்றலின் இஃது உலகிய லெனப்படும்; உலகத்து மன்றலாவது குரவர் கொடுப் பதற்கு முன்னர் ஒருவற்கும் ஒருத்திக்குங் கண்ணும் மனமுந் தம்முள் இயைவதேயென வேதமுங் கூறிற்றுதலின்.

இச் சூத்திரங் களவெனப்பட்ட ஒழுக்கம் உலகத்துப் பொருள் பலவற்றுள்ளும் இன்பம்பற்றித் தோன்றுமெனவும் அஃது இன்னதா மெனவுங் கூறுகின்றது.

**(இதன் பொருள்):** இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு- இன்பமும் பொருளும் அறனுமென்று முற்கூறிய மூவகைப்பொருள் களுள்; அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் - ஒருவனோடு ஒருத்தியிடைத் தோன்றிய அன்போடு கூடிய இன்பத்தின் பகுதியாகிய புணர்தன் முதலிய ஐவகை ஒழுக்கத்தினுள் ; காமக் கூட்டங் காணுங் காலை புணர்தலும், புணர்தனிமித்தமு மெனப்பட்ட காமப்புணர்ச் சியை ஆராயுங்காலத்து; மறைஓர் தேஎத்து மன்றல் எட்டனுள்- வேதம் ஓரிடத்துக் கூறிய மணமெட்டனுள்;[1] துறை அமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பு-துறை அமைந்த நல் யாழினையுடைய பிரி வின்மையோரது[2] தன்மை (என்றவாறு).

அன்பாவது,

*'அடுமரந் துஞ்சுதோள் ஆடவரும் ஆய்ந்த*
*படுமணிப் பைம்பூ ணவருந்—தடுமாறிக்*
*கண்ணெதிர் நோக்கொத்த காரிகையிற் கைகலந்து*
*உண்ணெகிழச் சேர்வதா மன்பு.'*

1. "மறையோர் தேஎத்து மன்றல்" என்ற தொடரில் 'மறையோர்' என்பதனை ஒரு சொல்லாக் கொண்டு, "மறையோர் என்றது அந்தணரை. தேஎம் என்பது அவரதாகிய நூலை" எனப் பொருள் வரைந்தார் இளம்பூரணர். மறையோர் என்பதனை மறை ஓர் என இரண்டு சொல்லாகப் பிரித்து 'மறை ஓர் தேஎத்து என்பதற்கு 'மறை ஓரிடத்துக் கூறிய' எனப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர்.

2. பிரிவின்மையோர்-ஆணும் பெண்ணுமாக இணைபிரியாதியங்கும் கந்தருவர். தொல்—சிறப்புப்பாயிரம்

மன்றல் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

அவற்றுட் பிரமமாவது: ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது.

*'கயலே ரமருண்கண் கன்னிபூப் பெய்தி*
*அயல்பே ரணிகலன்கள் சேர்த்தி—இயலின்*
*நிரலொத்த அந்தணற்கு நீரிற் கொடுத்தல்*
*பிரமமண மென்னும் பெயர்த்து.'*

பிரசாபத்தியமாவது: மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டித் தம்மகட்கு ஈந்து கொடுப்பது.

*'அரிமத ருண்கண் ஆயிழை யெய்துதற்*
*குரியவன் கொடுத்த வொண்பொரு ளிரட்டி*
*திருவின் தந்தை திண்ணிதிற் சேர்த்தி*
*அரியதன் கிளையோ டமைவரக் கொடுத்தல்*
*பிரித லில்லாப் பிரசா பத்தியம்.*

ஆரிடமாவது; தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது.

*'தனக்கொத்த வொண்பொருள் தன்மகளைச் சேர்த்தி*
*மனைக்கொத்த மாண்புடையாற் பேணி—இனக்கொத்த*
*ஈரிடத் தாவை நிறீஇயிடை ஈவதே*
*ஆரிடத்தார் கண்டமண மாம்.'*

தெய்வமாவது: பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒத்த ஒருவற்கு அவ் வேள்வித்தீ முன்னர்த் தக்கிணையாக[1] கொடுப்பது.

*'நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த*
*வேள்வி விளங்கழன் முன்நிறீஇக்—கேள்வியாற்*
*கைவைத்தாம் பூணளைக் காமுற்றாற் கீவதே*
*தெய்வ மணத்தார் திறம்.'*

1. தக்கிணை - ஆசிரியனுக்குத் தரும் கையுறைப் பொருள்.

ஆசுரமாவது : கோல்லேறு கொடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்.

*'முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத்*
*தகைநலங் கருதுந் தருக்கின ருளரெனின்*
*இவையிவை செய்தாற் கெளியள்மற் றிவளெனத்*
*தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்*
*தன்னவை யாற்றிய அளவையிற்றயங்கு*
*றொன்னிலை அசுரந் துணிந்த வாறே.'*

இராக்கதமாவது : தலைமக டன்னிலுந் தமரிலும் பெறாது வலிதிற் கொள்வது.

*'மலிபொற்பைம் பூணுளை மாலுற்ற மைந்தர்*
*வலிதிற்கொண் டாள்வதே என்ப—வலிதிற்*
*பராக்கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோள்*
*இராக்கதத்தார் மன்ற லியல்பு.'*

பைசாசமாவது : மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும்[1] பிறவுமாம்.

*'எச்சார்க் கெளியர் இயைந்த காவலர்*
*பொச்சாப் பெய்திய பொழுதுகொள் அமையத்து*
*மெய்ச்சார் பெய்திய மிகுபுகழ் நண்பின்*
*உசாவார்க் குதவாக் கேண்மைப்*
*பிசாசர் பேணிய பெருமைசால் இயல்பே.'*

*'இடைமயக்கஞ் செய்யா இயல்பின னீங்கி*
*உடைமயக்கி உட்கறுத்தல் என்ப உடைய*
*துசாவார்க் குதவாத ஊனிலா யாக்கைப்*
*பசாசத்தார் கண்டமணப் பேறு.''*

இனிக் கந்தருவமாவது : கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்பட்டுக் கண்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

1. ஆடைமாறுதலாவது: தான்விரும்பிய பெண்ணை அவளுடைய காதலனது உடைமுதலிய வேடத்தில் மறைந்து வஞ்சித்துக்கூடுதல்; இஃது உடைமயக்கல் எனவும்படும். அகலிகையைவிரும்பிய இந்திரன் அவள்கணவர் கோதமர் வேடத்திற் சென்று கூடியது இதன்பாற்படும்.

*'அதிர்ப்பில்பைம் பூண்ரும் ஆடவரும் தம்முள்*
*எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப—கதிர்ப்பொன்யாழ்*
*முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்*
*கந்திருவர் கண்ட கலப்பு'*

என இவற்றானுணர்க.

களவொழுக்கம் பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும் ஆயர் முதலியோர்க்கும் உரித்து. மாலைசூட்டுதலும் இதன்பாற் படும்.[1] வில்லேற்றுதன் முதலியன பெரும்பான்மை அரசர்க்குரித்து. அவற்றுள் ஏறுதழுவுதல் ஆயர்க்கே சிறந்தது. இராக்கதம் அந்தணரொழிந்தோர்க்கு உரித்து; வலிதிற் பற்றிப் புணர்தலின். அரசர்க்கு இது பெருவரவிற்றன்று. பேய் இழிந்தோர்க்கே உரித்து. கந்தருவரின் மக்கள் சிறிது திரிபுடைமையிற் சேட்படை முதலியன உளவாமென்றுணர்க.

அறத்தினாற் பொருளாக்கி அப் பொருளான் இன்பநுகர்தற் சிறப்பானும் அதனான் இல்லறங் கூறலானும் இன்பம் முற் கூறினார். அறனும் இன்பமும் பொருளாற் பெறப்படுதலின் அதனை இடை வைத்தார். போகமும் வீடுமென் இரண்டுஞ் சிறத்தலிற் போகம் ஈண்டுக் கூறி வீடுபெறுதற்குக் காரணம் முற்கூறினார்.[2] ஒழிந்த மணங் கைக்கிளையும் பெருந்திணையுமாய் அடங்குதலின் இதனை 'அன்பொடு' என்றார். பொருளாற் கொள்ளும் மணமும் இருவர் சுற்றமும் இயைந்துழித் தாமும் இயைதலிற் கந்தருவப்பாற் படும். ஐந்திணைப் புறத்தவாகிய வெட்சி முதலியவற்றிற்கும் அன்பொடு புணர்தலுங் கொள்ளப்படும்.[3]

---

1. பெண்ணொருத்தி, தன்னை மணந்து கொள்ள விரும்பிவந்திருந்த ஆடவர் பலருள் தான் விரும்பிய ஒருவனுக்கு மாலை சூட்டி மணந்து கொள்ளுதலும் கந்தருவ மணத்தின்பாற்படும் என்பதாம்.

2. வீடுபெறுதற்குரிய காரணம், முன் புறத்திணையியலில் காஞ்சித்திணைக்குப் பொதுவிலக்கணம் கூறும் வழிக் கூறப்பட்டது.

3. அன்பின் ஐந்திணையாகிய அகவொழுக்கமேயன்றி வெட்சி முதலிய புறத்திணையொழுகலாறுகளும் அன்புடையார் பலர் கூடி நிகழ்த்துபவையாதலின் அன்பொடு புணர்ந்தனவாம் என்றார் இளம்பூரணரும்.

*'அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை'*  [குறள் எசு]

என்றலின் கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாதென்றற்குத் ''துறையமை'' என்றார். [1]

**ஆய்வுரை**

தமிழ் மக்களது அன்பின் ஐந்திணையொழுகலாறாகிய களவொழுக்கம் உணர்த்தினமையால் இது களவியல் என்னும் பெயர்த்தாயிற்று. களவாவது அன்பு, அருள், அறிவு, அழகு, குடிப்பிறப்பு முதலியவற்றால் ஒத்துவிளங்கும் தலைவனும் தலைவியும் நல்லூழின் ஆணையால் தமியராய் ஓரிடத்து எதிர்ப்பட்டு உலகத்தார் அறியாது மறைந்தொழுகுதல். ஐம்பெருந்தீமைகளுள் ஒன்றாகக் குறிக்கப்படும் களவு என்பது, பிறர்க்குரிய பொருளை வஞ்சனையாற் கவர்ந்து கோடலாகிய குற்றமாகும். இஃது அத்தன்மையதன்றி ஒத்த அன்புடைய கன்னியை அவள்தன் இசைவறிந்து சுற்றத்தார் அறியாது காதலால் உளங் கலந்து பழகும் பெருங்கேண்மையாதலால், மக்களது வாழ்க்கைக்கு அரண் செய்யும் சிறப்புடைய அறமாகவே கொள்ளப்படும். ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய காதலர் இருவரும் தமது நெஞ்சக்கலப்பினைப் பிறர் அறியாதவாறு உலகத்தார் முன் மறைந்தொழுகினராதலின் கரந்த உள்ளத்தராகிய அவ்விருவரது ஒழுகலாறு களவு என்ற சொல்லால் வழங்கப்படுவதாயிற்று. இக்களவினை மறைந்தவொழுக்கம், மறை, அருமறை என்ற சொற்களால் வழங்குவர் தொல்காப்பியர்.

மேல் கைக்கிளை முதற் பெருந்திணையிறுதியாக அகத்திணை ஏழின் பொதுவியல்பினை அகத்திணையியலில் எடுத்துக்கூறி அவற்றின் புறத்துநிகழும் வெட்சி முதற் பாடாண் ஈறாகவுள்ள புறத்திணைகள் ஏழின் இயல்பினையும் புறத்திணையியலுட் கூறி, கைக்

9. இவ்வுரைத்தொடர், மறையோர் தேஎத்து எண்வகை மணங்களுள் ஒன்றாகிய கந்தருவத்திற்குந் தமிழியல் வழக்கமாகிய களவொழுக்கத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை விளக்குதல் அறியத்தகுவதாகும்.

கந்தருவம் கற்பின்றியும் நிகழ்தல் கூடும். அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்காகிய களவு, தலைமகளது உள்ளத்திண்மையாகிய கற்பின்றியமையாது எனக் கந்தருவத்திற்கும் களவொழுக்கத்திற்கும் உள்ள வேறுபாட்டினைப் புலப்படுத்துவது இவ்வுரைத்தொடர்.

கிளை முதலாப் பெருந்திணையிறுவாய் மேற் குறித்த அகத்திணை ஏழனுள்ளும் நடுவண் ஐந்திணை எனச் சிறப்பிக்கப்பெறும் அன்பின் ஐந்திணையொழுகலாற்றைக் களவு, கற்பு என இருவகைக் கைகோளாகப் பகுத்து, அவ்விரண்டிலுள்ளும் களவாகிய ஒழுகலாற்றின் சிறப்பியல்பினை இவ்வியலில் விரித்துரைக்கின்றாராதலின் இஃது அகத்திணையியலோடு இயைபுடையதாயிற்று.

அன்பின் ஐந்திணையாகிய இக்களவொழுக்கத்தினைக் காமப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கொடுதழாஅல், தோழியிற் கூட்டம் என நால்வகையாகப் பகுத்துரைப்பர். அன்புடையார் இருவர் முற் பிறப்பிற் செய்த நல்வினையின் பயனாகத் தனிமையில் எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் இன்றியமையாதவராய் அன்பினால் உளம் ஒத்த லாகிய நெஞ்சக் கலப்பே காமப்புணர்ச்சியாகும். இருவரது உள்ளக் குறிப்பும் முயற்சியுமின்றி நல்வினைப் பயனாகத் தன்னியல்பில் நிகழும் இவ்வுறவினை இயற்கைப் புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சியென்ற பெயர்களால் வழங்குவர் தமிழ் முன்னோர்.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் அடுத்த நாளும் அவ்விடத்திற் சென்று தலைவியை எதிர்ப்படுதல் இடந்தலைப்பாடு எனப்படும். தலைமகளுடன் தனக்கு ஏற்பட்ட உறவினைத் தன் உயிர்த்தோழனாகிய பாங்கனுக்குச் சொல்லி 'நீ எனக்குத் துணை யாக வேண்டும்' எனத் தலைவன் வேண்ட, அவன் குறித்தவழியே பாங்கன் சென்று தலைமகள் நின்ற நிலைமையுணர்ந்து வந்து தலைவனுக்கு உணர்த்தியபின் தலைவன் சென்று தலைமகளை யடைதல் பாங்கற் கூட்டம் எனப்படும். இக் களவொழுக்கம் நீண்ட நாட்கள் தொடர்ந்து நிகழவேண்டும் என விரும்பிய தலைவன், தலைவிக்குச் சிறந்தாளாகிய தோழியை இரந்து பின்னின்று அவள் வாயிலாகத் தலைவியைக் கண்டு அளவளாவுதல் தோழியிற் கூட்ட மாகும். இவை நான்கும் இம்முறையே நிகழ்தல் இயல்பு.

இனி, இவ்வொழுகலாறு இம்முறை நிகழாது இடையீடுபட்டு வருதலும் உண்டு. தலைவன் தலைமகளை எதிர்ப்பட்ட முதற்காட்சி யில் அன்புடையார் எல்லார்க்கும் மெய்யுறு புணர்ச்சி தடையின்றி நிகழும் என்பதற்கில்லை. தலைமகளை ஏதேனும் ஓரிடத்தில் எதிர்ப் பட்ட தலைமகன், அவள் காதற் குறிப்பு உணர்ந்த நிலையிலும் கூட்டத்திற்கு இடையீடு உண்டாய வழி அங்கே சென்ற வேட்கை தணியாது வந்து, தலைமகளை நேற்றுக் கண்டாற்போன்று இன்றுங்

காணலாகுமோ என எண்ணி அவ்விடத்தே பிற்றை நாளுஞ் செல்லு தலும், தலைமகளும் அவ்வாறே வேட்கையால் அடர்ப்புண்டு அங்கே வருதலும் ஆகியவழிப் புணர்ச்சி நிகழும். அங்கே ஆயத்தாராலோ பிறராலோ இடையீடு உண்டாயவழி தலைவன் தன்வருத்தத்தினைத் தன்னை வினவிய பாங்கனுக்கு உணர்த்தி, அவன் தலைமகள் நிலையறிந்து வந்து கூற அங்கே சென்றும் கூடுவன். அவ்விடத்தும் இடையீடுபடின் தலைமகளது குறிப்புணர்ந்து தோழி வாயிலாக முயன்று எய்துவன். இனி ஒரு கூட்டமும் நிகழாது முதற் காட்சி யில் இருவர்க்கும் உண்டாகிய வேட்கை தணியாது நின்று தலை மகளை மணஞ் செய்தபின்னர்க் கூடுதலும் உரியன். இவ்வகை யினால் இக்களவொழுக்கம் மூவகைப்படும் என்பர் இளம்பூரணர். களவியலின் முதற்சூத்திரம் இயற்கைப்புணர்ச்சியாவது இதுவென வுணர்த்துகின்றது.

(இதன் பொருள்) எல்லாவுயிர்க்கும் உரிய இன்பவுணர்வும், அவ் வின்பத்திற்குக் காரணமாகிய பொருளும், அப்பொருளினை யீட்டு தற்குரிய வரம்பாகிய அறமும் எனச் சொல்லப்பட்டு அன்பென்னும் உயிர்ப்பண்புடன் பொருந்தி நிகழும் காமக் கூட்டத்தினைக் கருதி நோக்குங்கால், மறையோரிடத்து ஓதப்பட்ட எண்வகை மணத்தினுள் ளும் இசைத்துறையமைந்த நல்லயாழினை யேந்தி யிருவராய்ப் பிரி வின்றியொழுகுவோராகிய கந்தருவரது ஒழுகலாற்றினை ஒத்த இயல் பினையுடையதாகும். எ. று.

தொல்காப்பியனார் காலத்தே வடவர் நாகரிகம் தமிழகத்தில் மெல்ல மெல்லப் பரவத் தலைப்பட்டமையால் மறையோர் தேஎத்து மண முறைக்கும் தென்றமிழ் நாட்டு மணமுறைக்கும் இடையேயமைந்த ஒற்றுமை வேற்றுமைகளை விளங்க உணர்த்துதல் அவரது கடனா யிற்று. ஒருவன் ஒருத்தியாகிய இருபாலாரிடையே யுண்டாகும் கூட்டுறவை ஒருதலைக் கேண்மையாகிய கைக்கிளை, ஒத்த கேண்மை யாகிய அன்பின் ஐந்திணை, ஒவ்வாக் கேண்மையாகிய பெருந்திணை யென மூவகையாகப் பகுத்துரைத்தல் தமிழ் மரபு. பிரமம், பிரசா பத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என எட்டு வகையாகப் பகுத்துரைத்தல் வடநூல் மரபாகும். மறையோர்க்குரியவாகச் சொல்லப்பட்ட எண்வகை மணத்தினுள்ளும் அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய மூன்றும் தமிழ்ப் பொருளிலக் கண மரபின்படி கைக்கிளைப்பாற்படும் எனவும், பிரமம், பிராசா பத்தியம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கும் பெருந்திணையாய்

அடங்கும் எனவும், கந்தருவம் என்னும் ஒன்றும் அன்பின் ஐந்திணைப் பாற்படும் எனவும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் வகுத்துக் கூறியுள்ளார்கள். அன்பொடு புணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக் கூட்டம், மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் துறையமை நல்யாழ்த் துணைமையோராகிய கந்தருவரது இயல்பினையுடைய தெனவே, கந்தருவகுமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தாற்போலத் தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டுப் புணர்வது காமக்கூட்டமெனப்படும் இக்களவொழுக்கமாகும் என மறையோர் தேஎத்து மன்றலாகிய கந்தருவத்திற்கும் தமிழியல் வழக்கமாகிய இக்களவொழுக்கத்திற்கும் இடையேயமைந்த ஒற்றுமை யினை உவமைவாயிலாக ஆசிரியர் தொல்காப்பியனார் உணர்த்திய திறம் உளங்கொளத்தகுவதாகும்.

ஒருவனும் ஒருத்தியும் ஆகத் தமியராய் எதிர்ப்பட்டார் இருவர், புனலோடும்வழிப் புற்சாய்ந்தாற்போலத் தம் நாணமும் நிறையும் இழந்து மெய்யுறு புணர்ச்சியிற் கூடி மகிழும் இயல்பே கந்தருவ மணமாகும். இங்ஙனம் கூடிய இருவரும், தம் வாழ்நாள் முழுவதும் கூடி வாழ்வர் என்னும் நியதியில்லை. எதிர்ப்பட்ட அளவில் வேட்கை மிகுதியாற் கூடிப் பின் அன்பின்றிப் பிரிந்து மாறும் வரம்பற்ற தன்மையும் கந்தருவத்திற்கு உண்டு. தமிழியல் வழக்கமாகிய களவொழுக்கம் என்பது ஒருவன் ஒருத்தியென்னும் இருவருள்ளத்தும் உள்நின்று சுரந்த அன்பின் பெருக்கினால், தான் - அவள் என்னும் வேற்றுமையின்றி இருவரும் ஒருவராய் ஒழுகும் உள்ளப் புணர்ச்சி யேயாகும். இத்தகைய உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் உயிரோ ரன்ன செயிர்தீர் நட்பே சாந்துணையும் நிலைபெற்று வளர்வதாகும். உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்தபின் ஒருவரையொருவர் பிரிவின்றி யொழுகும் அன்பின் தூண்டுதலால் உலகறிய மணந்து வாழும் கற்பென்னுந்திண்மையே தமிழரது ஒழுகலாறாகிய களவொழுக்கத்தின் முடிந்த பயனாகும். உலகியலில் உளவாகும் பலவகை இடையூறு களாற் காதலர் இருவரும் உலகறிய மணந்து மனையறம் நடத்தற்கு இயலாத நிலையில் உள்ளப் புணர்ச்சியளவே நிலைபெற்று வாழ்ந்து இறந்த காதலரும் இத்தமிழகத்திலிருந்தனர். மணிமேகலைக் காப்பியத் திற் கூறப்படும் தருமதத்தன் விசாகை என்னும் இருவரும், 'யாழோர் மணமாகிய கந்தருவ முறையிற் பொருந்தியவர்கள் இவர்கள்' எனத் தம்மைக் குறித்து ஊரவர் கூறிய பழிமொழியைவிலக்கித்தம் வாழ்நாள் முழுவதும் மெய்யுறு புணர்ச்சியை விரும்பாது உள்ளப் புணர்ச்சியளவே யமைந்து உயிர் துறந்த வரலாறு இங்கு நினைத்தற்குரியதாகும்.

கந்தருவ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோற்றுவது. அதன் பயிற்சியால் உள்ளப் புணர்ச்சி நிலைபெற்றுச் சாமளவும் கூடிவாழ்தலும் உண்டு; உள்ளப் புணர்ச்சி தோன்றாது தம்மெதிர்ப் பட்டாரைக் கூடி மாறுதலும் உண்டு. இங்ஙனம் மாறாது என்றும் பிரியா நிலையில் நிறைகடவாது அன்பினாற் கூடும் உள்ளப் புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பியல்பாகும். இதுவே தமிழியல் வழக்கமாகிய களவுக்கும் மறையோர்தேஎத்து மன்றலாகிய கந்தருவத் திற்கும் இடையேயுள்ள உயிர்நிலையாகிய வேறுபாடாகும். ''அன் பொடு புணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக் கூட்டம்'' எனத் தொல் காப்பியனாரும், ''அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே'' (குறுந் தொகை—சுல) எனப் பிற சான்றோரும் உள்ளப்புணர்ச்சி ஒன்றையே களவுக்குரிய சிறப்பியல்பாகக் குறித்துள்ளமை காணலாம். ஆரிய மணமாகிய கந்தருவத்திற்கும் தமிழர் ஒழுகலாறாகிய களவிற்கும் உள்ள இவ்வேறுபாட்டினையும் தமிழிலக்கணம் கூறும் களவொழுக் கத்தின் தூய்மையினையும் ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அறிவுறுத் தும் நோக்குடன் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு, கந்தருவத்திற்கும் களவிற்கும் உள்ள வேற்றுமையினை இனிது விளக்குவதாகும். ''கந்தருவர்க்குக் கற்பின்றியமையவும் பெறும், ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது என்றற்குத் 'துறையமை' என்றார்'' (களவியல்-1) என இவ்விரண்டற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை நச்சினார்க் கினியர் விளக்கிய திறம் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

ஆடவரும் மகளிரும் உணர்வினால் ஒத்து வாழ்வதற்குரிய இவ்வுலகியல் வாழ்வில், மகளிரை அஃறிணைப் பொருள்களாகிய உடைமைபோலக் கருதி ஆடவர்கள் அவர்களைப் பெற்றோர் முதலிய சுற்றத்தார்பாற் கேட்டுப் பெறுதலும் அன்னோர் கொடாராயின் அவர்கட்குத் தெரிந்தோ தெரியாமலோ வலிதிற் கவர்ந்து செல்லு தலுமாகிய இச் செயல்களை மணமெனக் கூறும் வழக்கம் தமிழியல் மரபுக்கு ஒவ்வாததாகும். ஆகவே இத்தகைய பொருந்தா மணமுறை களுக்குத் தமிழில் இலக்கியங் காணுதலரிது. ''அன்பொடு புணர்ந்த ஐந்திணை'' யெனவே அதன் முன்னும் பின்னும் கூறப்பட்ட ஒரு தலைக் காமமாகிய கைக்கிளையிலும் ஒவ்வாக் காமமாகிய பெருந் திணையிலும் இருவர்பாலும் ஒத்த அன்பினைக் காணுதலரிதென்பது பெறப்படும். இத்தகைய பொருத்தமில்லாத கூட்டுறவுகள் எந்நாட் டிலும் எக்காலத்தும் காணப்படுவனவே. உயர்ந்த ஒழுக்கத்திற்கு ஒவ்வாத செயல்களைக் குறிப்பாகச் சுட்டி விலக்கியும் ஒழுக்கத்தால்

மேன் மேல் உயர்தற்குரிய பண்புடைய நன்னிகழ்ச்சிகளைச் சிறப்பாக வெளிப்படக் கூறி விளக்கியும் மக்கட்குலத்தாரை நன்னெறிப் படுத்துவதே உயர்ந்த நூன்மரபாகும். இம்மரபினை உளத்துட் கொண்டு கைக்கிளை பெருந்திணைகளைக் குறிப்பாகவும் அன்பின் ஐந்திணையை விரிவாகவும் கூறுவர் தொல்காப்பியர்.

2. ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனுங் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே.

**இளம்பூரணம் :**

என் - எனின், இது காமக்கூட்டத்தின்கண் தலைமகனும் தலைமகளும் எதிர்ப்படுந்திறனும் அதற்குக் காரணமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றே வேறே என்றிரு பால்வயின் என்பது - ஒருவனும் ஒருத்தியுமாக இல்லறஞ் செய்துழி, அவ்விருவரையும் மறு பிறப்பினும் ஒன்றுவித்தலும் வேறாக்குதலுமாகிய இருவகை ஊழினும் என்றவாறு.[1]

ஒன்றி உயர்ந்த பாலதாணையின் என்றது — இருவருள்ளமும் பிறப்புத் தோறும் ஒன்றி நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையின் என்றவாறு.[2]

---

1. ஒன்று, வேறு என்னுஞ் சொற்கள் முறையே ஒன்றுவித்தல் (சேர்த்து வைத்தல்), வேறுபடுத்தல் (பிரித்து விலக்குதல்) என்ற பொருளில் இங்கு ஆளப் பெற்றன. பால்—ஊழ். இருபால்—ஆகலூழ், போகலூழ் என்னும் இருவகை ஊழ்.

2. ஒன்றியுயர்ந்த பால் — பல பிறப்புக்களிலும் கணவனும் மனைவியுமாகிய இருவரும் உள்ளம் ஒன்றி வாழ்ந்தமையால் மேன்மேலும் அன்பினால் உயர்தற் கேதுவாகிய நல்லூழ். 'ஒன்றி உயர்ந்த' என்புழி ஒன்றி என்னும் செய்தெனெச்சம் 'மழை பெய்து குளம் நிறைந்தது' என்புழிப்போல ஏதுப் பொருளில் வந்தது.

மக்களது வாழ்க்கையில் உயர்ந்ததன்மேற் செல்லும் மனநிகழ்ச்சியே தம்மால் அன்புடையாரை அடுத்துவரும் பிறப்பிலும் மீண்டும் சேர்த்து ஒன்றுவித்து நலந்தரும் நல்லூழாய்ப் பயன் விளைக்கும் என்பார், 'ஒன்றியுயர்ந்த பால்' என்றார். தன்னை அன்பினால் புரந்த பாரிவேள் இறந்த நிலையில் அவன் மகளிரைத் தக்கார்க்கு மணஞ்செய்து கொடுக்கும்படி பார்ப்பாரிடம் ஒப்படைத்து வடக்கிருந்த கபிலர் பாரியை நினைந்து உயிர்விடும் நிலையிற் பாடிய பாடலில்,

அறிவுடம்படுத்தற்கு என்பது—ஒருவர் வேட்கைபோல இருவர்க்கும் வேட்கை உளதாகுங் கொல்லோ எனக் கவர்த்து நின்ற[1] இருவரது அறிவினையும் ஒருப்படுத்தற்கு என்றவாறு.

கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்[2] என்பது-தமதுவேட்கையொடு கூட்டி ஒருவர் ஒருவருக்கு உரைக்குங் காமக்குறிப்புரையாம் என்றவாறு.

இதன் பொழிப்பு:—இருவர்க்குங் கவர்த்து நின்ற அறிவை ஒருப்படுத்தற் பொருட்டு வேட்கையொடுகூட்டிக் கூறுங் காமக் குறிப்புச் சொல் இருவரது நாட்டமாகும் என்றவாறு..

ஆகும் என்பதனை நாட்டம் என்பதனொடு கூட்டியுரைக்க. இதற்குச் செய்யுள்:—

*"பானலந் தண்கழிப் படறிந்து தன்னைமார்*
*நூல்நல நுண்வலையாற் கொண்டெடுத்த—கானற்*
*படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்*
*கடிபொல்லா என்னையே காப்பு."* (திணை மாலை நூற்.௩௨)

கண்ணினான் அறிப என்றவாறு. (௫)

---

1. கவர்த்து நின்ற அறிவாவது, "நாம் அவரை விரும்புமாறுபோல அவரும் நம்மை விரும்புவாரோ விரும்பமாட்டாரோ?" எனக் காதலர் இருவருள்ளத்தும் ஐய நிலையில் இருதலைப்பட்டு நிகழும் அறிவு. இங்ஙனம் நிகழும் இருவரது அறிவினையும் ஒருப்படுத்தலாவது, 'நாம் அவரைக் காதலிப்பது போன்றே அவரும் நம்மைக் காதலிக்கின்றார்' என்னும் காதற் குறிப்பினை இருவரது அறிவும் தெளிந்து உடன்படுமாறு செய்தல்.

2. கூட்டியுரைத்தலாவது, உள்ளக் குறிப்பினை அதற்குக் காரணமாய் நிகழும் வேட்கையுடன் சேர்த்துணர்த்தல், இத்தகைய காமக் குறிப்புரையினைப் புலப்படுத்தற்குரிய கருவியாக அமைந்தன தலைவன் தலைவியாகிய இருவருடைய கண்களும் என்பது இந்நூற்பாவினால் அறிவுறுத்தப்பெறும் நுண்பொருளாகும். இந்நுட்பத்தினை எளிய சொற்களால் தெளிவாகப் புலப்படுத்தும் முறையில் இளம்பூரணருரை அமைந்திருத்தல் உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

**நச்சினார்க்கினியம்**

இஃது அங்ஙனம் மக்களுள்ளாளெனத் துணிந்து நின்ற தலைவன் பின்னர்ப் புணர்ச்சி வேட்கை நிகழ்ந்துழித் தலைவியைக் கூடற்குக் கருதி உரை நிகழ்த்துங்காற் கூற்று மொழியான் அன்றிக் கண்ணான் உரை நிகழ்த்துமென்பதூஉம் அதுகண்டு தலைவியும் அக்கண்ணானே தனது வேட்கை புலப்படுத்திக் கூறுமென்பதூஉங் கூறுகின்றது; எனவே இது புணர்ச்சி நிமித்தமாகிய வழிநிலைக் காட்சி[1] கூறுகின்றதாயிற்று.

(இ-ள்) அறிவு-தலைவன் அங்ஙனம் மக்களுள்ளாளென்று அறிந்த அறிவானே; உடம்படுத்தற்கு - தலைவியைக் கூட்டத்திற்கு உடம்படுத்தற்கு; நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும்-தன்னுடைய நோக்கம் இரண்டானுங் கூட்டி வார்த்தை சொல்லும்; குறிப்புரை நாட்டம் இரண்டும் ஆகும்-அவ் வேட்கை கண்டு தலைவி தனது வேட்கை புலப்படுத்திக் கூறுங் கூற்றுந் தன்னுடைய நோக்கம் இரண்டானுமாம் (எ-று).

நாட்டம் இரண்டிடத்துங் கூட்டுக. உம்மை விரிக்க.[2] இங்ஙனம் இதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் 'புகுமுகம் புரிதல்'

1. இயற்கைப் புணர்ச்சியிற் காதலர் இருவரிடையே முதற்கண் நிகழும் காட்சி, ஒருவர் உள்ளக் குறிப்பினை மற்றவர் உணர்ந்து கொள்ளாத நிலைமைக்கண் விருப்புற்றுக் காணும் ஒருமருங்கு பற்றிய கேண்மையாதலின், அஃது ஒருதலைக் காம மாகிய கைக்கிளையின் பாற்படும். அவ்வாறன்றிக் காதலர் இருவர் கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒத்த நிலையில் நிகழும் காட்சி, அவ்விருவரும் மெய்யுறு புணர்ச்சி பெறுதற்கு நிமித்தமாகிப் பின்னர் நிகழ்தலின், அது வழிநிலைக் காட்சி எனப்படும்.

2. 'அறிவு உடம்படுத்தற்கு நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும்' எனவும், 'குறிப்புரையும் நாட்டம் இரண்டும் ஆகும்' எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கூறப்பட்டது. இவற்றுள், முதல் தொடர் தலைவனது நாட்டத்தின் செயலையும், இரண்டாந் தொடர் தலைமகளது நாட்டத்தின் செயலையும் குறித்தன. 'நாட்டம் இரண்டும்' என்ற தொடர் தலைவன் தலைவி என்னும் இரண்டிடத்தும் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

அறிவு உடம்படுத்தலாவது, தலைவனது அறிவாலே தலைவியைக் கூட்டத்திற்கு உடன்படச் செய்தல்; 'தலைவன் தன்னுடைய நோக்கம் இரண்டானும் கூட்டி வார்த்தை சொல்லும்; அவ்வேட்கை கண்டு தலைவி தனது வேட்கையைப் புலப்படுத்திக் கூறுங் குறிப்புரையும் தன்னுடைய நோக்கம் இரண்டினாலுமே ஆம்' என்பது இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருளாகும். 'குறிப்புரையும்' என வும்மை விரித்துப் பொருள் கூறப்பட்டது.

காதலர் இருவருள் ஒருவரது நோக்கு மற்றவரது நோக்கினை ஊன்றி நோக்குதலின் அவ்விருவர் நோக்கினையும் நாட்டம் என்ற சொல்லாற் குறித்தார் ஆசிரியர். **நாட்டம்**—நாட்டுதல்; ஊன்றுதல்.

"ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப" (பொருளியல். உசு)

என்பதனானும், இந்நூல் உலக வழக்கே நோக்குதலானும் அவர் பலவகைப்படுவர். அஃதாமாறு அந்தணர் அரசர் வணிகர் வினைஞர் என்னும் நால்வரொடும் அநுலோமர் அறுவரையும் கூட்டப் பதின்மராவர். இவரை நால்வகை நிலத்தோடு உறழ நாற்பதின்மராவர். இவரையும் அவ்வந்நிலத்திற்குரிய ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னுந் தொடக்கத்தாரோடு கூட்டப் பலராவர். அவரையும் உயிர்ப் பன்மையான் நோக்க வரம்பிலராவர். (உ)

**நச்சினார்க்கினியம்**

இது, முற்கூறிய காமக்கூட்டத்திற்கு உரிய கிழவனுங் கிழத்தியும் எதிர்ப்படும் நிலனும் அவ்வெதிர்ப்பாட்டிற்குக் காரணமும் அங்ஙனம் எதிர்ப்படுதற்கு உரியோர் பெற்றியுங் கூறுகின்றது.

(இ - ள்) ஒன்றே வேறே என்று இரு பால்வயின்—இருவர்க்கும் ஓரிடமும் வேற்றிடமும் என்று கூறப்பட்ட இருவகை நிலத்தின் கண்ணும் ; ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் - உம்மைக் காலத்து எல்லாப் பிறப்பினும் இன்றியமையாது உயிரொன்றி ஒருகாலைக் கொருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால்வரை தெய்வத்தின் ஆணையாலே; [1]ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப - பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுப; மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே - அங்ஙனம் எவ்வாற்றானும் ஒவ்வாது தலைவன் உயர்ந்தோனாயினுங் கடியப்படா (எ - று).

---

1. 'ஒன்றே வேறே என்றிருபால் வயின்' எனவரும் இத் தொடரில் 'பால்' என்பதற்கு 'நிலம்' எனப் பொருள் கொண்டு நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரை, 'பால்' என்பதனை ஊழின் பெயராகக் கொண்டு வழங்கிய தொல்காப்பியனார் கருத்துக்கு மாறுபட்டதாகும். 'பால்' என்ற சொல்லுக்குப் பலபொருள் உண்டெனினும் இந்நூற்பாவில் அச்சொல் ஊழ் என்ற பொருளிலேயே ஆளப் பெற்றுள்ளதென்பது, 'ஒன்றே வேறே என்று இருபால் வயின் ஒன்றி உயர்ந்த பால்' எனப் பாலின் தொகை சுட்டி அவற்றுள் ஒன்றனைப் பிரித்துரைத்தலால் நன்கு புலனாகும். அன்றியும் 'ஒன்றே வேறே என்று இருபால்' எனத் தொல்காப்பியனார் கூறிய இருவகைப் பால்களுள் ஒன்றுவிக்கும் பாலினை ஆகூழ் (371), ஆகலூழ் (372) எனவும் வேறுபடுத்தும் பாலினைப் போகூழ் (371), இழவூழ் (372) எனவும் திருவள்ளுவர் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும். இந்நூற்பாவிற் சுட்டப்பட்ட 'ஒன்றியுயர்ந்த பால்' என்பதனை "உடனுறைவாக்குக உயர்ந்த பாலே" (புறம். 236) எனக் கபிலர் இப்பொருளில் எடுத்தாண்டுள்ளமையும் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

'என்றிரு பால்வயிற் காண்ப' எனப் பால் வன்பால் மென் பால் போல நின்றது. உயர்ந்த பாலை ''நோய் தீர்ந்த மருந்து'' போற் கொள்க. ஒரு நிலம் ஆதலை முற்கூறினார், இவ்வொழுக் கத்திற்கு ஓதியது குறிஞ்சிநிலமொன்றுமே ஆதற்சிறப்பு நோக்கி. வேறு நிலம் ஆதலைப் பிற்கூறினார், குறிஞ்சி தன்னுள்ளும் இரு வர்க்கும் மலையும் ஊரும் வேறாதலுமன்றித் திணை மயக்கத்தான் மருதம் நெய்தலென்னும் நிலப் பகுதியுள் ஒருத்தி அரிதின் நீங்கி வந்து எதிர்ப்படுதல் உளவாதலுமென வேறுபட்ட பகுதி பலவும் உடன்கோடற்கு ஒருநிலத்துக் காமப் புணர்ச்சிப் பருவத்தாளா யினாளை ஆயத்தின் நீங்கித் தனித்து ஓரிடத்து எளிதிற் காண்டல் அரிதென்றற்குப் 'பாலதாணையிற் காண்ப' என்றார். எனவே, வேற்று நிலத்திற்காயின் வேட்டை மேலிட்டுத் திரிவான் அங்ஙனந் தனித்துக் காணுங் காட்சி அருமையாற் பாலதாணை வேண்டு மாயிற்று.

> ''இவனிவ ளைம்பால் பற்றவும் இவளிவன்
> புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்
> காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
> தேதில் சிறுசெரு உறுப மன்னோ
> நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
> துணைமலர்ப் பிணையல் அன்னவிவர்
> மணமகி ழியற்கை காட்டி யோயே.'' (குறுந். 229)

இஃது ஓரூர் என்றதாம்.

> ''காமஞ் செப்பாது கண்டது மொழிமோ'' (குறுந். 2)

என்றது என் நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாதே சொல் என்றலிற் குறிஞ்சிநிலம் ஒன்றாயிற்று.

> ''இலங்கும் அருவித்தே இலங்கும் அருவித்தே
> வானின்று இலங்கும் அருவித்தே தானுற்ற
> சூள்பேணான் பொய்த்தான் மலை''

என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்து கூறித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றலிற் குறிஞ்சியுள்ளும் மலை வேறாயிற்று.

"செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றா யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநோய் உற்றவர் காணாது கடுத்தசொல்
ஒவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே யுரைத்ததை"
(கலி. 76)

இது, மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவ நீர்ச் சாய்ப்பாவை தந்தான் ஒருவனென நெய்தனிலத்து எதிர்ப் பட்டமை கூறியது. ஆணை-விதி. கைகோளின் முதற்கட் கூறுதலிற் கற்பின்காறும் ஒன்றும் வேறுஞ் செல்லும் பாலது. ஆணையும் அவ்வாறாம்.[1]

மிகுதலாவது: குலங் கல்வி பிராயம் முதலியவற்றான் மிகுதல். எனவே, அந்தணர், அரசர் முதலிய வருணத்துப் பெண்கோடற்கண் உயர்தலும், அரசர் முதலியோரும் அம்முறை உயர்தலுங் கொள்க. இதனானே அந்தணர் முதலியோர் அங்ஙனம் பெண்கோடற்கட் பிறந்தோர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்று கொள்க. கடி, மிகுதி.[2] அவர் அங்ஙனம் கோடற்கண் ஒத்த மகளிர் பெற்ற புதல்வரோடு ஒழிந்த மகளிர் பெற்ற புதல்வர் ஒவ்வாரென்பது உணர்த்தற்குப் பெரிதும் வரையப்படாதென்றார். பதினாறு தொடங்கி இருபத்துநான்கு ஈறாகக் கிடந்த யாண்டொன்பதும் ஒரு பெண்கோடற்கு மூன்றுயாண்டாக அந்தணன் உயருங் கந்தருவமணத்து; ஒழிந்தோராயின் அத்துணை உயரார். இருபத்து நான்கிரட்டி நாற்பத்தெட்டாதல் பிரம முதலியவற்றான் உணர்க. வல்லெழுத்து மிகுதல் என்றாற் போல மிகுதலைக் கொள்ளவே பிராயம் இரட்டியாயிற்று. கிழத்தி மிகுதல் அறக்கழிவாம். 'கிழவன் கிழத்தி' எனவே பலபிறப்பினும் ஒருவர்க்கு ஒருவர் உரிமை எய்திற்று. இங்ஙனம் ஒருமை கூறிற்றேனும் 'ஒரு பாற்கிளவி' (தொல்-பொ-222) என்னுஞ் சூத்திரத்தான் நால்வகை

---

1. 'கற்பின்காறும் ஒன்றும் வேறும் செல்லும், பாலது ஆணையும் அவ்வாறாம்' என்று இருத்தல் வேண்டும்.

2. 'கடி—மிகுதி' என்னும் உரைக்குறிப்பு முன்னுள்ள பொழிப்புரையுடன் தொடர்புடையதாக அமையவில்லை. 'கடிவரையின்று' என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு 'நீக்கும் நிலைமையின்று', 'கடியப்படாது' எனப் பொருள் கொள்ளுதலே உரைமரபாகும். இவ்வாறன்றி, 'கடிவரையின்று-பெரிதும் வரையப்படாது' என இன்சொல்லாகக் கொண்டு மீண்டும் விளக்கந்தருதலால் 'கடி மிகுதி' என்னுஞ் சொற் குறிப்புப் பின்னர் எழுதப்பெற்றிருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது

நிலத்து நான்கு வருணத்தோர் கண்ணும்[1] ஆயர் வேட்டுவர் முதலியோர் கண்ணுங் கொள்க. இச் சூத்திரம் 'முன்னைய நான்கும்' (தொல்.பொ.52) எனக் கூறிய காட்சிக்கு இலக்கணங் கூறிற்றென் றுணர்க.[2]

எ.டு: ''கருந்தடங்கண் ... ... ... கண்ணே'' (பு.வெ.கைக்.1)

இக் காட்சிக்கண் தலைவனைப்போல் தலைவி வியந்து கூறுதல் புலனெறி வழக்கன்மை உணர்க. (உ)

**ஆய்வுரை**

இயற்கைப் புணர்ச்சிக்கண் ஒத்த அன்பினராய ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் காணுமாறு கூறுகின்றது.

(இ-ள்) (ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழும் மனையறத்தின் பயனாக அவ்விருவரையும் பிறப்புத்தோறும்) சேர்த்து வைப்பதும் பிரித்து விலக்குவதுமாகிய இருவகை ஊழினும், இருவருள்ளமும் எக்காலத்தும் ஒன்றி வாழ்தற்கேற்ற நல்லூழின் ஆணையால், ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டுக் காண்பர். தலைவன் உரு திரு முதலியவற்றால் மிக்கவனாயினும் குற்றமில்லை எ- று.

ஒன்றுவித்தலைச் செய்யும் நல்லூழினை 'ஒன்று' எனவும், வேறுபடுத்தலைச் செய்யும் போகூழினை 'வேறு' எனவும் கூறினார் ஆசிரியர்.

இவ்வாறு ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்படும் முதற்காட்சிக்கு நல்லூழின் ஆணையே காரணமென்பார், 'உயர்ந்தபாலது ஆணையின்' என்றும், அவ்வூழின் ஆணைக்குக் காரணமாவது, அவ்விருவரும் பண்டைப்பிறப்புக்களிற் பயிலியது கெழீஇய நட்பென்பார்,

1. பிற்காலத்தில் தமிழகத்தில் அயலவர் கலப்பால் தோன்றிய நால்வகை வருண வேறுபாடு பற்றி இந்நூற்பாவுக்கு உரையாசிரியர் தரும் விளக்கம் பண்டைத் தமிழியல் நூலாசிரியராகிய தொல்காப்பியனார் கருத்துக்கு ஒவ்வாததாகும்.

2. ''முன்னைய நான்கும் முன்னதற்கென்ப'' (அகத்திணையியல்-52) எனவரும் நூற்பாவுக்கு, ''இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னிகழ்ந்த காட்சியும் ஐயமும் தெரிதலும் தேறலும் என்ற குறிப்பு நான்கும் நற்காமத்துக்கு இன்றியமையாது வருதலின் முற்கூறிய சிறப்புடைக் கைக்கிளையாதற்குரிய என்று கூறுவர் ஆசிரியர்'' எனத் தாம் முன்னர்ப் பொருள் வரைந்தமையின், அந் நான்கனுள் முதலாவதாகிய காட்சிக்கு இச்சூத்திரம் இலக்கணம் கூறிற்றென்றுணர்க'' என ஈண்டும் அவ்வுரையொடு தொடர்புபடுத்தி விளக்கினார் நச்சினார்க்கினியர்.

'ஒன்றியுயர்ந்த பாலது ஆணை' யென்றும், பல பிறவிகளிலும் பழகிய அன்பின் தொடர்ச்சியே ஒருவரையொருவர் இன்றியமையா தவராகக் காணுதற்குரிய காதற் கிழமையை வழங்கியதென்பார், 'ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப' என்றும் கூறினார். பால்து ஆணையாவது, வினைசெய்த உயிர்கள் நுகர்தற்குரிய இருவினைப் பயன்கள் ஏனையுயிர்கள்பாற் செல்லாது வினைகளைச் செய்த உயிர் களே நுகரும்வண்ணம் முறைசெய்து நுகர்விப்பதாகிய இறைவனது ஆற்றல். இதனைப் 'பால்வரை தெய்வம்' (தொல்-கிளவியாக்கம்-58) என்ற தொடராலும் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாம். தலை வனுக்கும் தலைவிக்கும் அமைந்த ஒத்த பண்புகளாவன: பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, அழகு, அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு என்னும் இப்பத்துமாகும். காணுதலென்றது, தனக்குச் சிறந்தாராகக் கருதுதலை.

௩. **சிறந்துழி[1] ஐயஞ் சிறந்த தென்ப**
**இழிந்துழி[2] இழிவே சுட்ட லான.**

**இளம்பூரணம்**

என்—எனின், ஐயம் நிகழும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ- ள்) ஒருவன் ஒருத்தியைக் கண்ணுற்றுழி அவ்விருவகையும் உயர்வுடையராயின், அவ்விடத்து ஐயம் சிறந்தது என்று சொல்லுவர்; அவர் இழிபுடையராயின், அவ்விடத்து அவள் இழிபினையே சுட்டி யுணர்தலான் என்றவாறு. சிறப்பு என்பது மிகுதி. ஐயமிகுதலாவது மக்களுள்ளாள் அல்லள் தெய்வமோ என மேலாயினாரோடே ஐயுறுதல், சிறந்துழி என்பதற்குத் தலைமகள்தான் சிறந்துழியும் கொள்ளப்படும்; அவளைக் கண்ட இடம் ஐயப்படுதற்குச் சிறந்துழியும் கொள்ளப் படும். உருவ மிகுதியுடையளாதலின் ஆயத்தாரிடைக் காணினும் தெய்வம் என்று ஐயுறுதல். இதனாற் சொல்லியது உலகத் துத் தலைமகனும் தலைமகளுமாக நம்மால் வேண்டப்பட்டார் அந்தணர் முதலாகிய நான்கு வருணத்தினும் ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னும் தொடக்கத்தினும் அக்குலத்தாராகிய குறுநில மன்னர்மாட்டும் உளராவரன்றே; அவரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடிவானும் உயர்ந்த தலைமகனும் தலைமகளுமாயினோர் மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டும்[2] அவ் விழிமரபினையே சுட்டியுணரா நிற்குமாதலான் (எ-று).

1. சிறந்துழி — உயர்வுடையராயின். 2. இழிந்துழி — இழிவுடையராயின் சிறத்தல் — மிகுதல்; உயர்தல். இழிதல்—தாழ்தல். இழிந்துழி இழிபே சுட்டலான்; சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப என இயையும்

2. 'அல்லாதார் மாட்டு' என உம்மையின்றி யிருத்தல் பொருத்தமாகும்.

'காராரப் பெய்த' என்னும் முல்லைக் கலியுள் (கலித். ளக)

"பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி எடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணிலார் புண்ணாக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ ஆய மகள்"

என ஐயமின்றிச் சுட்டியுணர்ந்தவாறு காண்க.

இனி உயர்புள்வழி ஐயம் நிகழுமாறு:

"உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி
ஐயக் கிளவி ஆடூஉவிற்கு உரித்தே" (பொருளியல். சஉ)

என்றாராகலின், ஐயப்படுவான் தலைமகன் என்று கொள்க. தலைமகள் ஐயப்படாதது என்னையெனின், அவள் ஐயப்படுங்கால் தெய்வமோ வென்று ஐயுறல் வேண்டும். அவ்வாறு ஐயுற்றால் அச்சம் வரும். அஃது ஏதுவாகக் காம நிகழ்ச்சி யுண்டாகாது. (௩)

**நச்சினார்க்கினியம்**

இஃது எய்தாத தெய்துவித்து எய்தியது விலக்கிற்று, 'முன்னைய நான்கும்' (தொல்-பொ-52) என்றதனாற் கூறிய ஐயந் தலைவன்கண்ணதே எனவுந் தலைவிக்கு நிகழுமோ என்னும் ஐயத்தை விலக்குதலுங் கூறலின்.

(இ - ள்) சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப-அங்ஙனம் எதிர்ப்பாட்டின் இருவருள்ளுஞ் சிறந்த தலைவன் கண்ணே ஐயம் நிகழ்தல் சிறந்ததென்று கூறுவார் ஆசிரியர்; இழிந்துழி இழிபே சுட்டலான - அத் தலைவனின் இழிந்த தலைவிக்கண் ஐயம் நிகழுமாயின் இன்பத்திற்கு இழிவே அவள் கருதும் ஆதலான் (எ - று).[1]

---

1. ஒரு பொருளைக் கண்டு ஐயுற்றுத் தெளிதற்குரிய இரு பாலாருள் பெண்ணினும் ஆடவன் சிறத்தல்பற்றித் தலைமகனைச் 'சிறந்துழி' எனவும், அச்சிறப்பின்மைபற்றித் தலைமகளை 'இழிந்துழி' எனவும் ஆசிரியர் குறித்துள்ளார் எனக் கொண்டு நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரை, 'செறியும் நிறையும் செம்மையும் செப்பும், அறிவும் அருமையும் பெண்பாலான" (பொருளியல்-15) எனத் தொல்காப்பியனார் அறிவுறுத்திய பெண்மையிலக்கணத்திற்கு முரண்பட்டதாகும். இந்நூற்பாவில் 'சிறந்துழி' 'இழிந்துழி' எனச் சுட்டியது ஐயப்படுதற்குரிய காட்சிப் பொருளாகிய தலைமக்களது உருவ வனப்பின் சிறப்பினையும் சிறப்பின்மையினையும் அன்றிக் கண்டு ஐயுறுவோரது உயர்வினையும் தாழ்வினையும் சுட்டியதன்றென்க.

தலைவற்குத் தெய்வமோ அல்லனோவென நிகழ்ந்த ஐயம். நூன் முதலியவற்றால் நீக்கித் தெய்வமன்மை உணர்தற்கு அறிவுடையனாதலுந், தலைவிக்கு, முருகனோ இயக்கனோ மகனோ வென ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலள் ஆகலானும் இங்ஙனம் கூறினார். தலைவிக்கு, ஐயம் நிகழின் அச்சமேயன்றிக் காமக்குறிப்பு நிகழாதாம். மகடூஉவின் ஆடூஉச் சிறத்தல் பற்றிச் 'சிறந்துழி' என்றார்.

எ-டு: *"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை*
*மாதர்கொல் மாலுமென் னெஞ்சு"* (குறள். 1081)
என வரும். (௩)

**ஆய்வுரை**

இஃது ஐயம் தோன்றுமிடம் இதுவெனக் கூறுகின்றது.
(இ-ள்) தலைவி ஒத்த நலங்களாற் சிறந்து தோன்றிய வழி (தலைவனது உள்ளத்தே) ஐயந்தோன்றுதல் சிறந்தது என்பர்; சிறப்பின்றித் தாழ்ந்த நிலையில் அவ்விழிபே இன்ன தன்மையள் எனத் தெளிவிக்குமாதலின் (இந்நிலையில் ஐயம் தோன்றுதற்கு இடமில்லை) எ-று.

தமியராய் எதிர்ப்பட்டாரிருவருள் தலைவி தன்னினும் உணர்ந்த தலைவனை நோக்கி 'இவன் தேவருள் ஒருவனோ மகனோ' என ஐயுறுவாளாயின் அவளுள்ளத்தில் அச்சந்தோன்றுமேயன்றிக் காதலுணர்வு தோன்றாது. ஆகவே இங்ஙனம் ஐயந் தோன்றுதல் தலைமகனுக்கன்றித் தலைமகளுக்கில்லையென்பர் இளம்பூரணர்.

௪. **வண்டே இழையே வள்ளி பூவே**
**கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று**
**அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ**
**நின்றவை களையுங் கருவி என்ப.**

**இளம்பூரணம்**

என்—எனின், ஐயப்பட்டான் துணிதற்குக் கருவி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எண்ணப்பட்ட வண்டு முதலாகிய எட்டும் பிறவுமாகி அவ்விடத்து நிகழாநின்ற ஐயம் களையும் கருவி என்றவாறு.

ஐயமென்பது அதிகாரத்தான் வந்தது. 'நிகழாநின்றவை' என்பது குறுகிநின்றது.[1] வண்டாவது மயிரின் அணிந்த பூவைச்

1. 'நிகழா நின்றவை' என்பது 'நிகழநின்றவை' எனக் குறுகி நின்றது. எனவே 'நிகழாநின்றவை' என்புழி 'ஆநின்று' என்பது நிகழ்காலம் உணர்த்தும் இடைநிலை என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

சூழும் வண்டு. அது[1]பயின்றதன் மேலல்லது செல்லாமையின் அதுவும் மக்களுள்ளா ளென்றறிதற்குக் கருவியாயிற்று. இழையென்பது அணிகலன். அது செய்யப்பட்டதெனத் தோற்று-தலானும், தெய்வப்பூண் செய்யா அணியாதலானும் அதுவும் அறி-தற்குக் கருவியாயிற்று. வள்ளி என்பது முலையினும் தோளினும் எழுதிய கொடி. அதுவும் உலகின் உள்ளதாகித் தோன்றுதலின் (அதுவும்) கருவியாயிற்று. அலமரல் என்பது தடுமாறுதல். தெய் வமாயின் நின்றவழி நிற்கும். அவ்வாறன்றி, நின்றுழி நிற்கின்றிலள் என்று சுழற்சியும் அறிதற்குக் கருவியாயிற்று. இமைப்பென்பது கண்ணிமைத்தல். தெய்வத்திற்குக் கண் இமையாமையின் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. அச்சமென்பது ஆண்மக்களைக் கண்டு அஞ்சுதல். அது தெய்வத்திற்கு இன்மையான் அதுவும் அறிதற் குக் கருவியாயிற்று. அன்னவை பிறவும் என்றதனான் கால் நிலந்-தோய்தல், வியர்த்தல், நிழலாடுதல் கொள்க. இவை கருவியாகத் துணியப்படும் என்றவாறு.

காட்சி முதலாகிய இத்துணையும் கைக்கிளைக் குறிப்பாம்.[2] செய்யுள் வந்தவழிக்காண்க. இனிக் குறிப்பறிதல் கூறுகின்றாராகலின் அக்குறிப்பு நிகழும்வழி இவையெல்லாம் அகமாம்.[3] என்னை? இருவ, மாட்டு மொத்த நிகழ்ச்சி யாதலான். இவை தலைமகள் மாட்டுப் புலப் படநிகழாது. ஆண்டுக் குறிப்பினாற் சிறிது நிகழுமென்று கொள்க.

அவை வருமாறு:—

*''உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்*
*கண்டார் மகிழ்செய்தல் இன்று''* (குறள். 1090)

எனவரும். பிறவும் அன்ன. (௪)

**நச்சினார்க்கினியம்**

இஃது ஐயுற்றுத் தெளியுங்கால் இடையது ஆராய்ச்சியாதலின் ஆராயும் கருவி கூறுகின்றது. வண்டு முதலியன வானகத்தனவன்றி மண்ணகத்தனவாதல் நூற்கேள்வியானும் உய்த்துணர்ச்சியானும் தலைமக்கள் உணர்ப.

---

1. அது-அவ்வண்டு: பயின்றதன் மேலல்லது செல்லாமையின் - தான் பல காலும் தேனுண்டு பழகிய பூக்களின் மேலன்றி ஏனைப் பூக்களில் மொய்க்காமையின்.

2. இயற்கைப் புணர்ச்சியில் முதற்கண் தலைமகன்பால் நிகழும் காட்சி, ஐயம், துணிவு, இம் மூன்றும் தலைமகளது உள்ளக் குறிப்பினை யறிதற்கு முன்னே தலைமகன்பால் தோற்றும் ஒருமருங்குபற்றிய உறவாதலின் கைக்கிளைக் குறிப் பாயிற்று.

3. இவ்வாறே தலைமகள்பால் காதற் குறிப்பு நிகழும்வழி இவை அன்பின்-ஐந்திணையெனப்படும். அகவொழுக்கமாக அமையும் என்பது கருத்து.

(இ-ள்) வண்டே-பயின்றதன் மேலல்லது செல்லாத தாது ஊதும் வண்டு; இழையே-ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலன்கள்; வள்ளி-முலையினுந் தோளினும் எழுதுந் தொய்யிற்கொடி; பூவே-கைக்கொண்டு மோந்து உயிர்க்கும் கழுநீர்ப்பூ; கண்ணே - வான் கண்ணல்லாத ஊன் கண்; அலமரல் - கண்டறியாத வடிவுகண்ட அச்சத்தாற் பிறந்த தடுமாற்றம்; இமைப்பே - அக் கண்ணின் இதழ் இமைத்தல்; அச்சம்-ஆண்மகனைக் கண்டுழி மனத்திற் பிறக்கும் அச்சம்; என்று அன்னவை பிறவும் - என்று அவ்வெண்வகைப் பொருளும் அவைபோல்வன பிறவும்; அவண் நிகழ நின்றவை-அவ்வெதிர்ப் பாட்டின்கண் முன்பு கண்ட வரையரமகள் முதலிய பிழம்புகளாய் ஈண்டுத் தன் மனத்து நிகழ் நின்ற அப் பிழம்புகளை ஆங்குக் களையும் கருவி என்ப - முந்துநூற்கண்ணே அவ் வையம் நீக்குங் கருவியாமென்று கூறுவர் ஆசிரியர் (எ - று)[1]

எனவே, எனக்கும் அது கருத்தென்றார். இவையெல்லாம் மக்கட்குரியனவாய் நிகழவே தெய்வப் பகுதிமேற் சென்ற ஐயம் நீங்கித் துணியும் உள்ளம் பிறத்தலின் துணிவும் உடன் கூறிற்றே யாயிற்று.[2]

இனி, 'அன்னபிற' ஆவன கால் நிலந்தோய்தலும் நிழலீடும் வியர்த்தலும் முதலியன.

*"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடும்*
*இருநிலஞ் சேவடியுந் தோயும்-அரிபரந்த*
*போகிதழ் உண்கணு மிமைக்கும்*
*ஆகு மற்றிவள் அகலிடத் தணங்கே"*

(புற.வெ.மாலை.கைக்.3)

என வரும்.

1. அவண், வண்டு, இழை, வள்ளி, பூ, கண், அலமரல், இமைப்பு, அச்சம் என்று அன்னவை பிறவும் அவண் நிகழநின்றவை ஆங்குக் களையும் கருவி என் என இயைத்துப் பொருள் வரையப்பட்டது. 'அவண் நிகழநின்றவை' என்றது தலைமகளை எதிர்ப்பட்டுக் கண்டநிலையில், தலைவன் தான் முன்பு கண்ட வரையரமகள் முதலிய வடிவுகளாய்த் தன் மனத்து நிகழ நின்ற ஐயத்தோற்றங்களை, அவ் ஐயத்தினை நீக்கும் கருவி, வண்டு, முதலாகச் சொல்லப்பட்ட எண்வகைப் பொருளும் கால் நிலந்தோய்தல், நிழலிடுதல், உடல் வியர்த்தல் முதலாக அவை போல்வன பிறவுமாம் என்றவாறு.

2. 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' என்பதனாற் காட்சியும், 'சிறந்துழி ஐயம் சிறந்ததென்ப' என்பதனால் ஐயமும், இந்நூற்பாவால் ஐயம் நீங்கித் துணிதலாகிய துணிவும் முறையே கூறப்பட்டமை காணலாம்.

இக் காட்சி முதலிய நான்கும் அகனைந்திணைக்குச் சிறப்புடைமையும் இவை கைக்கிளையாமாறும் 'முன்னைய நான்கும், தொல்-பொ-52) என்புழிக் கூறினாம். இங்ஙனம் ஐயந்தீர்ந்துழித் தலைவியை வியந்து கூறுதலுங் கொள்க. (௪)

**ஆய்வுரை**

இது, தலைமகனுள்ளத்து ஐயம் நீங்கித் துணிதற்குரிய கருவி கூறுகின்றது.

(இ-ள்) தலைமகள் கூந்தலில் அணிந்த மாலையில் மொய்த்த வண்டுகளும், அவளணிந்த அணிகலன்களும், மேனியிற் கோலம் செய்யப்பெற்ற வள்ளிக் கொடியும், நறுமலரும், கண்ணிமைத்தலும், தடுமாற்றமும், அச்சமும் அத்தன்மைய பிறவும் (தலைமகனுள்ளத்தே தோன்றிய) ஐயத்தினைக் களைதற்குரிய கருவியாகும் எ-று.

௫. [1]நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும்.

**இளம்பூரணம்**

என்-எனின் மேல் தலைமகளை இத்தன்மையள் எனத் துணிந்த தலைமகன் குறிப்பறியாது சாரலுறின் பெருந்திணைப்பாற்படு மாகலானும் இக் கந்திருவநெறிக்கு ஒத்த உள்ளத்தாராதல் வேண்டு மாதலானும், ஆண்டு ஒருவரோடொருவர் சொல்லாடுதல் மரபன்மை யானும், அவருள்ளக் கருத்தறிதல் வேண்டுதலின், அதற்குக் கருவி யாய உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நாட்டம் இரண்டும் என்பது—தலைமகன் கண்ணும் தலைமகள் கண்ணும் என்றவாறு.[1]

---

1. நாட்டம் நாடுதல்; ஆராய்ந்து காணுதல். இச்சொல் ஈண்டு நாடிக் காண்டற்குக் கருவியாகிய கண் என்னும் பொருளில் ஆளப்பெற்றது. பிறரது டைள்ளக்குறிப்பினைத் தாம் நாடிக் காண்டற்கும் தமது உள்ளக் குறிப்பினை பிறர் நாடிக்கண்டுணர்தற்கும் கருவியாக அமைந்தவை கண்களாதலின் நாட்ட என்பது கண்ணிற்குக் காரணப் பெயராயிற்று. 'நாட்டம் இரண்டும்' என்பு இனைத்தெனவறிந்த சினைக்கிளவிக்குரிய உம்மையொடு தொடர்ந்த 'இரண்டும் என்னுந் தொகைச் சொல், தலைவன் தலைவி என்னும் இருவர் கண்களையு தனித்தனியே குறிக்கும் முறையிற் பொதுப்பட அமைந்திருத்தலால் ''நாட்ட இரண்டும் என்பது, தலைமகன்கண்ணும் தலைமகள்கண்ணும் என்றவாறு என்று உரைவரைந்தார் இளம்பூரணர்.

அறிவுடம்படுத்தற்கு என்பது—ஒருவர் வேட்கைபோல இருவர்க்கும் வேட்கை உளதாகுங் கொல்லோ எனக் கவர்த்து நின்ற[1] இருவரது அறிவினையும் ஒருப்படுத்தற்கு என்றவாறு.

கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்[2] என்பது-தமதுவேட்கையொடு கூட்டி ஒருவர் ஒருவருக்கு உரைக்குங் காமக்குறிப்புரையாம் என்றவாறு.

இதன் பொழிப்பு:—இருவர்க்குங் கவர்த்து நின்ற அறிவை ஒருப்படுத்தற் பொருட்டு வேட்கையொடுகூட்டிக் கூறுங் காமக் குறிப்புச் சொல் இருவரது நாட்டமாகும் என்றவாறு..

ஆகும் என்பதனை நாட்டம் என்பதனொடு கூட்டியுரைக்க. இதற்குச் செய்யுள்:—

*"பானலந் தண்கழிப் படறிந்து தன்னைமார்*
*நூல்நல நுண்வலையாற் கொண்டெடுத்த—கானற்*
*படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்*
*கடிபொல்லா என்னையே காப்பு."* (திணை மாலை நூற். ௩௨)

கண்ணினான் அறிப என்றவாறு. (ரு)

---

1. கவர்த்து நின்ற அறிவாவது, "நாம் அவரை விரும்புமாறுபோல அவரும் நம்மை விரும்புவாரோ விரும்பமாட்டாரோ?" எனக் காதலர் இருவருள்ளத்தும் ஐய நிலையில் இருதலைப்பட்டு நிகழும் அறிவு. இங்ஙனம் நிகழும் இருவரது அறிவினையும் ஒருப்படுத்தலாவது, 'நாம் அவரைக் காதலிப்பது போன்றே அவரும் நம்மைக் காதலிக்கின்றார்' என்னும் காதற் குறிப்பினை இருவரது அறிவும் தெளிந்து உடன்படுமாறு செய்தல்.

2. கூட்டியுரைத்தலாவது, உள்ளக் குறிப்பினை அதற்குக் காரணமாய் நிகழும் வேட்கையுடன் சேர்த்துணர்த்தல், இத்தகைய காமக் குறிப்புரையினைப் புலப்படுத்தற்குரிய கருவியாக அமைந்தன தலைவன் தலைவியாகிய இருவருடைய கண்களும் என்பது இந்நூற்பாவினால் அறிவுறுத்தப்பெறும் நுண்பொருளாகும்- இந்நுட்பத்தினை எளிய சொற்களால் தெளிவாகப் புலப்படுத்தும் முறையில் இளம்பூரணருரை அமைந்திருத்தல் உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

**நச்சினார்க்கினியம்**

இஃது அங்ஙனம் மக்களுள்ளாளெனத் துணிந்து நின்ற தலைவன் பின்னர்ப் புணர்ச்சி வேட்கை நிகழ்ந்துழித் தலைவியைக் கூடற்குக் கருதி உரை நிகழ்த்துங்காற் கூற்று மொழியான் அன்றிக் கண்ணான் உரை நிகழ்த்துமென்பதூஉம் அதுகண்டு தலைவியும் அக்கண்ணானே தனது வேட்கை புலப்படுத்திக் கூறுமென்பதூஉங் கூறுகின்றது; எனவே இது புணர்ச்சி நிமித்தமாகிய வழிநிலைக் காட்சி[1] கூறுகின்றதாயிற்று.

(இ-ள்) அறிவு-தலைவன் அங்ஙனம் மக்களுள்ளாளென்று அறிந்த அறிவானே; உடம்படுத்தற்கு - தலைவியைக் கூட்டத்திற்கு உடம்படுத்தற்கு; நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும்-தன்னுடைய நோக்கம் இரண்டானுங் கூட்டி வார்த்தை சொல்லும்; குறிப்புரை நாட்டம் இரண்டும் ஆகும்-அவ் வேட்கை கண்டு தலைவி தனது வேட்கை புலப்படுத்திக் கூறுங் கூற்றுந் தன்னுடைய நோக்கம் இரண்டானுமாம் (எ-று).

நாட்டம் இரண்டிடத்துங் கூட்டுக. உம்மை விரிக்க.[2] இங்ஙனம் இதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் 'புகுமுகம் புரிதல்'

1. இயற்கைப் புணர்ச்சியிற் காதலர் இருவரிடையே முதற்கண் நிகழும் காட்சி, ஒருவர் உள்ளக் குறிப்பினை மற்றவர் உணர்ந்து கொள்ளாத நிலைமைக்கண் விருப்புற்றுக் காணும் ஒருமருங்கு பற்றிய கேண்மையாதலின், அஃது ஒருதலைக் காமமாகிய கைக்கிளையின் பாற்படும். அவ்வாறன்றிக் காதலர் இருவர் கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒத்த நிலையில் நிகழும் காட்சி, அவ்விருவரும் மெய்யுறு புணர்ச்சி பெறுதற்கு நிமித்தமாகிப் பின்னர் நிகழ்தலின், அது வழிநிலைக் காட்சி எனப்படும்.

2. 'அறிவு உடம்படுத்தற்கு நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும்' எனவும், 'குறிப்புரையும் நாட்டம் இரண்டும் ஆகும்' எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கூறப்பட்டது. இவற்றுள், முதல் தொடர் தலைவனது நாட்டத்தின் செயலையும், இரண்டாந் தொடர் தலைமகளது நாட்டத்தின் செயலையும் குறித்தன. 'நாட்டம் இரண்டும்' என்ற தொடர் தலைவன் தலைவி என்னும் இரண்டிடத்தும் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

அறிவு உடம்படுத்தலாவது, தலைவனது அறிவாலே தலைவியைக் கூட்டத்திற்கு உடன்படச் செய்தல்; 'தலைவன் தன்னுடைய நோக்கம் இரண்டானும் கூட்டி வார்த்தை சொல்லும்; அவ்வேட்கை கண்டு தலைவி தனது வேட்கையைப் புலப்படுத்திக் கூறுங் குறிப்புரையும் தன்னுடைய நோக்கம் இரண்டினாலுமே ஆம்' என்பது இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருளாகும். 'குறிப்புரையும்' என உம்மை விரித்துப் பொருள் கூறப்பட்டது.

காதலர் இருவருள் ஒருவரது நோக்கு மற்றவரது நோக்கினை ஊன்றி நோக்குதலின் அவ்விருவர் நோக்கினையும் நாட்டம் என்ற சொல்லாற் குறித்தார் ஆசிரியர். நாட்டம்—நாட்டுதல்; ஊன்றுதல்.

*"ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்*
*வருவகை தானே வழக்கென மொழிப"* (பொருளியல். உசு)

என்பதனானும், இந்நூல் உலக வழக்கே நோக்குதலானும் அவர் பலவகைப்படுவர். அஃதாமாறு அந்தணர் அரசர் வணிகர் வினைஞர் என்னும் நால்வரொடும் அநுலோமர் அறுவரையும் கூட்டப் பதின்ம-ராவர். இவரை நால்வகை நிலத்தோடு உறழ நாற்பதின்மராவர். இவரையும் அவ்வந்நிலத்திற்குரிய ஆயர் வேட்டுவர் குறவர் பரத வர் என்னுந் தொடக்கத்தாரோடு கூட்டப் பலராவர். அவரையும் உயிர்ப் பன்மையான் நோக்க வரம்பிலராவர். (உ)

**நச்சினார்க்கினியம்**

இது, முற்கூறிய காமக்கூட்டத்திற்கு உரிய கிழவனுங் கிழத் தியும் எதிர்ப்படும் நிலனும் அவ்வெதிர்ப்பாட்டிற்குக் காரணமும் அங்ஙனம் எதிர்ப்படுதற்கு உரியோர் பெற்றியுங் கூறுகின்றது.

(இ - ள்) ஒன்றே வேறே என்று இரு பால்வயின்—இருவர்க் கும் ஓரிடமும் வேற்றிடமும் என்று கூறப்பட்ட இருவகை நிலத்தின் கண்ணும் ; ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் - உம்மைக் காலத்து எல்லாப் பிறப்பினும் இன்றியமையாது உயிரொன்றி ஒருகாலைக் கொருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால்வரை தெய்வத்தின் ஆணையாலே; [1]ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப - பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுப; மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே - அங்ஙனம் எவ்வாற்றானும் ஒவ்வாது தலைவன் உயர்ந்தோனாயினுங் கடியப்படா (எ - று).

---

1. 'ஒன்றே வேறே என்றிருபால் வயின்' எனவரும் இத் தொடரில் 'பால்' என்பதற்கு 'நிலம்' எனப் பொருள் கொண்டு நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரை, 'பால்' என்பதனை ஊழின் பெயராகக் கொண்டு வழங்கிய தொல்காப்பியனார் கருத்துக்கு மாறுபட்டதாகும். 'பால்' என்ற சொல்லுக்குப் பலபொருள் உண்டெனினும் இந்நூற்பாவில் அச்சொல் ஊழ் என்ற பொருளிலேயே ஆளப் பெற்றுள்ளதென்பது, 'ஒன்றே வேறே என்று இருபால் வயின் ஒன்றி உயர்ந்த பால்' எனப் பாலின் தொகை சுட்டி அவற்றுள் ஒன்றனைப் பிரித்துரைத்தலால் நன்கு புலனாகும். அன்றியும் 'ஒன்றே வேறே என்று இருபால்' எனத் தொல்காப்பியனார் கூறிய இருவகைப் பால்களுள் ஒன்றுவிக்கும் பாலினை ஆகூழ் (371), ஆகலூழ் (372) எனவும் வேறுபடுத்தும் பாலினைப் போகூழ் (371), இழவூழ் (372) எனவும் திருவள்ளுவர் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும். இந்நூற்பாவிற் சுட்டப்பட்ட 'ஒன்றியுயர்ந்த பால்' என்பதனை "உடனுறைவாக்குக உயர்ந்த பாலே" (புறம். 236) எனக் கபிலர் இப்பொருளில் எடுத்தாண்டுள்ளமையும் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

'என்றிரு பால்வயிற் காண்ப' எனப் பால் வன்பால் மென் பால் போல நின்றது. உயர்ந்த பாலை ''நோய் தீர்ந்த மருந்து'' போற் கொள்க. ஒரு நிலம் ஆதலை முற்கூறினார், இவ்வொழுக் கத்திற்கு ஓதியது குறிஞ்சிநிலமொன்றுமே ஆதற்சிறப்பு நோக்கி. வேறு நிலம் ஆதலைப் பிற்கூறினார், குறிஞ்சி தன்னுள்ளும் இரு வர்க்கும் மலையும் ஊரும் வேறாதலுமன்றித் திணை மயக்கத்தான் மருதம் நெய்தலென்னும் நிலப் பகுதியுள் ஒருத்தி அரிதின் நீங்கி வந்து எதிர்ப்படுதல் உளவாதலுமென வேறுபட்ட பகுதி பலவும் உடன்கோடற்கு ஒருநிலத்துக் காமப் புணர்ச்சிப் பருவத்தாளா யினாளை ஆயத்தின் நீங்கித் தனித்து ஓரிடத்து எளிதிற் காண்டல் அரிதென்றற்குப் 'பாலதாணையிற் காண்ப' என்றார். எனவே, வேற்று நிலத்திற்காயின் வேட்டை மேலிட்டுத் திரிவான் அங்ஙனந் தனித்துக் காணுங் காட்சி அருமையாற் பாலதாணை வேண்டு மாயிற்று.

> *''இவனிவ ளைம்பால் பற்றவும் இவளிவன்*
> *புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்*
> *காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா*
> *தேதில் சிறுசெரு உறுப மன்னோ*
> *நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்*
> *துணைமலர்ப் பிணையல் அன்னவிவர்*
> *மணமகி ழியற்கை காட்டி யோயே.''* (குறுந். 229)

இஃது ஒரூர் என்றதாம்.

> *''காமஞ் செப்பாது கண்டது மொழிமோ''* (குறுந். 2)

என்றது என் நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாதே சொல் என்றலிற் குறிஞ்சிநிலம் ஒன்றாயிற்று.

> *''இலங்கும் அருவித்தே இலங்கும் அருவித்தே*
> *வானின்று இலங்கும் அருவித்தே தானுற்ற*
> *சூள்பேணான் பொய்த்தான் மலை''*

என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்து கூறித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றலிற் குறிஞ்சியுள்ளும் மலை வேறாயிற்று.

'அங்கவை'[1] யும் பாடம். பன்னிரண்டாம் மெய்ப்பாடாகிய இருகையுமெடுத்தல் கூறவே முயக்கமும் உய்த்துணரக் கூறியவாறு காண்க. அம் மெய்ப்பாட்டியலுட் கூறிய மூன்று சூத்திரத்தையும் ஈண்டுக் கூறியுணர்க.

உரையிற் கோடலான் மொழிகேட்க விரும்புதலுங் கூட்டிய தெய்வத்தை வியந்து கூறுதலும் வந்துழிக் காண்க. (சு)

**ஆய்வுரை**

இது, மேற்குறித்தவாறு காதலர் இருவருள் ஒருவர் குறிப்பினை மற்றவர் குறிப்பு ஏற்றுக் கொண்ட பின்னர் நிகழ்வதே அன்பின் ஐந்திணைக் களவொழுக்கமாம் என்பது உணர்த்துகின்றது.

(இ-ள்.) ஒருவரது கண்ணின் குறிப்பு மற்றவர்து கண்ணினாற் குறிக்கப்பட்ட உள்ளக் குறிப்பினை உள்ளவாறு ஏற்றுணரவல்லதாயின் பின் கூறப்படுவன நிகழும் என்று கூறுவர் உள நூலாசிரியர் எ - று.

'ஆங்கவை' என்றது, வேட்கை முதலாகச் சாக்காடு ஈறாகப் பின்னர்க் கூறப்படும் உணர்வு நிலைக்ளை.

௭. பெருமையும் உரனும் ஆடூஉ மேன.

**இளம்பூரணம்**

என் — எனின், இது தலைமகற்கு உரியதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெருமை யாவது—பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது—அறிவு.

---

1. இந்நூற்பாவில் வரும் 'அவை' என்னும் சுட்டு, கண்ணினால் வரும் குறிப்புரையினைச் சுட்டியதெனக் கொண்டார் இளம்பூரணர். 'அவை' என்பது 'புகுமுகம் புரிதல்' முதலாக 'இருகையுமெடுத்தல்' ஈறாகப் பின்னர் மெய்ப்பாட்டியலிற் கூறப்படும் மெய்ப்பாடு பன்னிரண்டனுள் 'பொறிநுதல் வியர்த்தல் முதலிய பதினொன்றினையும் சுட்டியதெனக் கொண்டார் நச்சினார்க்கினியர். இளம்பூரணர் கூறும் கண்ணினால் வரும் குறிப்புரை மேலைச் சூத்திரத்தில் 'நாட்டமிரண்டும் கூட்டியுரைக்கும் குறிப்புரை' என விளக்கப் பெற்றமையின் அதனையே இச் சூத்திரமும் சுட்டியதெனக் கொள்ளுதல் கூறியது கூறல் என்னும் குற்றத்தின் பாற்படுமாதலானும், இடம் வரையாது நூற்பாவில் வரும் 'அவை' என்னும் சுட்டு, அதன் அணித்தாக முன்னோபின்னோவுள்ளவற்றைச் சுட்டுவதன்றி இவ்வியலின் மூன்றாம் இயலாகிய மெய்ப்பாட்டியலில் விரித்துரைக்கப்படும் பன்னிரண்டு மெய்ப்பாடுகளுள் பதினொன்றினை மட்டும் வரைந்து சுட்டுதல் இயலாதாதலானும் உரையாசிரியர்கள் இருவரும் கூறும் உரைகள் தொல்காப்பியனார் கருத்தினைப் புலப்படுத்துவனவாக அமையவில்லை.

இவை யிரண்டும் ஆண்மகனுக்கு இயல்பு என்றவாறு.[1]

இதனானே மேற்சொல்லப்பட்ட தலைமகளது வேட்கைக் குறிப்புக் கண்ட தலைமகன், அந்நிலையே புணர்ச்சியை நினையாது, வரைந்து எய்தும் என்பது பெறுதும்.

*''சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ*
*நன்றின்பால் உய்ப்ப தறிவு''* (குறள். ௪௨௨)

என்பவாகலின். தலைமகன் இவ்வாறு கூறியதற்குச் செய்யுள் :—

*'வேயெனத் திரண்டதோள்'* (கலித். ௫௭)

*''உறுகழி மருங்கின்''* (அகம். ௨௩௰)

இவை உள்ளப்புணர்ச்சியான் வரைதல் வேண்டிப் பாங்கற்கு உரைத்தன. (எ)

**நச்சினார்க்கினியம்**

இத்துணை மெய்யுறு புணர்ச்சிக்கு உரியனவே கூறி[2] இனி உள்ளப்புணர்ச்சியே நிகழ்ந்துவிடும் பக்கமும் உண்டென்பதூஉம் இவ்விருவகைப் புணர்ச்சிப் பின்னர்க் களவின்றி வரைந்து கோடல் கடிதில் நிகழ்தலுண்டென்பதூஉம் உணர்த்துகின்றது.

(இ-ள்.) பெருமையும் - அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப் பகுதியும்; உரனும் - கடைப்பிடியும் நிறையுங் கலங்காது துணிதலும் முதலிய வலியின் பகுதியும்; ஆடூஉ மேன-தலைவன் கண்ண (எ-று).

இதனாலே உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்து வரைந்து கொள்ளும் உலக வழக்கும் மெய்யுறுபுணர்ச்சி நிகழ்ந்துழியுங் களவு நீட்டியாது வரைந்துகோடலும் உள்ளஞ் சென்றுழியெல்லாம் நெகிழ்ந்தோடாது ஆராய்ந்து ஒன்று செய்தலும் மெலிந்த உள்ளத்தானாயுந் தோன்-றாமன் மறைத்தலுந் தீவினையாற்றிய பகுதியிற்சென்ற உள்ளம் மீட்டலுந் தலைவற்கு உரியவென்று கொள்க.

---

1. அஞ்சுவதஞ்சுதலாகிய பெருமையும் மனத்தைச் சென்றவிடத்தாற் செல்ல விடாது நன்றின்பாற் செலுத்தும் நல்லறிவும் ஆகிய இவையிரண்டும் ஆண்மகனுக்குரிய சிறப்பியல்பாகும்.

2. இத்துணையும் கூறப்பட்டன உள்ளப்புணர்ச்சிக்கேயுரியவாய் மெய்யுறு புணர்ச்சிக்கு நிமித்தமாவனவேயன்றி 'மெய்யுறு புணர்ச்சிக்கு உரியனவே' எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

"சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு" (குறள். 422)

என வரும்.

பெருமை நிமித்தமாக உரன் பிறக்கும்; அவ் வுரனான் மெய்யுறுபுணர்ச்சி இலனாதலும் உரியனென இதுவும் ஒரு விதி கூறிற்று. தலைவிக்கு மெய்யுறுபுணர்ச்சி நடக்கும் வேட்கை நிகழாமைக்குக் காரணம் மேற் கூறுப.[1] இனி இயற்கைப்புணர்ச்சி இடையீடுபட்டுழி இடந்தலைப்பாட்டின்கண் வேட்கை தணியாது நின்று கூடுபவென்றும், ஆண்டு இடையீடுபட்டுழிப் பாங்கனாற் கூடுபவென்றும், உரைப்போரும் உளர்[2]; அவர் அறியாராயினார்; என்னை? அவ்விரண்டிடத்தும் இயற்கைப் புணர்ச்சிக்கு உரிய மெய்ப்பாடுகள் நிகழ்ந்தே கூடவேண்டுதலின் அவற்றையும் இயற்கைப் புணர்ச்சியெனப் பெயர் கூறலன்றிக் காமப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலும் என ஆசிரியர் வேறு வேறு பெயர் கூறாரென்றுணர்க.

## ஆய்வுரை

இது, தலைமகற்குரியதோர் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்.) தன்னைத்தான் கட்டுப்படுத்தியொழுகும் பெருமையும் சென்ற விடங்களில் மனத்தைச் செல்லவிடாது தீமையினின்றும் நீக்கி நன்றின்பாற் செலுத்தும் அறிவுத் திண்மையும் தலைமகனிடத்தன எ-று.

அ. அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்[3]
நிச்சமும்[4] பெண்பாற் குரிய என்ப.

---

1. தலைவிக்கு மெய்யுறு புணர்ச்சி நடக்கும் வேட்கை நிகழாமைக்குக் காரணம் இவ்வியலில் அடுத்து வரும் நூற்பாவிற் கூறப்படும்.

2. இங்ஙனம் கூறுவோர் இளம்பூரணர். இயற்கைப் புணர்ச்சி முதலாகச் சொல்லப்பட்ட நான்கும் உள்ளப்புணர்ச்சிக்கும் அதன்வழி நிகழும் மெய்யுறு புணர்ச்சிக்கும் பொதுவாகிய இடங்களாதலின், இயற்கைப் புணர்ச்சியிலேயே மெய்யுறு புணர்ச்சி நிகழ்தல் வேண்டுமென்னும் யாப்புறவில்லையென்க.

3. முந்துறுதல் - முற்பட்டுத் தோன்றுதல்; உள்ளத்துத் தோன்றிய வேட்கையை மேலெழவொட்டாது பிற்படுத்தித் தானே முற்பட்டு நிற்றல்.

'முந்துறுத்த' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம்.

4. நிச்சமும் - நாள்தோறும். நித்தம் நிச்சம் எனத் தகரத்திற்குச் சகரம் போலியாய் வந்தது. நித்தம்-நாள்.

**இளம்பூரணம்**

என்—எனின், இது தலைமகட்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அச்சமும் நாணும் பேதைமையும் இம்மூன்றும் நாடோறு முந்துறுதல் பெண்டிர்க்கு இயல்பு என்றவாறு.

எனவே, வேட்கையுற்றுழியும் அச்சத்தானாதல் நாணானாதல் மடத்தானாதல் புணர்ச்சிக்கு இசையாது நின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது போந்தது. இவ்வாறு இருவரும் உள்ளப்புணர்ச்சி-யால் நின்று வரைந்தெய்தி மெய்யுறும். இதற்குச் செய்யுள் :

*''தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்*
*தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த*
*பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு*
*முல்லையுந் தாய பாட்டங்கால் தோழிநம்*
*புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்*
*ஒருங்கு விளையாட அவ்வழி வந்த*
*குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை*
*முற்றிழை ஏஎர் மடநல்லாய் நீயாடுஞ்*
*சிற்றில் புனைகோ சிறிதென்றான் எல்லாநீ*
*பெற்றேம்யா மென்று பிறர்செய்த இல்லிருப்பாய்*
*கற்ற திலைமன்ற காண்என்றேன் முற்றிழாய்*
*தாதுசூழ் கூந்தல் தகைபெயத் தைஇய*
*கோதை புனைகோ நினக்கென்றான் எல்லாநீ*
*ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்*
*பேதையை மன்ற பெரிதென்றேன் மாதராய்*
*ஐய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்*
*தொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்*
*செய்புறம் நோக்கி இருத்துமோ நீபெரிதும்*
*மையலை மாதோ விடுகென்றேன் தையலாய்*
*சொல்லிய வாறெல்லாம் மாறுமாறு யான்பெயர்ப்ப*
*அல்லாந்தான் போலப் பெயர்ந்தான் அவனைநீ*
*ஆயர் மகளிர் இயல்புரைத் தெந்தையும்*
*யாயும் அறிய உரைத்தீயின் யானுற்ற*
*நோயுங் களைகுவை மன்.''* (கலித். கககக)

இது தலைமகள் உள்ளப்புணர்ச்சியின் உரிமை பூண்டிருந்தவாறும், வரைந்தெய்தக் கூறலுற்றவாறும் காண்க.

**நச்சினார்க்கினியம்**

இது, மேலதே போல்வதொரு விதியை உள்ளப்புணர்ச்சி பற்றித் தலைவிக்குக் கூறுகின்றது.

(இ-ள்.) **அச்சமும்** - அன்பு காரணத்திற்றோன்றிய உட்கும்; **நாணும்**-காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப்படுவதோர் உள்ளவொடுக்கமும்; **மடனும்** - செவிலியர் கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமையும்; **முந்துறுத்த**[1]-இம்மூன்றும் முதலியன; **நிச்சமும்**[2] பெண்பாற்கு உரிய **என்ப** - எஞ்ஞான்றும் பெண்பாலார்க்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் (எ-று).

'முந்துறுத்த' என்றதனாற் கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், நிறுப்பதற்கு நெஞ்சுண்டாம் நிறையுங் கொள்க. மடன் குடிப் பிறந்தோர் செய்கையாதலின் அச்சமும் நாணும்போல மெய்யுறு புணர்ச்சியை விலக்குவதாம். தலைவி உடையளெனவே தலைவன் பெருமையும் உரனும் உடையனாய் வேட்கைமீதூரவும் பெறு மாயிற்று. இவை இவட்கு என்றும் உரியவாயின் இயற்கைப் புணர்ச்சிக்கு உரியளல்லளாமாயினும் இவ்விலக்கணத்தில் திரியாது நின்றேயும் புணர்ச்சிக்கு உரியளாமென்றற்குப் பன்னிரண்டு மெய்ப்-பாடுங் கூறினார். இவற்றானே, புணர்ச்சி பின்னர்ப் பெறுதுமெனத் தலைவனைப்போல ஆற்றுவாளாயிற்று. இருவர் கண்ணுற்றுக் காதல் கூர்ந்த வழியெல்லாங் கந்தருவமென்பது வேத முடிபாதலின் இவ்-வுள்ளப்புணர்ச்சியுங் கந்தருவமாம். ஆதலான் அதற்கு ஏதுவாகிய பெருமையும் உரனும் அச்சமும் நாணும் போல்வன கூறினார். இச் சூத்திரம் இரண்டும் நாடக வழக்கன்றிப் பெரும்பான்மை உலகியல் வழக்கே கூறலின் இக்கந்தருவம்[3] இக் களவியற்குச் சிறப்பின்று, இனிக் கூறுவன மெய்யுறுபுணர்ச்சி பற்றிய களவொழுக்கமாதலின்.(அ)

---

1. முந்துறுத்த -முதலியன. 'முந்துறுதல்' என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். 2. நிச்சமும் - நித்தமும்; எந்நாளும்; தகர சகரப் போலி. 3. இக்கந்தருவம் - உள்ளப் புணர்ச்சியாகிய கந்தருவம்.

**ஆய்வுரை**

இது, தலைமகட்குரியதோர் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்.) தனது நிறைகாவலுக்கு இடர் நேருமோவென்னும் அச்சமும் பெண்ணியல்பாகிய நாணமும், தான் மேற்கொண்ட கொள்-கையை நெகிழ விடாமையாகிய மடனும் முற்பட்டுத் தோன்றுதல் எக்காலத்தும் பெண்டிர்க்குரிய இயல்பாகும் என்பர் ஆசிரியர் எ-று.

எனவே, இயற்கைப் புணர்ச்சியில் எதிர்ப்பட்ட தலைமகனும் தலைமகளும் தம்மைக் காவாது வேட்கை மீதூர்ந்த நிலையிற்புனலோடும் வழிப்புற் சாய்ந்தாற்போலத் தமக்குரிய இப்பண்புகளை நெகிழ-விடுதல் கூடாமையின், தாம் எதிர்ப்பட்ட முதற் காட்சியிலே மெய்யுறு புணர்ச்சிக்கு உடன்படாது உள்ளப்புணர்ச்சியளவே யொழுகி மணந்து கொண்ட பின்னரே கூடுதல் முறையாகும் என்பது இளம்பூரணர் கருத்தாகும். முந்துறுதல்-முற்பட்டுத் தோன்றுதல்; நிச்சமும்-நித்-தமும்; நாள்தோறும்.

சூ. வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

**இளம்பூரணம்**

என்—எனின், மெய்யுறுபுணர்ச்சி நிகழுங்காலம் உணர்த்துதல் நுதலிற்று. மேல், ''பெருமையும் உரனும் ஆடூஉ மேன'' எனவும்,

*''அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்*
*நிச்சமும் பெண்பாற் குரிய என்ப''* (தொல். கள. அ)

எனவும் ஓதியவதனான் உள்ளஞ் சென்றவழியும் மெய்யுறுபுணர்ச்சி வரைந்தெய்தி நிகழ்ப என்றாராம். அவ்வழிச் சாக்காடெல்லையாகிய மெய்ப்பாடு வரின் மெய்யுற்றுப் புணரப்பெறு மென்பது உணர்த்திற்று.

(இ - ள்.) வேட்கை முதலாகச் சாக்காடு ஈறாக ஓதப்பட்ட காமச் சிறப்புடையனவாற்றாற் களவு ஆமென்று சொல்லுவர் எ-றீ.

ஆனும் ஆமும் எஞ்சி நின்றன. இவற்றை அவத்தை[1] யென்ப. அஃதேல், அவை பத்துளவன்றே; ஈண்டுரைத்தன ஒன்பதாலெனின், காட்சி விகற்பமுங் கூறினார். அஃது உட்படப் பத்தாம், காட்சி விகற்பமாகிய ஐயமுந் துணிவும் முதலது; வேட்கை இரண்டாவது. என்று கொள்க.

வேட்கையாவது—பெறல்வேண்டு மென்னும் உள்ள நிகழ்ச்சி.

ஒருதலையுள்ளுதலாவது—இடைவிடாது நினைத்தல்.

மெலிதலாவது—உண்ணாமையான் வருவது

ஆக்கஞ்செப்பலாவது—உறங்காமையும் உறுவ ஓதலும் முத-லாயின கூறுதல்.

நாணுவரையிறத்தலாவது—நாண் நீங்குதல்.

நோக்குவ எல்லாம் அவையே போற லாவது—தன்னாற் காணப் பட்டன எல்லாம் தான் கண்ட உறுப்புபோலுதல்.

மறத்தல்—பித்தாதல். மயக்கமாவது—மோகித்தல். சாக்காடு—சாதல். இவற்றுள் சாதல் பத்தாம் அவத்தையாதலால், ஒழிந்த எட்டுங் களவு நிகழ்தற்குக் காரணமாம் என்று கொள்க. இது தலைமகட்கும் தலைமகற்கும் ஒக்கும். இவற்றிற்குச் செய்யுள் வந்தவழிக் காண்க. (க)

**நச்சினார்க்கினியம்**

இதுமுதலாகக் களவிலக்கணங் கூறுவார் இதனான் இயற் கைப் புணர்ச்சிமுதற் களவு வெளிப்படுந்துணையும் இருவர்க்கும் உள்வாம் இலக்கணம் இவ்வொன்பதுமெனப் பொதுவிலக்கணங் கூறுகின்றார்.

(இ - ள்.) ஒருதலைவேட்கை - புணராத முன்னும் புணர்ந்த பின்னும் இருவர்க்கும் இடைவிட்டு நிகழாது ஒரு தன்மைத்

---

1. அவத்தை - உணர்வுநிலை. காட்சி விகற்பமாகிய ஐயமும் துணிவும் முதலவத்தை எனக் கொண்டு, அதனுடன் வேட்கை முதலிய ஒன்பதினையும் கூட்ட அவத்தை பத்தும் இங்குக் கூறப்பட்டன என்பதும், சாதல் பத்தாம் அவத்தை என்பதும், வேட்கை முதலிய எட்டும் களவு நிகழ்தற்குக் காரணமாம் என்பதும், இவ்வுணர்வு நிலைகள் தலைவன் தலைவியாகிய இருவர்க்கும் ஒக்கும் என்பதூஉம் இளம்பூரணர் கருத்தாகும்.

தாகி நிலைபெறும் வேட்கை; ஒருதலை உள்ளுதல் - இடைவிடாது ஒருவர் ஒருவரைச் சிந்தியாநிற்றல்; மெலிதல் - அங்ஙனம் உள்ளுதல் காரணத்தான் உடம்பு வாடுதல்; ஆக்கஞ் செப்பல் - யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக் கோடல்; நாணுவரையிறத்தல் - ஆற்றுந் துணையும் நாணி அல்லாதவழி அதன்வரையிறத்தல்; நோக்குவ எல்லாம் அவையே போறல் - பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாந் தம் மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்றாரெனத் திரியக்கோடல்; மறத்தல் - விளையாட்டு முதலியவற்றை மறத்தல்; மயக்கம் - செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல்; சாக்காடு - மடலேறுதலும் வரைபாய்தலும் போல்வன கூறல்; என்று அச்சிறப்பு உடை மரபினவை களவு என மொழிப - என்று சொல்லப்பட்ட அந்தச் சிறப்புடைத்தான முறையினையுடைய ஒன்பதுங் களவொழுக்கமென்று கூறுப (எ - று).

இயற்கைப் புணர்ச்சிக்கு இயைபுடைமையின் வேட்கை முற்கூறினார்.

சேட்படுத்தவழித் தலைவன் அதனை அன்பென்று கோடலும், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கியவழித் தலைவி அதனை அன்பென்று கோடலும் போல்வன ஆக்கஞ்செப்பல். தலைவன் பாங்கற்குந் தோழிக்கும் உரைத்தலுந், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும் போல்வன நாணுவரை யிறத்தல். களவதிகாரமாதலின் அவையென்னுஞ் சுட்டுக் களவை உணர்த்தும். கையுறைபுனைதலும் வேட்டைமேலிட்டுக் காட்டுத்திரிதலுந் தலைவற்கு மறத்தல்; கிளியும் பந்தும் முதலியன கொண்டு விளையாடுதலைத் தவிர்ந்தது தலைவிக்கு மறத்தல். சாக்காடாவன :

*''அணிற்பல் அன்ன கொங்குமுதிர் முண்டகத்து*
*மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப*
*இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயா கியரெங் கணவனை*
*யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே.''* (குறுந். சக)

''நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்[1]
பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம்
நயனின் மாக்கள் போல வண்டினஞ்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
மையின் மானினம் மருளப் பையென
வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப
ஐயறி வகற்றுங் கையறு படரோடு
அகலிரு வானம் அம்மஞ் சீனப்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை
காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக
ஆரஞர் உறுநர் அருநிறஞ் சுட்டிக்
கூரெஃ கெறிஞரின் அலைத்தல் ஆனாது
எள்ளற இயற்றிய நிழல்காண் மண்டிலத்
துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்து
இதுகொல் வாழி தோழி யென்னுயிர்
விலங்குவெங் கடுவளி யெடுப்பத்
துளங்குமரப் புள்ளில் துறக்கும் பொழுதே.' (அகம்.எக)

இவை தலைவி சாக்காடாயின. மடலேறுவலெனக் கூறு தன் மாத்திரையே தலைவற்குச் சாக்காடு. இவை சிறப்புடைய வெனவே களவு சிறப்புடைத்தாம். இவை கற்பிற்கு ஆகா. இருவர்க்கும் இவை தடுமாறி வருதலின் மரபினவையெனப் பன்மை கூறினார். (க)

## ஆய்வுரை

இது, களவொழுக்கத்தில் காதலருள்ளத்தே நிகழும் உணர்வு நிலைகளை விரித்துரைக்கின்றது.

(இ-ள்.)[1] ஒருவரையொருவர் தமக்குரியவராகப் பெறுதல் வேண்டும் என்னும் உறுதியான வேட்கையும், இடைவிடாது நினைத்-

1. ஒரு தன்மை அல்லது உறுதி என்ற பொருளில் இந்நூற்பாவில் வந்துள்ள 'ஒருதலை' என்பதனை 'ஒருதலை உள்ளுதல்' எனப் பின்வரும் உள்ளுதற்கு அடையாக்கி, 'இடைவிடாது நினைத்தல்' எனப் பொருள் கொண்டார் இளம்பூரணர். இதனை இடைநிலை விளக்காகக் கொண்டு 'ஒருதலை வேட்கை' என முன்னுற்ற வேட்கைக்கும் அடையாக்கி 'இடைவிட்டு நிகழாது ஒரு தன்மைத்தாகி நிலை பெறும் வேட்கை' எனப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர்.

தலும், உண்ணாமையால் உண்டாகும் உடல்மெலிவும், தமக்கு ஆக்கமாவன இவையெனத் தமக்குள்ளே கூறிக்கொள்ளுதலும், நாணத்தின் எல்லை கடத்தலும், காண்பனவெல்லாம் தம்மாற் காதலிக்கப்பட்டாரது உருவாகவே தோன்றுதலும், தம்மை மறத்-தலும், மனமயக்கம் உறுதலும், உயிர் நீங்கினாற் போன்று உயிர்ப்-படங்குதலும் ஆகிய இவை ஒன்பதும் உயிரோரன்ன செயிர்தீர் நட்பாகிய காமவுணர்வின் சிறப்பினைப் புலப்படுத்தும் உணர்வு நிலைகளாதலின் இவற்றைக் களவொழுக்கத்திற்குச் சிறந்தனவாகக் கூறுவர் ஆசிரியர் எ-று.

வேட்கை முதல் சாக்காடீறாக இங்குச் சொல்லப்பட்ட உணர்வு நிலைகள் காதலர் இருவர்பாலும் தோன்றியபின்னரே மெய்யுறு புணர்ச்சி நிகழும் என்பதாம். காட்சி விகற்பமாகிய ஐயமும் துணி-வும் முதலாவது உணர்வுநிலை. வேட்கை இரண்டாவது உணர்வு நிலை. காட்சி விகற்பமாகிய முதலாவது உணர்வுநிலையுடன் வேட்கை முதலிய இவ்வொன்பது உணர்வு நிலைகளையும் சேர்க்க காதலர் இருவரிடையே நிகழும் உணர்வு நிலைகளாகிய அவத்தை கள் பத்தாகும் என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

௧௦. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனி உறாஅ
அந்நிலை யறிதல் மெலிவுவிளக் குறுத்தல்
தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்று
இன்னவை நிகழும் என்மனார் புலவர்.

**இளம்பூரணம்**

என்—எனின், இஃது இயற்கைப் புணர்ச்சிக்குரியதொரு திறன் உணர்த்துதல் நுதலிற்று.

தனியினால்[1] தலைமகளை யெதிர்ப்பட்ட தலைமகன் தனது பெருமையும் அறிவும் நீக்கி வேட்கை மீதூரப் புணர்ச்சி வேண்டினா-னாயினும், தலைமகள்மாட்டு நிற்கும் அச்சமும் நாணும் மடனும் நீக்குதலும் வேண்டுமன்றே,[2] அவை நீங்குதற்பொருட்டு இவை-

1. தனியினால் - பிறர் யாரும் இல்லாத தனிமைக்கண்.
2. 'நீங்குதலும் வேண்டுமன்றே' என்றிருத்தல் பொருத்தம்.

யெல்லாம் நிகழுமென்பது. உலகத்துள்ளார் இலக்கணமெல்லாம் உரைக்கின்றா ராகலின், இவ்வாசிரியர் உரைக்கின்றவாற்றான் நிகழ்தல் பெரும்பான்மையாகவும்,

''சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி'' (தொல். களவியல்-கக) என ஓதுதலின், இவையெல்லாம் நிகழ்தலின்றிச் சிறுபான்மை வேட்கை மிகுதியாற் புணர்ச்சி கடிதின் முடியவும் பெறுமெனவுங் கொள்க.[1]

(இ - ள்.) முன்னிலையாக்கல் என்பது -காமக்குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கையாற் சாரநினைத்தவழித் தலைமகளும் வேட்கைக் குறிப்புடையா ளாயினும் குலத்தின் வழிவந்த இயற்கை-யன்மையான் நாணமும் அச்சமும் மீதூர அக்குறிப்பில்லாதாரைப் போல் நின்றவழி அவளை முன்னிலையாகப் படுத்துச் சில கூறுதல்.

சொல்வழிப்படுத்த லாவது — தான் சொல்லுகின்ற சொல்லின் வழி அவள் நிற்குமாறு படுத்துக் கூறுதல்.

நன்னய முரைத்தலாவது — தலைமகளினது நலத்தினை-யுரைத்தல்.

நகைநனி யுறாஅ அந்நிலை யறித லாவது — தலைமகன் தன் நன்னய முரைத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வால் புறந்தோன்றும் முறுவற்குறிப்பு மிக்குத்-தோன்றா அந்நிலையினைத் தலைவன் அறிதல்.

மெலிவு விளக்குறுத்த லாவது — தலைவன் அகத்துறும் நோயாற் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பான் எடுத்துக் கூறலும். உதாரணம் வந்துழிக் காண்க.

குறிப்பாவன: புறத்துறுப்பா யவர்க் கின்றியமையாதன.

தன்னிலை யுரைத்த லாவது—அப் புறநிகழ்ச்சியின் பொலிவிழவைக் கண்ட தலைமகள்மாட்டுத் தலைவன் தன் உள்ள வேட்கை மீதூர் வினை நிலைப்படக் கூறுதல்.

---

1. ஆசிரியர் தொல்காப்பியனார் உலகத்திலுள்ள தலைமக்களியல்பெல்லாம் உணர்ந்துரைக்கின்றாராதலின், 'முன்னிலையாக்கல் முதலிய இவை தலைமக்கள் பால் நிகழ்தல் பெரும்பான்மையெனவும் இவை நிகழாது தலைமக்களிருவரும் சொல்லிய நுகர்ச்சி வல்லே பெறுதல் சிறுபான்மையெனவும் கொள்க' என இளம்பூரணர் தரும் விளக்கம் மிகவும் ஏற்புடையதாகும்.

*"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்"*
என்னும் நற்றிணைப்பாட்டுள்,

*"காமங் கைம்மிகில் தாங்குதல் எளிதோ*
*... ... ...*
*... ... கடைமணி சிவந்தநின்*
*கண்ணே கதவ அல்ல"* (நற்றிணை-௩௯)

எனத் தன்னிலை யுரைத்தவாறு காண்க.

தெளிவு அகப்படுத்த லாவது—தலைவன் முன்னிலையாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப் புணர்ச்சியினை விழைந்து நின்றனாக, அப்புணர்ச்சியினைக் கூறுவார் முன்னம் ஒத்த பண்புடைமை உள்ளத்து இருவர் மாட்டும் வேண்டுதலின் தலைமகள் பண்பினைத் தலைவன் அறிந்து அத்தெளிவைத் தன்னகப்படுத்துத் தேர்தல்.

*"யாயும் ஞாயும் யாரா கியரோ"*
என்னும் குறுந்தொகைப்பாட்டுள்,

*"அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே"* (குறுந்-௪0)

என இயற்கைப்புணர்ச்சி முன்னர்த் தலைவன் தலைவியர் உள்ளம் ஒத்த பண்பினைக் கூறியவாறு காண்க.

இதுகாறும் இயற்கைப்புணர்ச்சிக்குரிய திறன்கூறி, மேல் இயற்கைப் புணர்ச்சி நிகழுமாறு கூறுகின்றார். அஃதேல், தன்னிலை யுரைத்தலைத் தெளிவகப் படுத்தலுடன் இணைத்து மெய்யுறுபுணர்ச்சி யாக்கிய பின்னர்த் தோன்றுந் துறையாகப் படுத்தாலோ எனின் அது சான்றோர் வழக்கின்றாதலானும், மெய்யுறுபுணர்ச்சி முன்,

*"மெய்தொட்டுப் பயிறல்"* (களவியல்-கக)

முதலியன யாண்டும் நிகழ்ந்தே தலைவிக்கு மெய்யுறுபுணர்ச்சி நிகழுமாதலானும் அஃதன்றென்க. (கo)

**நச்சினார்க்கினியம்**

இஃது இன்பமும் இன்ப நிலையின்மையுமாகிய புணர்தல் பிரிதல் கூறிய முறையானே இயற்கைப் புணர்ச்சி முற்கூறி அதன்

பின்னர்ப் பிரிதலும் பிரிதனிமித்தமுமாய் அத்துறைப்படுவன வெல்லாந் தொகுத்துத் தலைவர்க்கு உரியவென்கிறது.[1]

(இ - ள்.) முன்னிலையாக்கல் - முன்னிலையாகாத வண்டு, நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல்; சொல்வழிப் படுத்தல் - அச் சொல்லாதவற்றைச் சொல்லுவனபோலக் கூறுதல்; நன்னயம் உரைத்தல் - அவை சொல்லுவனவாக அவற்றிற்குத்தன் கழிபெருங்காதல் கூறுவானாய்த் தன்னயப்புணர்த்துதல்; நகைநனி உறாஅது அந்நிலை அறிதல் - தலைவி மகிழ்ச்சி மிகவும் எய்தாமற் புணர்ச்சிக்கினமாகிய பிரிவுநிலைகூறி அவள் ஆற்றுந்தன்மை அறிதல்; மெலிவு விளக்குறுத்தல்-இப்பிரிவால் தனக்குள்ள வருத்தத்தைத் தலைவி மனங்கொள்ளக் கூறுதலுந் தலைவி வருத்தங் குறிப்பான் உணர்ந்து அதுதீரக் கூறுதலும்; தம் நிலை உரைத்தல் - நின்னொடு பட்ட தொடர்ச்சி எழுமையும் வருகின்றதெனத் தமதுநிலை உரைத்தல்; தெளிவு அகப்படுத்தல் - நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேன், பிரியின் அறனல்லது செய்கேனாவலெனத் தலைவி மனத்துத் தேற்றம்படக் கூறுதல்; என்று இன்னவை நிகழும் என்மனார் புலவர் - என்று இக்கூறிய ஏழும் பயின்றுவரும் இயற்கைப் புணர்ச்சிப்பின் தலைவற்கு (எ - று).

முற்கூறிய மூன்றும் நயப்பின்கூறு. இஃது அறிவழிந்து கூறாது தலைவி கேட்பது காரியமாக வண்டு முதலியவற்றிற்கு உவகைபற்றிக் கூறுவது. ‘நன்னயம்’ எனவே எவரினுந் தான் காதலனாக உணர்த்தும். இதன்பயன் புணர்ச்சியெய்தி நின்றாட்கு இவன் எவ்விடத்தான் கொல்லோ இன்னும் இது கூடுங்கொல்லோ இவன் அன்புடையன் கொல்லோ என நிகழும் ஐயநீங்குதல். இது பிரிதனிமித்தம். இவன் பிரியாவிடின் இவ்வொழுக்கம் புறத்தார்க்குப்

---

1. ‘முன்னிலையாக்கல்’ முதலாக இங்குக் கூறப்பட்டவை இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்வன என்பது இளம்பூரணர் கருத்து. இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமாய் அத்துறைப்படுவன எல்லாந் தொகுத்துத் தலைவற்குரியனவாக இந்நூற்பாவில் கூறப்பட்டன என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இக்கருத்துக்கு ஏற்பச் சொற்களை நலிந்தும் வலிந்தும் இச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை சூத்திரக் கிடக்கை முறைக்கு ஏற்புடையதன்றாம். இந்நூற்பாவுக்கும் இளம்பூரணர் தரும் கருத்தும் பொருள் விளக்கமுமே தொல்காப்பியனார் கருத்தினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளன.

புலனாம்; ஆண்டு யாம் இறந்துபடுதலின் இவனும் இறந்துபடுவனெனக் கருதப் பிரிவென்பதும் ஒன்று உண்டெனத் தலைவன் கூறுதல். அவட்கு மகிழ்ச்சியின்றென்பது தோன்ற 'நகை நனியுறா' தென்றார். 'புணர்தல் பிரிதல்' (தொல். பொ. 14) எனக் கூறிய சூத்திரத்திற் புணர்தலை முற்கூறி ஏனைப் பிரிவை அந்நிலையென்று ஈண்டுச் சுட்டிக் கூறினார். இதனால் தலைவிக்குப் பிரிவச்சங் கூறினார். தண்ணீர் வேட்டு அதனை உண்டு உயிர்பெற்றான் இதனான் உயிர் பெற்றேமெனக் கருதி அதன் மாட்டு வேட்கை நீங்காதவாறு போலத் தலைவிமாட்டு வேட்கை யெய்தி அவளை அரிதிற்கூடி உயிர்பெற்றானாதலின், இவளான் உயிர்பெற்றே மென்றுணர்ந்து, அவண்மேல் நிகழ்கின்ற அன்புடனே பிரியுமாதலின் தலைவற்கும் பிரிவச்சம் உளதாயிற்று. இங்ஙனம் அன்பு நிகழவும் பிறர் அறியாமற் பிரிகின்றேனென்பதனைத் தலைவிக்கு மனங்கொள்ளக் கூறுமென்றற்கு 'விளக்குறுத்த'லென்றார். இதனானே வற்புறுத்தல் பெற்றாம். அஃது அணித்து எம்மிடமென்றும் பிறவாற்றானும் வற்புறுத்தலாம். மேலனவும் பிரிதனிமித்தம்.

உ-ம் : *"கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைத் தும்பி*
*காமஞ் செப்பாது கண்டது மொழிமோ*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்*
*செறியெயிற் றரிவை கூந்தலின்*
*நறியவும் உளவோ நீயறியும் பூவே."* (குறுந். 2)

இதனுள் 'தும்பி' என்றது முன்னிலையாக்கல்; 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல்; 'கூந்தலின் நறியவும் உளவோ' என்றது நன்னயமுரைத்தல்; 'காமஞ் செப்பாது' என்றது என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாது மெய் கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது; 'பயிலியது நட்பு' என்றது தந்நிலை யுரைத்தல்.

*"பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன*
*நீருறை மகன்றில் புணர்ச்சி போலப்*
*பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு*
*உடனுயிர் போகுக தில்ல கடனறிந்து*
*இருவேம் ஆகிய வுலகத்து*
*ஒருவே மாகிய புன்மைநாம் உயற்கே."* (குறுந். 57)

முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப் போந்தனம்; இவ்வுல-கிலே இப் புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேறாயுற்ற துன்பத்து இன்று நாமே நீங்குதற்கெய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர்போவதாக, இஃதெனக்கு விருப்பமென்றான்; என்பதனால் தந்நிலையுரைத்தலும் பிரிவச்சமுங் கூறிற்று.

குறுந். 300: இது நயப்பும்பிரிவச்சமும் வன்புறையுங் கூறிற்று.

குறுந். 40: இது பிரிவரெனக் கருதிய தலைவி குறிப்புணர்ந்து தலைவன் கூறியது.

குறுந். 137; அகம். 5: இவை தெளிவகப்படுத்தல்.

*''அம்மெல் ஓதி விம்முற் றழுங்கல்*
*எம்மலை வாழ்ந ரிரும்புனம் படுக்கிய*
*அரந்தின் நவியறுத் துறந்த சாந்தநும்*
*பரந்தேந் தல்குல் திருந்துதழை யுதவும்*
*பண்பிற் றென்ப வண்மை அதனால்*
*பல்கால் வந்துநம் பருவரல் தீர*
*அல்கலும் பொருந்துவ மாகலின்*
*ஒல்கா வாழ்க்கைத் தாகுமென் உயிரே.''*

இதுவும் அணித்து எம்மிடமென ஆற்றுவித்தது. பயின்-றெனவே[1] பயிலாதுவரும் ஆயத்துய்த்தலும், யான் போவலெனக் கூறுதலும் மறைந்து அவட்காண்டலுங், கண்டு நின்று அவணிலை கூறுவனவும், அவளருமை யறிந்து கூறுவனவும் போல்வன பிறவுங் கொள்க. ''யான்றற் காண்டொறும்'' என்னுஞ் செய்யுளுள்,

*''நீயறிந் திலையால் நெஞ்சே*
*யானறிந் தேனது வாயா குதலே''*

என மறைந்து அவட்கண்டு நின்று தலைவன் அவளொடு நிகழ்ந்தது நினைஇ நெஞ்சிற்குக் கூறியது,

*''காணா மரபிற்று உயிரென மொழிவோர்*
*நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே*

1. நிகழும்' என்பதற்குப் 'பயின்றுவரும்' என முன்னர்ப் பொருள் வரைந்தமையின் அப்பொருளை நினைவுகூரும் முறையில், 'பயின்று' எனவே அதனை விதப்புக் கிளவியாக எடுத்துரைத்தார் நச்சினார்க்கினியர்.

*யாஅங் காண்டுமெம் அரும்பெறல் உயிரே*
*சொல்லும் ஆடும் மென்மெல வியலும்*
*கணைக்கால் நுணுகிய நுசுப்பின்*
*மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே''*

ஆயத்தொடு போகின்றாளைக் கண்டு கூறியது. இதன்கண் ஆயத்துய்த்தமையும் பெற்றாம்.

இனி 'வேட்கை யொருதலை' (தொல். பொ. 100) என்னுஞ் சூத்திரத்திற் கூறியவற்றை மெய்யுறு புணர்ச்சிமேல் நிகழ்த்துதற்கு அவத்தை கூறினாரென்றும் இச்சூத்திரத்தைத் தலைவியை நோக்கி முன்னிலையாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப் புணர்ச்சி புணருமென்றுங் கூறுவாரும் உளர்.[1] அவர் அறியார்; என்னை? ஈண்டு அவத்தை கூறிப் பின்னர்ப் புணர்ச்சி நிகழுமெனின் ஆண்டுக் கூறிய மெய்ப்பாடு பன்னிரண்டும் வேண்டாவாம். அன்றியும், ஆறாம் அவதி கடந்து வருவன அகமன்மை மெய்ப் பாட்டியலிற் கூறலிற் பத்தாம் அவத்தையாகிய சாக்காடெய்தி மெய்யுறுபுணர்ச்சிநடத்தல் பொருந்தாமையுணர்க. இனித் தலைவியை முன்னிலையாக்கன் முதலியன கூறிப் பின்னர்ப் புணருமெனின் முன்னர்க் 'கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்' (தொல்-பொ-96) எனக் கண்ணாற் கூறிக் கூடுமென்றலும் 'இருகையுமெடுத்தல்' (தொல்-பொ-263) எனப் பின்பு கூறுதலும் பொருந்தாதாம்.

---

1. இங்ஙனம் கூறுபவர் இளம்பூரணர்.

இளம்பூரணர் கருத்தினை மறுத்தற்கு நச்சினார்க்கினியர் எடுத்துரைக்கும் காரணங்கள் பொருத்தமற்றன. வேட்கை முதலாகச் சாக்காடு ஈறாகக் கூறப் பட்டவை 'களவொழுக்கத்திற்குச் சிறப்புடை மரபினவை' எனத் தொல்காப்பியனார் தெளிவாகக் குறித்துள்ளார். அவத்தை என்பன நல்லூழின் ஆணையால் ஓரிடத்து எதிர்ப்பட்ட ஒத்த அன்பினராகிய ஒருவன் ஒருத்தி என்னும் இருவர்க்கும் பொதுப் பட நிகழும் உணர்வு நிலைகளாம். புணர்ச்சிக்குக் காரணமாய் நிகழும் அவ்வுணர்வு நிலைகளைஇயற்கைப்புணர்ச்சிக்கண் முன்னர்க்கூறுதலே முறை. இங்குச்சொல்லப்பட்ட உணர்வு நிலைகளின் வெளிப்பாடே பின்னர் மெய்ப்பாட்டியலில் விரித்துரைக்கப்படும் அகனைந்திணை பற்றிய மெய்ப்பாடுகளாகும். வேட்கை முதற் சாக்காடீறாகச் சொல்லப்பட்ட இவ்வுணர்வு நிலைகள் களவொழுக்கத்திற்குச் சிறந்தன என இங்குக் குறித்ததல்லது இவற்றுட் சாக்காடு என்னும் அவத்தை (நிலை) எய்திய பின்னரே மெய்யுறு புணர்ச்சி நடக்கும் என்பது 'வேட்கையொடுதலையுள்ளுதல்' என வரும் தொல்காப்பிய நூற்பாவிலோ அதற்கு இளம்பூரணர் வரைந்துள்ள உரையிலோயாண்டும்கூறப்படவில்லை. இயற்கைப் புணர்ச்சியில்எதிர்ப்பட்ட காதலர்.

## ஆய்வுரை

இஃது இயற்கைப் புணர்ச்சிக்குரியதோர் திறன் கூறுகின்றது.

(இ-ள்.) தனியிடத்தே தலைமகளை எதிர்ப்பட்ட தலைமகன் தனது பெருமையும் உரனும் நீங்க வேட்கை மீதூர்தலால் மெய்யுறு புணர்ச்சியை வேண்டினானாயினும் தலைமகள்பால் இயல்பாகத் தோன்றும் அச்சமும் நாணும் மடனும் அதற்குத் தடையாய் முந்துற்று நிற்பனவாதலின் அத்தடைகள் நீங்குதற்பொருட்டுத் தலைமகளை முன்னிலைப்படுத்திச் சில மொழிகளைக் கூறுதலும், தான் கூறும் அச்சொல்லின் வழி அவள் நிற்கும்படி சில சொற்கூறுதலும், அவளது நலத்தினை எடுத்துரைத்தலும், அதுகேட்ட தலைமகள் பால் நகைமிகுந்து தோன்றாது முறுவற் குறிப்புத் தோன்றிய அந்நிலையினைக் கூர்ந்து அறிதலும், தன் அகத்தே நிகழும் நோயால் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பால் விளக்குதலும், தன்னுள்ளத்து வேட்கை மீதூர்தலை நிலைப்படச் சொல்லுதலும், தலைமகளது உள்ளப் பண்பினைத் தான் அறிந்த தெளிவினைத் தன் மனத்தகத்தே தேர்ந்து வெளிப்படுத்தலும் ஆகிய இவ்வுரை-யாடல்கள் தலைவன்பால் நிகழும் என்பர் உளநூற் புலவர் எ-று.

நகை நனியுறா அந்நிலையாவது, நகை மிக்குத் தோன்றாது சிறிதே அரும்பித் தோன்றிய முறுவற் குறிப்பாகிய அந்நிலைமை.

---

இருவரும் தம் கண்ணினான் வரும் குறிப்பளவில் நின்று இன்முகமும் இன்சொல்லும் இன்றிப் பசுப்போல ஊமைநிலையிற் கூடினார் என்றல் மக்கள் நுதலிப அகனைந்-திணை யொழுகலாற்றுக்கு ஏற்புடையதன்றாம். எனவே இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியை எதிர்ப்பட்ட தலைமகன் தலைவியை முன்னிலையாக்கல் சொல்வழிப் படுத்தல் முதலாகச் சில சொற்களைப் படிகாய் முறைமையான் நிகழ்த்தித் தலை-வியைக் கூடினான் என்றல் அவனது தலைமைக்கு ஏற்புடையதேயாகும். இங்ஙனம் இயற்கைப் புணர்ச்சிக்கண் உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்து மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதற்கு முன் தலைவியின்பால் நிகழ்வதற்குரிய மெய்ப்பாடுகளையே 'புகுமுகம் புரிதல்' முதல் 'இருகையும் எடுத்தல்' ஈறாக மெய்ப்பாட்டியலில் ஆசிரியர் விரித்-துரைக்கின்றார். தலைவன் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் நிகழ்த்திப் பிரிதல் இயற்கைப் புணர்ச்சியொடு தொடர்புடையதாய் உடன் நிகழ்வது என்பது, "சொல்லிய நுகர்ச்சி வல்லேபெற்றுழித் தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப் போாச்சிறப்பின் இருநான்கு கிளவியும்" என அடுத்து வரும் நூற்பாவால் இனிது விளங்கும். எனவே இந்நூற்பாவுக்கு இளம்பூரணர் கூறும் கருத்தும் விளக்கமுமே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையவாதல் நன்கு தெளியப்படும்.

௧0 மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்
நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்
ஊரும் பேருங் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்
தண்டா திரப்பினும் மற்றைய வழியும்
சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும்
அறிந்தோள் அயர்ப்பி னவ்வழி மருங்கில்
கேடும் பீடுங் கூறலும் தோழி
நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி
மடல்மா றும் இடனுமா ருண்டே.

**இளம்பூரணம்**

*என்—எனின், களவிற் கூட்டம் நான்கினிடத்தும் தலைவன் கூற்று நிகழுமாறும் காதல்மிக்கு ஆற்றாமை கையிருப்பின் தலைவனாம் இயலும் கூறுதல் நுதலிற்று.*

*(இ - ள்.) மெய்தொட்டுப் பயிற லாவது — பெருமையும் உரனுமுடைய தலைமகன் தெளிவகப்படுத்தியது காரணமாகக் காதல் வெள்ளம் புரண்டோடத் தலைவியின் மெய்யைத் தீண்டிப் பயிறல்.*

பொய் பாராட்ட லாவது[1]—தலைவியின் ஐம்பால் முதலிய கடை குழன்று சிதைவின்றேனும் அஃதுற்றதாக மருங்குசென்று தொட்டான் ஒரு காரணம் பொய்யாகப் படைத்து உரைத்து பாராட்டல்.

இடம்பெற்றுத் தழாஅல் ஆவது—பொய்பாராட்டல் காரணமாத் தலைவிமாட்டு அணிமையிடம் பெற்றுத்[2] தழுவக்கூறல்.

இடையூறு கிளத்த லாவது—நாண் மடன் நிலைக்களனாக் கொண்ட தலைவி தன் அறிவு நலன் இழந்து ஒன்றும் அறியாது உயிர்த்தனள். அஃது ஒக்குமோ எனின் ஒக்கும். புதிதாய்ப் புக்கார், ஊற்றுணர்வு என்றும் பயிலாததம் மெல்லியல் மெய்யிற்பட அறிவிழப்பினும் உள்நெக்கு உயிர்க்கும் என்க. அதுபற்றிப் புலையன் தொடு தீம்பால் போல் காதல் கூரக் கொம்பானும் கொடியானும் சார்ந்தாளைத் தலைவன் இப்பொழுது இவ்வூற்றின்பிற்கு இடையூறாய் நின்மனத்தகத்து நிகழ்ந்தவை யாவென வினவுதலும்.

நீடுநினைந்திரங்க லாவது—இருவர் இயலும் ஒருங்கு இணைந்தும் தலைவி பெரு நாணால், பால்வழி உறுகவென எண்ணி மாற்றமுங்குறியுங் காட்டாது கண்புதைப்பாளைத் தலைவன் புறம்ஓச்சி நிற்கவும் ஆண்டும் கலக்கலாம் பொழுது கூடாமைக்கு நினைந்து இரங்கல்.

கூடுதலுறுத லாவது—இங்ஙனமாய்க் காட்சி நிகழ்வின் பின்னர்ப் புணர்ச்சி எய்தலும்.

இதுவரை இயற்கைப் புணர்ச்சியாங் காரணங்கூறிக், கூடுதலுறுதலால் மெய்யுறு புணர்ச்சி கூறினார். இவற்றிற்குச் செய்யுள்:

---

1. பொய்ப்பாராட்டல் — பொய்யாக ஒரு காரணம் படைத்துக் கொண்டு தலைமகளைப் பாராட்டல்.

2. இடம்பெறுதலாவது, தலைமகளைப் பாராட்டுமுகமாக அவளது அணிமைக்கண் நெருங்குதல்.

''வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு'' (குறள். 1108)

இது கூடுதலுறுதல். பிற வந்துழிக் காண்க.

சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி என்பது—இயற்கைப் புணர்ச்சிக்குக் களனாக மேற்கூறப்பட்டவற்றுடன் அவ்வின்பந் திளைத்தலையும் விரைவாக ஒன்றாய்ப் பெற்ற விடத்து.

இத்தெய்வப் புணர்ச்சிக்குப் பொருள் கூறுங்கால், பயிறல், பாராட்டல், தழாஅல், கிளத்தல், இரங்கல், உறுதல், நுகர்ச்சி, தேற்றம் என்று சொல்லப்பட்ட இருநான்கு கிளவியும் என எண்ணப்படுத்துக.

''மெய்தொட்டுப் பயிறல்'' முதலாகக் ''கூடுத லுறுதல்'' வரை இயற்கைப் புணர்ச்சிக்கே உரிய கூறி,

''சொல்லிய நுகர்ச்சி'' முதல் ''இருநான்கு கிளவி'' வரை இடந்தலைப்பாடும் சேர்த்து உணர்த்தினார். அற்றாயின் நுகர்ச்சியும் தேற்றமும் இயற்கைப் புணர்ச்சியன்றோ, இடந்தலைப்பாடாமாறு என்னை யெனின், நன்று கடாயினாய். மெய்யுறுபுணர்ச்சியினைப் பால் கூட்டும் நெறிவழிப்பட்டுப் பெற்றார்க்கு மெய்தொட்டுப் பயிறல் முதல் அறுதுறையே இன்றியமையாத் துறையாக, ஏனைய இரண்டும் இடந்தலைப்பாட்டிற்கும் சேர்ந்த துறையாகலின், பொதுப்பட இரண்டற்கும் நடுவே வைத்துச் செப்பம் ஆக்கினாரென்க. நுகர்ச்சியும் தேற்றமும் எனப் பிரித்துக் கூட்டுக.

தீராத் தேற்ற மாவது — இயற்கைப்புணர்ச்சியுடன் முடியாத தெளிவு.

''வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்'' (குறள்.1005)

இஃது இயற்கைப் புணர்ச்சித் துறையன்று; இடந்தலைப்பாட்டின் கண் தலைமகன் கூறியது; நுகர்ச்சி பெற்றது.

''கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள'' (குறள்.1101)

என்பதோ எனின், இயற்கைப்புணர்ச்சிக்கண் நுகர்ச்சி யுற்றமை கூறிற்று என்க.

*"எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்*
*கனைமுதர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்*
*வேலன் புனைந்த வெறிஅயர் களந்தொறுஞ்*
*செந்நெல் வான்பொரி சிதறி அன்ன*
*எக்கர் நண்ணிய எம்மூர் வியன்துறை*
*நேர்இறை முன்கை பற்றிச்*
*சூரர மகளிரோ டுற்ற சூளே."* (குறுந்.53)

இஃது இயற்கைப்புணர்ச்சிப் பின்றைச் சொற்ற தீராத் தேற்ற வுரை. "இன்னிசை யுருமொடு" என்னும் அகப்பாட்டுள்,

*"நின்மார் படைதலின் இனிதா கின்றே*
*நும்மில் புலம்பினும் உள்ளுதொறும் நலியும்"* (அகம்.85)

என்றது இடந்தலைப்பாட்டில் நேர்ந்த தேற்றம்,

*"பேராச் சிறப்பின்" எட்டு என்றல்.*
பேரும் சிறப்பினை ஆறு என்றலை எடுத்தோத்தாற் காட்டி நின்றது.

இதுவரை இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும், மேல் 'வாயில் பெட்பினும்' என்னுமளவும் பாங்கற் கூட்டம்; மேல் தொடர்பவை தோழியிற் கூட்டம்.

பெற்றவழி மகிழ்ச்சியும் என்பது—இடந்தலைப்பாட்டினை யொட்டி நிகழும் இன்பினைப் பெற்றவழி அகத்துத் தோற்றும் பெருமகிழ்வும்.

*"நீங்கின் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னுந்*
*தீயாண்டுப் பெற்றாள் இவள்"* (குறள்.1104)
*"ஒடுங்கீ ரோதி ஒண்ணுதற் குறுமகள்*
*நறுந்தண் நீர ளாரணங் கினளே*
*இனையள் ஆன்றவட் புனையளவு அறியேன்*
*சிலமெல் லியவே கிளவி*
*அனைமெல் லியல்யா முயங்குங் காலே"* (குறுந்.70)

இவை புணர்ச்சியான் மகிழ்ந்ததற்குச் செய்யுட்கள்.

பிரிந்தவழிக் கலங்கலாவது—இவ்வாறு கூடின தலைமகள் பிரிந்தவழிக் கலக்க முறுதலும் என்றவாறு.

*'என்றும் இனிய ளாயினும் பிரிதல்*
*என்றும் இன்னாள் அன்றே நெஞ்சம்*
*பனிமருந்து விளைக்கும் பரூஉக்கண் இளமுலைப்*
*படுசாந்து சிதைய முயங்குஞ்*
*சிறுகுடிக் கானவன் பெருமட மகளே''*

என வரும்.

இத்துணையும் இடந்தலைப்பாடு, பெற்றவழி மகிழ்தலும் பிரிந்தவழிக் கலங்கலும் பாங்கற் கூட்டத்தினுந் தோழியிற் கூட்டத்-தினும் நிகழும்.

நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்[1] என்பது—காம நுகர்ச்சி யொன்றனையும் நினையாது இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்குமென்று உட்கோடலும். நிற்பவை—இல்லறவினை.

*''தேரோன் தெறுகதிர் மழுங்கினுந் திங்கள்*
*தீரா வெம்மையொடு திசைநடுக்கு உறுப்பினும்*
*பெயராப் பெற்றியில் திரியாச் சீர்சால்*
*குலத்தில் திரியாக் கொள்கையுங் கொள்கையொடு*
*நலத்தில் திரியா நாட்டமும் உடையோய்*
*கண்டத னளவையிற் கலங்குதி யெனின்இம்*
*மண்திணி கிடக்கை மாநிலம்*
*உண்டெனக் கருதி உணரலன் யானே''*

இது நிற்பவை நினை இக் கழறியது.

*''இடிக்குங் கேளிர் நுங்குறை யாக*
*நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல*
*ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்*
*கையில் ஊமன் கண்ணிற் காக்கும்*
*வெண்ணெய் உணங்கல் போலப்*
*பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே.''* (குறுந். 58)

இது நிகழ்பவை உரைத்தது.

---

1. நிற்பவை நினைஇ நிகழ்பவை யுரைப்பினும் என்பதனை நிற்பவை நினைஇயுரைத்தல், நிகழ்பவையுரைத்தல் என இரண்டாகப் பகுத்துரைப்பர் இளம்பூரணர்.

குற்றங்காட்டிய வாயிலாவது—தலைவன் மாட்டுச் சோர்வானும் காதல் மிகுதியானும் நேர்வுற்ற பழிபாவங்களை எடுத்துக்காட்டும் பாங்கன்.

பெட்பினும்—அத்தகைய பாங்கன் இவ்வியல் பண்டைப் பால் வழியது என எண்ணி இவ்வாறு தலைமகன் மறுத்தவழி அதற் குடன்படல். அவ்வழி, நின்னாற் காணப்பட்டாள் எவ்விடத்தாள்? எத்தன்மையாள்? எனப் பாங்கன் வினாவுதலும், அதற்குத் தலைமகன் இடமும் உருவுங் கூறுதலும், அவ்வழிப் பாங்கன் சென்று காண்டலும், மீண்டு தலைமகற்கு அவள் நிலைமை கூறலு மெல்லாம் உளவாம். அவ்வழிப் பாங்கன் வினாதலும் தலைமகன் உரைத்தனவும் உளவாம். பாங்கன் வினாயதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க. அவ்வழித் தலைமகன் உரைத்தற்குச் செய்யுள் : —

*''எலுவ சிறாஅர் ஏமுறு நண்ப*
*புலவர் தோழ கேளாய் அத்தை*
*மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்*
*பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்*
*கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்*
*புதுக்கோள் யானையிற் பிணித்தற்றால் எம்மே''*

(குறுந். 129)

*''கழைபாடு இரங்கப் பல்லியங் கறங்க*
*ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று*
*அதவத் தீங்கனி அன்ன செம்முகத்*
*துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்*
*கழைக்கண் இரும்பொறை ஏறி விசைத்தெழுந்து*
*குறக்குறு மாக்கள் தாளங் கொட்டுமக்*
*குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்*
*சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி*
*கொடிச்சி கையகத்தது வேபிறர்*
*விடுத்தற் காகாது பிணித்தஎன் நெஞ்சே.''*

(நற்றிணை. 65)

இன்னும் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் வரைந்தெய்தல் வேண்டிக் கூறினவுங் கொள்க.

"முலையே முகிழ் முகிழ்த் தன்வே தலையே
கிளைஇய குரலே கிழக்குவீழ்ந் தனவே
செறிநிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே அணங்குதற்கு
யான்தன் அறிவலே தானறி யலளே
யாங்கா குவள்கொல் தானே
பெருமுது செல்வன் ஒருமட மகளே." (குறுந். 337)

[இது பாங்கன் நின்னை அணங்காக்கியாள் எவ்விடத்தவள், எவ்வியலினள் என்று வினாய் அறிந்தது.]

இவ்வாறு கேட்ட பாங்கன் அவ்வழிச் சென்று கண்டதற்குச் செய்யுள்,

"இரவி னானும் இன்துயில் அறியாது
அரவுறு துயரம் எய்துப தொண்டித்
தண்ணறு நெய்த னாறும்
பின்னிருங் கூந்தல் அணங்குற் றோரே" (ஐங்.173)

என வரும்.

இச்சூத்திரத்துள் கூற்று வரையறுத்துணர்த்தாமை பாங்கற் கூற்றும் அடங்கற்குப் போலும்.[1]

பெட்ட வாயில்பெற் றிரவு வலியுறுப்பினும் என்பது மேற்சொல்லியவாற்றான் உடம்பட்ட பாங்கனால் தலைமகளைப் பெற்றுப் பின்னும் வரைந்தெய்த லாற்றாது களவிற் புணர்ச்சி வேண்டித் தோழியை இரந்து பின்நின்று கூட்டக் கூடுவன் என்னும் உள்ளத்தனாய் அவ்விரத்தலை வலியுறுத்தினும் என்றவாறு.

வலியுறுத்தலாவது, தான் வழிமொழிந்து யாது தான் அவ்வாறு செய்குவல் என்றமை.

பெட்டவாயிலால் தலைமகளைக் கண்டு கூறியதற்குச் செய்யுள்:

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் ஐயர்
உடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் நீயும்

1. இச்சூத்திரத்துள் தலைவன் கூற்றுக்களோடு பாங்கன் கூற்றும் அடங்கற்குக் கூற்று வரையறை கூறாராயினார் ஆசிரியர் என்பது கருத்து.

மிடல்-க் கடந்கரத வெம்முலையோ பாரம்
இடர்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய்''
(சிலப். கானல்.17)

இன்னும், பெட்டவாயில் பெற்று என்பதற்கு இரட்டுற மொழி-தல் என்பதனால் தலைமகள் தான் விரும்பப்பட்ட தோழியாகி எமக்கு வாயில் நேர்வாள் இவள் எனப் பெற்றுப் பின்னிரந்து குறையுற நினைப்பினும் என்றுமாம். அதற்குச் செய்யுள் :

''தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலும் மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரிந் உறழுங் கொழுங்கடை மழைக்கண்
துளிதலைத் தலைஇய தளிர்அன் னோளே.''
(குறுந்.2-2)

இரவு வலியுறுத்தற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

''கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைந்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்
பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லட்டி
அருளினும் அருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியல்மா நெஞ்சே என்னதூஉம்
அருந்துயர் அவலந் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையான் உற்ற நோய்க்கே''
(நற்றிணை.140)

என்னும் பாட்டும் ஆம்.

இத்துணையும் பாங்கற்கூட்டம்.

ஊரும்......பகுதியும் என்பது — ஊராயினும் பேராயினும் கெடுதியாயினும் பிறவாயினும் நீர்மையினால் தன்குறிப்புத் தோன்றக் கூறித் தலைமகன் தோழியைக் குறையுறும் பகுதியும் உண்டு என்றவாறு.

அவற்றுள் ஊர்வினாயதற்குச் செய்யுள் :

''அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழங்
குழவிச் சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீர் ஆயிற் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனங் காவலும் நுமதோ
கோடேந் தல்குல் நீள்தோ ளீரே.'' (நற்றிணை.213)

பெயர் வினாயதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.
கெடுதி வினாயதற்குச் செய்யுள் : —

''நரைபரந்த சாந்தம் அறஎறிந்து நாளால்
உறையெதிர்ந்து வித்தியஊழ் ஏனல்—பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
ஏமரை போந்தன ஈண்டு.'' (திணைமாலை.1)

''இல்லுடைக் கிழமை யெம்மொடு புணரில்
தீதும் உண்டோ மாத ரீரே''

என்றது பிறவாறு வினாயது. பிறவுமன்ன.

தோழி குறை...இடனுமா ருண்டே என்பது—தோழி குறையைத் தலைமகளைச் சார்த்தி மெய்யுறக் கூறுதலும், அமையாதிரப்பினும் மற்றைய வழியும், சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும், அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடும் கூறுதலின் நீக்கலினாகிய நிலைமையும் நோக்கி மடல்மா கூறுதலும் உண்டு தலைமகன்கண் என்றவாறு.

தலைமகன்கண் என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது. உம்மையாற் பிறகூறுதலு முண்டென்றவாறு. புணர்ச்சி நிமித்தமாகத் தலைமகன் இரத்தலுங் குறையுறுதலும் மடலேறுவல் எனக் கூறுதலும் பெறுமென்றவாறு. ஈண்டு, குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறல் என்பது தோழி கூற்றுள் அருமையி னகற்சி யென்று ஓதப்பட்டது. தண்டாதிரத்த லாவது—தலைமகன் பலகாலுஞ் சென்று இரத்தல்.

மற்றைய வழி என்பது—பின்வரூ வென்றல் முதலாயின. சொல்லவட் சார்த்தலிற் புல்லியவகை என்பது—முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துணர்த்தலென் ஓதப்பட்டது. அறிந்தோளயர்ப் பென்பது— பேதைமை யூட்டல்என ஓதப்பட்டது. கேடு கூறுதலாவது—உலகுரைத் தொழிப்பினும் என ஓதப்பட்டது. பீடுகூறுதலாவது—பெருமையிற் பெயர்ப்பினும் என ஓதப்பட்டது. நீக்கலினாகிய நிலைமை என்பது— அஞ்சி அச்சுறுத்தலென ஓதப்பட்டது. இவையெல்லாந் தோழி கூற்றினுட் காணப்படும்.

தோழியைக் குறையுறும் பகுதி வருமாறு :—

*''தோளுங் கூந்தலும் பலபா ராட்டி*
*வாழ்தல் ஒல்லுமோ மற்றே செங்கோற்*
*குட்டுவன் தொண்டி அன்ன*
*எற்கண்டு மயங்கிநீ நல்காக் காலே''*                (ஐங்குறு.178)

இனி மடலேறுவல் என்பதற்குச் செய்யுள் :

*''மாவென மடலும் ஊர்ப பூவெனக்*
*குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப*
*மறுகின் ஆர்க்கவும் படுப*
*பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே''*              (குறுந்.

அவ்வழித் தலைமகன் கூறிய சொற்கேட்டு இஃது அறிவுப அருளும் நாணமும் உடையார் செய்யார் எனக் கூறியவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்:

*''நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்*
*காமுற்றார் ஏறும் மடல்''*                    (குறள்.1133)

எனவும்,

*''அறிகிலா ரெல்லாரும் என்றேயென் காமம்*
*மறுகில் மறுகும் மருண்டு''*                    (குறள்.1139)

எனவும் வரும். பிறவு மன்ன. மடல்மா கூறாது பிற கூறியதற்குச் செய்யுள் :—

*''பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்*
*பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவள்*

*உருத்தெழு வனமுலை ஒளிபெற எழுதிய*
*தொய்யில் காப்போர் அறிதலும் அறியார்*
*முறையுடை அரசன் செங்கோல் வையத்து*
*யாஅந்தற் கடவின் யாங்கா வதுகொல்*
*பெரிதும் பேதை மன்ற*
*அளிதோ தானேயிவ் அழுங்கல் ஊரே''* (குறுந்.279)

இவ்வாறு இரந்து பின்னிற்றலும் மடலேறுவல்[1] என்றலும் கைக்கிளை பெருந்திணைப் பாற்படுமோ எனின், அவ்வாறு வருவன அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாமாறு வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். (கக)

**நச்சினார்க்கினியம்**

இது மேல் இயற்கைப் புணர்ச்சிப் பகுதியெல்லாங் கூறி அதன்வழித் தோன்றும் இடந்தலைப்பாடும் அதன்வழித் தோன்றும் பாங்கற்கூட்டமும் அவற்றுவழித் தோன்றும் தோழியிற் கூட்டமும் நிகழுமிடத்துத் தலைவன் கூற்று நிகழ்த்துமாறும் ஆற்றாமை கையிகந்து கலங்கியவழி அவன் மடன்மா கூறுமாறுங் கூறுகின்றது. இதனுள் 'இருநான்கு கிளவியும்' என்னுந் துணையும் இடந்தலைப்பாடும் 'வாயில் பெட்பினும்' என்னுந் துணையும் பாங்கற்கூட்டமும் ஒழிந்தன தோழியிற் கூட்டமுமாம்.

(இ - ள்.) மெய்தொட்டுப் பயிறல் - தலைவன் தலைவியை மெய்யைத் தீண்டிப் பயிலாநிற்கு நிலைமை :

என்றால், இயற்கைப் புணர்ச்சிப்பின்னர்ப் பெருநாணினளாகிய தலைமகள் எதிர்நிற்குமோவெனின் தான் பிறந்த குடிக்குச் சிறந்த வொழுக்கத்திற்குத் தகாதது செய்தாளாதலின், 'மறையிற் றப்பா மறையோ னொருவனை மறையிற் றப்பிய மறையோன்' போலவும் 'வேட்கைமிகுதியான் வெய்துண்டு புண்கூர்ந்தார்' போலவும் நெஞ்சும் நிறையுந் தடுமாறி[2] இனிச் செயற்பாலதியாதென்-

---

1. இவ்வாறு இரந்து பின்னிற்றலும் மடலேறுவல் என்றலும் அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாமாறு 'பண்பிற் பெயர்ப்பினும்' என அடுத்து வரும்-நூற்பாவால் விளங்கும்.

2. வைதிக நெறியில் வழுவா தொழுகும் மறையோன் ஒருவன் பால் அந் நெறியினின்றும் வழுவித் தவறு செய்த மறையோன் தன் தவறுணர்ந்து கலக்கமடைதல் போலவும், உணவின்பால் வைத்த பெருவேட்கையால் தன் முன் வைக்கப்பட்ட சூடான உணவை விரைந்து உட்கொண்டு வாயும் வயிறும் வெந்து புண்ணுற்றார் போலவும் நெஞ்சத்துறுதியினையும் நிறையினையும் இழந்து கலக்கமடைந்து என்பது இவ்வுரைத தொடரின் பொருளாகும்.

றும், ஆயத்துள்ளே வருவான்கொல் என்னும் அச்சங் கூறவும் வாரான்கொல் என்னும் காதல்கூறவும்[1], புலையன் நீம்பால்போன் மனங்கொள்ளா அனந்தருள்ளம்[2] உடையளாய், நாணு மறந்து காதலீர்ப்பச் செல்லும்! சென்று நின்றாளைத் தலைவன் இவ்வொழுக்கம் புறத்தார் இகழப் புலனாய் வேறுபட்டாள் கொல்லோ எனவும்; அங்ஙனம் மறைபுலப்படுதலின்[3] இதனினூங்கு[4] வரைந்து கொள்ளினன்றி இம் மறைக்கு உடம்படாளோவெனவுங் கருதுமாறு முன்பு போல் நின்ற தலைவியை மெய்யுறத் தீண்டி நின்று குறிப்பறியுமென்றற்குத் தொடுமென்னாது பயிறலென்றார்.[5]

பொய் பாராட்டல் - அங்ஙனந் தீண்டிநின்றுழித் தலைவி குறிப்பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்செய்யா நின்று[6] புனைந்துரைத்தல் :

சிதைவின்றேனுஞ் சிதைந்தனபோல்[7] திருத்தலிற் பொய் யென்றார்.

இடம்பெற்றுத் தழாஅல் - அவ்விரண்டனானுந் தலைவியை முகம்பெற்றவன் அவள் நோக்கிய நோக்கினைத் தன்னிடத்திலே சேர்த்துக்கொண்டு கூறல் :

இடையூறு கிளத்தல் - அவள் பெருநாணினளாதலின் இங்ஙனங் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகச் சில நிகழ்த்தியவற்றைத் தலைவன் கூறல் :

அவை கண்புதைத்தலுங் கொம்பானுங் கொடியானுஞ் சார்தலுமாம் :

நீடுநினைந்திரங்கல் - புணர்ச்சி நிகழாது பொழுது நீண்டதற்கு இரங்கி[8] இரக்கந்தோன்றக் கூறல் :

---

1. தன் தோழியர் கூட்டத்துள் வருவானாயின் நம் களவு வெளிப்பட்டு விடுமே என்ற அச்சமும், வந்தால் அவனை மீண்டும் ஒருமுறை கண்டு மகிழலாமே என்ற காதலும் தலைமகள் உள்ளத்தே தோன்றும்.

2. அனந்தர் - மயக்கம்.

3. மறைபுலப்படுதல் - களவு வெளிப்படுதல்.

4. இதனினூஉங்கு - இதற்குமேல்.

5. பயிறல் - பலமுறை தீண்டிப் பழகுதல்.

6. பொய்செய்யா நிற்றலாவது, விளையாட்டாக உரையாடி அளவளாவுதல்.

7. சிதைதல் - முன்னிருந்த ஒப்பனை கலைதல்.

8. பொழுது நீண்டதற்கு இரங்குதலாவது, தலைமகளை அணையப்பெறாது காலம் வறிதே கழிந்தமைக்கு வருந்துதல்.

கூடுதல் உறுதல் - நீடித்ததென்று இரங்கினானென்பது அறிந் தோள் இவன் ஆற்றானாகி இறந்துபடுவனெனப் பெரு நாணுக் கடிதுநீங்குதல் : [1]

செல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி - தலைவன் தான் முற் கூறிய நுகர்ச்சியை விரையப் பெற்றவழி :

பெற்றவழி என்பதனைப் பெறுதலெனப் பெயர்ப்படுத்தல் அக்கருத்தாற் பெறுதும் : [2]

தீராத் தேற்றம் [3] உளப்படத் தொகைஇ - எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல் அகப்படத் தொகுத்து :

புணர்ச்சி நிகழ்ந்துழியல்லது தேற்றங்கூறல் ஆகாதென் றற்கு 'வல்லே பெற்றுழித் தீராத் தேற்ற' மென்றார். முன் தெளிவகப்படுத்தபின் [4] நிகழ்ந்த ஆற்றாமை தீர்தற்குத் தெய் வத்தொடு சார்த்திச் சூளுறுதலின் இத்தேற்றமும் வேண்டிற்று.

பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும் - குறையாச் சிறப் பினவாகிய இவ்வெட்டும் :

தாமே கூடும் இடந்தலைப்பாடும் பாங்கனாற் குறிதலைப் பெய் யும் இடந்தலைப்பாடும் ஒத்த சிறப்பினவாதற்குப் 'பேராச் சிறப்பி' னென்றார்.

எனவே, இடந்தலைப்பாடு இரண்டாயிற்று. தோழியிற் கூட்டம்போலப் பாங்கன் உரையாடி இடைநின்று கூட்டாமை-

---

1. கூடுதல் உறுதல் - தலைவன் தன்னைக் கூடுதற்கு இசையும் முறையில் தலைமகள் தனது நாணம் நீங்கப் பெறுதல்.

2. 'சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி' என்பதனைச் சொல்லிய நுகர்ச்சி வல்லே பெறுதல் எனப் பெயர்ப்படுத்தி எண்ணுதல் ஆசிரியர் கருத்து என்பதாம்

3. தீராத தேற்றம் - தீராமைக்கு (விட்டு நீங்காமைக்கு)க் காரணமாகிய தேற்றம்; என்றது எக்காலத்தும் பிரியாமைக்குக் காரணமாகிய சூள் (சபதம்) செய்தல். இங்ஙனம் தெய்வத்தின் முன்னின்று சூளுறுதல் முன்தேற்று எனப்படும்

4. 'முன் தெளிவகப்படுத்தபின்' என்றது, 'முன்னிலையாக்கல்' (களவியல் 10) என்ற சூத்திரத்தில் சொல்லப்பட்ட தெளிவகப்படுத்தல் நிகழ்ந்தபின் என்பதாம்.

யிற் பாங்கற்கூட்டம் என்றதனைத் தலைமகன் பாங்கனைக் கூடுங் கூட்டமென்று கொள்க.[1]

உ-ம் : ''*உறுதோ றுயிர் தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்கு*
*அமிழ்தி னியன்றன தோள்*'' (குறள்.1106)

இஃது என் கை சென்றுறுந்தோறும் இன்னுயிர் தளிர்க்கும்படி யான் தீண்டப்படுதலினெனப் பொருள் கூறவே மெய் தீண்டலாயிற்று.

> ''*தீண்டலும் இயைவது கொல்லோ மாண்ட*
> *வில்லுடை வீளையர் கல்லிடுபு எடுத்த*
> *நனந்தலைக் கானத்து இனந்தலைப் பிரிந்த*
> *புன்கண் மடமா னேர்படத் தன்னையர்*
> *சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்*
> *குருதியொடு பறித்த செங்கோல் வாளி*
> *மாறுகொண் டன்ன வுண்கண்*
> *நாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே*'' (குறுந். 272)

கழறிய பாங்கற்குக் கூறுந் தலைவன் இவனான் இக்குறை முடியாது, நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல், அது கூடுங்கொலென்று கூறுவான் அற்றைஞான்று மெய் தொட்டுப்-பயின்றதே கூறினான்.

> ''*சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்*
> *திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்*
> *காமங் கைம்மிகில் தாங்குதல் எளிதோ*
> *கொடுங்கேழ் இரும்புறம் நடுங்கக் குத்திப்*
> *புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்*
> *தலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்*
> *கண்ணே கதவ அல்ல நண்ணார்*
> *அரண்டலை மதில ராகவு முரசுகொண்டு*
> *ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்*
> *பெரும்பெயர் கூட லன்னநின்*
> *கரும்புடைத் தோளு முடையவா லணங்கே.*''
> (நற்றிணை. 39)

1. 'பாங்கற் கூட்டம்' என்பதற்குப் பாங்கனது உடன்பாடு பெற்றுத் தலைவன் தலைமகளைக் கூடும் கூட்டம் என விளக்கம் கூறுதலும் பொருந்தும்.

இஃது, அங்ஙனம் மெய்தீண்டி நின்றவன் யான் தழீஇக் கொண்டு கூறில் அதனை ஏற்றுக்கொள்ளாயாய் இறைஞ்சி நின்று நாணத்தாற் கண்ணைப் புதைத்தியென 'இடையூறு கிளத்தல்' கூறிக் காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோவென 'நீடுநினைந்-திரங்கல்' கூறிப் புலியிடைத் தோய்ந்து சிவந்த கோடு போல என்னிடைத் தோய்ந்து காமக்குறிப்பினாற் சிவந்த கண்ணெனக் கூடுதலுங் கூறிற்று.

> ''எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
> நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
> வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ்
> செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
> எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை
> நேரிறை முன்கை பற்றிச்
> சூரர மகளிரொ டுற்ற சூளே'' (குறுந். 53)

இதனுள் தீராத்தேற்றத்தைப் பின்னொருகால் தலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியவாறு காண்க.

இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவி கருத்தெல்லாம் உணர்ந் தானாயினுங் காவன்மிகுதியானுங் கரவுள்ளத்தானும் இரண் டாங்கூட்டத்தினும் அவள்நிலை தெளியாது ஐயுறுதலுங் கூறி, மூன்றாவதாய் மேல்நிகழும் பாங்கர்கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும்[1] ஐயுறவு உரித்தென்று மெய்தொட்டுப் பயி-றன் முதலியன அதற்குங் கூறினார். அன்றியும் மக்களெல்லாம் முதல் இடை கடையென மூவகைப்படுதலின் அவர்க்கெல்லாம் இது பொது விதியாகலானும் அமையும்.

> ''எண்ணிய தியையா தாங்கொல் கண்ணீ
> அவ்வுறு மரபி னுகர்ச்சி பெறுகென
> வரிவுண் டார்க்குறி வாய்புகு கடாஅத்த
> அண்ணல் யானை யெண்ணருஞ் சோலை

1. ''தாமே கூடும் இடந்தலைப்பாடும் பாங்கனார் குறிதலைப்பெய்யும் இடந்தலைப்பாடும் என இடந்தலைப்பாடு இரண்டாயிற்று'' என்பது நச்சினார்க்-கினியர் கருத்தாதலின் 'பாங்கற்கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும்' எனவரும் இவ்வுரைத் தொடர்க்குப் 'பாங்கற் கூட்டமாகிய இடந்தலைப்பாட்டினும்' எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இஃது, அங்ஙனம் மெய்தீண்டி நின்றவன் யான் தழீஇக் கொண்டு கூறில் அதனை ஏற்றுக்கொள்ளாயாய் இறைஞ்சி நின்று நாணத்தாற் கண்ணைப் புதைத்தியென 'இடையூறு கிளத்தல்' கூறிக் காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோவென 'நீடுநினைந்-திரங்கல்' கூறிப் புலியிடைத் தோய்ந்து சிவந்த கோடு போல என்னிடைத் தோய்ந்து காமக்குறிப்பினாற் சிவந்த கண்ணெனக் கூடுதலுங் கூறிற்று.

*"எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்*
*நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்*
*வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ்*
*செந்நெல் வான்பொரி சிதறி யன்ன*
*எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்துறை*
*நேரிறை முன்கை பற்றிச்*
*சூரர மகளிரொ டுற்ற சூளே"* (குறுந். 53)

இதனுள் தீராத்தேற்றத்தைப் பின்னொருகால் தலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியவாறு காண்க.

இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவி கருத்தெல்லாம் உணர்ந்-தானாயினுங் காவன்மிகுதியானுங் கரவுள்ளத்தானும் இரண்-டாங்கூட்டத்தினும் அவள்நிலை தெளியாது ஐயுறுதலுங் கூறி, மூன்றாவதாய் மேல்நிகழும் பாங்கர்கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும்[1] ஐயுறவு உரித்தென்று மெய்தொட்டுப் பயி-றன் முதலியன அதற்குங் கூறினார். அன்றியும் மக்களெல்லாம் முதல் இடை கடையென மூவகைப்படுதலின் அவர்க்கெல்லாம் இது பொது விதியாகலானும் அமையும்.

*"எண்ணிய தியையா தாங்கொல் கண்ணி*
*அவ்வுறு மரபி னுகர்ச்சி பெறுகென*
*வரிவுண் டார்க்குறி வாய்புகு கடாஅத்த*
*அண்ணல் யானை யெண்ணருஞ் சோலை*

---

1. "தாமே கூடும் இடந்தலைப்பாடும் பாங்கனார் குறிதலைப்பெய்யும் இடந்தலைப்பாடும் என இடந்தலைப்பாடு இரண்டாயிற்று" என்பது நச்சினார்க்-கினியர் கருத்தாதலின் 'பாங்கற்கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும்' எனவரும் இவ்வுரைத் தொடர்க்குப் 'பாங்கற் கூட்டமாகிய இடந்தலைப்பாட்டினும்' எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

*விண்ணுயர் வெற்பினெம் அருளி நின்னின்*
*அகலி னகலுமெ னுயிரெனத் தவலி*
*வருந்துய ரவலமொ டணித்தெம் மிடமெனப்*
*பிரிந்துறை வமைந்தவெம் புலம்புநனி நோக்கிக்*
*கவர்வுறு நெஞ்சமொடு கவலுங் கொல்லோ*
*ஆய நாப்பண் வருகுவன் கொல்லென*
*உயவுமென் னுள்ளத் தயர்வுமிக லானே.''*

இது வருவான்கொ லென்னும் அச்சமும் வாரான்கொலென் னுங் காதலுங் கூர்ந்து தலைவி கூறியது.

இனிச் 'சொல்லிய' வென்றதனானே இன்னும் இப் புணர்ச்சி கூடுங்கொலெனக் கூறுவனவும், இன்னும் தெய்வந் தருமெனக் கூறுவனவுந், தலைவியை எதிர்ப்பட்ட இடங்கண்டுழி அவளாகக் கூறுவனவும், காட்சிக்கு நிமித்தமாகிய கிள்ளையை வாழ்த்துவனவும், தலைவி தனித்தநிலைமை கண்டு வியப்பனவும், முன்னர்த் தான் நீங்கிய வழிப் பிறந்த வருத்தங் கூறுவனவும், அணி யணிந்து விடுத்தலும், இவைபோல்வன பிறவும் இடந்தலைப்பாட்டிற்குக் கொள்க.

பெற்றவழி மகிழ்ச்சியும் - சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி அவன் மனம் மகிழும் மகிழ்ச்சியும்; பேராச் சிறப்பினென்றதனாற் பாங்கனால் நிகழும் இடந்தலைப்பாட்டிற்கும் இது கொள்க.

பிரிந்தவழிக் கலங்கலும்-அங்ஙனம் புணர்ந்து பிரிந்துழி அன்பு மிகுதியால் தான் மறைந்து அவட் காணுங்கால் ஆயத்திடையுஞ் சீறூரிடையுங் கண்டு இனிக் கூடுதல் அரிதென இரங்கலும்.

'வழி' யென்றதனாற் பிரியலுறுவான் கூறுவனவும் கொள்க.

*''வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்*
*அதற்கன்னள் நீங்கு மிடத்து.''* (குறள். 1124)

இது[1] மூன்றாங் கூட்டத்தினையுங் கருதலின் ஈண்டுவைத்தார். இதுமுதலாகப் பாங்கற்கூட்டமாம். கலங்கலுமெனவே அக்கலக்கத்-

1. 'இது' என்னும் சுட்டு, பிரிந்தவழிக் கலங்கலை உணர்த்தியது. 'பிரிந்த வழிக் கலங்கல்' என்பது முதலாக இனிக் கூறப்படுவன பாங்கற் கூட்டத்திற் குரியன என்பதாம்.

தான் நிகழ்வனவெல்லாங் கொள்க. அவை தலைவன் பாங்கனை நினைத்தலும் அக் கலக்கங் கண்டு பாங்கன் வினாவுவனவும் அதுவே பற்றுக்கோடாக உற்றதுரைத்தலும் பிறவுமாம்.

நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும் - நிற்பவை நினைஇ உரைப்பினும் நிகழ்பவை உரைப்பினும் என உரைப்பி னென்பதனை முன்னுங் கூட்டுக;[1]

அதுகேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங் களை அவனை நினைப்பித்துக் கழறிக் கூறினும், அக் கழறியவற்றை மறுத்துத் தன் நெஞ்சின் நிகழும் வருத்தங்களை அவற்குக் கூறினும் :

இப் பாமையான் வேறுபட வருவனவெல்லாங் கொள்க.

குற்றங்காட்டிய வாயில் பெட்பினும் - அங்ஙனந் தலைவற்கு நிகழுங் குற்றங்களை வெளிப்படக் காட்டிய பாங்கன் அவன் ஆற்றாமை மிகுதி கண்டு அதனை நீக்குதற்கு விரும்பினும் :

அது நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்து எத்தன்மைத்து என வினாவும்.

அதுகேட்டுத் தலைவன் கழியுவகை[2] மீதூர்ந்து இன்ன விடத்து இத்தன்மைத்து என்னும்.

மீட்டுங் 'குற்றங் காட்டிய' என்றதனானே இக் கூட்டத்திற் குரிய[3] கூற்றாகிச் சான்றோர் செய்யுட்கண் வேறுபட வருவன வெல்லாங் கொள்க.

---

1. உலகத்து நிலைநிற்கும் நற்பண்புகளை 'நிற்பவை' எனவும், தலைவனது நெஞ்சின்கண் நிகழும் வருத்தங்களை 'நிகழ்பவை' எனவும் கொண்டு, நிற்பவை நினைந்து கழறியுரைத்தலைப் பாங்கன் கூற்றாகவும், அதனை எதிர்மறுத்துத் தன் நெஞ்சின் நிகழ்பவை உரைத்தலைத் தலைவன் கூற்றாகவும், இருவேறு துறை-களாகப் பகுத்து நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார். 'நிற்பவை' என்றது இல்லற வினையை எனக் கொள்வர் இளம்பூரணர். 'நிற்பவை நினைஇ, என்பதனைப் பாங்கன் கூற்றாகப் பகுத்துரைக்குங்கால், 'நிற்பவை நினைஇக் கழறியுரைப்பினும்' எனக் 'கழறி' என்னும் ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. நினைஇ—நினைப்பித்து; பிறவினை; தலைவன் நினைக்குமாறு செய்வித்து என்பது.

2. கழியுவகை - மிக்க மகிழ்ச்சி.

3. இக்கூட்டம் என்றது, பாங்கற் கூட்டத்தினை.

இனிப் பாங்கன் தலைவி தன்மை தலைவற்குக் கூறுவனவும் இடங்காட்டுவனவுஞ் சான்றோர் செய்யுளுள் வருப்வழிக் காண்க. ஆண்டுச் சென்ற தலைவன் இடந்தலைப்பாட்டிற் கூறியவாற்றானே கூடுதல் கொள்க. அங்ஙனம் கூடிநின்று அவன் மகிழ்ந்து கூறுவனவும் பிறவுங்கொள்க.

> "வேட்ட பொழுதின் அவையவை போலுமே
> தோட்டார் கதுப்பினாள் தோள்." (குறள். 1105)

> "எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்
> ஒண்ணுத லரிவையொடு மென்மெல இயலி
> வந்திசின் வாழியோ மடந்தை
> தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே."
> (ஐங்குறு. 175)

இது பாங்கற் கூட்டங்கூடி நீங்குந் தலைவன் நீ வருமிடத்து நின் தோழியோடும் வரல்வேண்டுமெனத் தலைவிக்குக் கூறியது.

> "நெய்வளர் ஐம்பால் நேரிழை மாதரை
> மெய்ந்நிலை திரியா மேதகு சுற்றமொ
> டெய்துத லரிதென் றின்னண மிரங்கிக்
> கையறு நெஞ்சமொடு கவன்றுநனி பெயர்ந்தவென்
> பைத லுள்ளம் பரிவு நீக்கித்
> தெய்வத் தன்ன தெரியிழை மென்றோள்
> எய்தத் தந்த ஏந்தலொ டென்னிடை
> நற்பாற் கேண்மை நாடொறு மெய்த
> அப்பாற் பிறப்பினும் பெறுகமற் றெமக்கே."

அங்ஙனங் கூடிநின்று தலைவன் பாங்கனை உண்மகிழ்ந்து உரைத்தது.

இவன் பெரும்பான்மை பார்ப்பானாம்.

இத்துணையும் பாங்கற்கூட்டம்.[1]

பெட்டவாயில் பெற்று[2] இரவு வலியுறுப்பினும் - அங்ஙனம் அவனைப் புணைபெற்றுநின்ற தலைவன் தலைவிக்கு வாயிலாதற்கு

1. இத்துணையும் - குற்றங்காட்டியவாயில் பெட்பினும் எனவரும் இவ்வளவும்.

2. பெட்டவாயில் - தலைவியாற் பேணப்பட்டவளாய்த் தனக்கு (தலைமகனுக்கு) வாயிலாந்தன்மையுடைய தோழி. வாயிலைப் பெறுதலாவது தலைமகனது நோக்காகிய குறிப்பினால் தோழியை வாயிலாக அறிதல்.

உரியாரை யாராய்ந்து பலருள்ளுந் தலைவியாற் பேணப்பட்டாள் தனக்கு வாயிலாந் தன்மையையுடைய தோழியை அவள் குறிப்பினான் வாயிலாகப் பெற்று இவளை இரந்துபின் னிற்பலென வலிப்பினும்:

மறைந்து தலைவியைக் கண்டு நின்றான் அவட்கு அவள்[1] இன்றியமையாமை கண்டு அவளை[2] வாயிலெனத் துணியும்.

*உ-ம்- ''தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்*
*கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்*
*புணைகை விட்டுப் புனலோ டொழுகின்*
*ஆண்டும் வருகுவள் போலும் மாண்ட*
*மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்*
*செவ்வெரிந் உறழுங் கொழுங்கடை மழைக்கண்*
*துளிதலைத் தலைஇய தளிரன் னோளே.''* (குறுந். 22)

இது தலைவி அவட்கு இனையளென்று கருதி அவளை வாயிலாகத் துணிந்தது. அன்றித் தோழி கூற்றெனில் தலைவியை அருமை கூறினன்றி இக் குறை முடிப்பலென ஏற்றுக் கொள்ளாள் தனக்கு ஏதமாமென்று அஞ்சி; அன்றியுந் தானே குறையுறுகின்றாற்கு இது கூறிப் பயந்தூஉமின்று.[3]

*''மருந்தில் தீராது மணியின் ஆகாது*
*அருந்தவ முயற்சியின் அகறலும் அரிதே*
*தான்செய் நோய்க்குத் தான் மருந் தாகிய*
*தேனிமிர் நறவின் தேறல் போல*
*நீதர வந்த நிறையழி துயரநின்*
*ஆடுகொடி மருங்குல்நின் அருளின் அல்லது*
*பிறிதில் தீரா தென்பது பின்நின்று*

1. அவட்கு அவள் - தலைவியாகிய அவட்குத் தோழியாகிய அவள்.

2. அவளை - அத்தோழியை.

3. தலைவன் தனக்குட் கூறிக்கொண்டதாக இங்கு எடுத்துக் காட்டப்பெற்ற குறுந்தொகை 222 ஆம் பாடல், இறையனார் களவியல் ஒன்பதாம் சூத்திரவுரையில் 'உடன்பட்டு விலக்கல்' என்னுந் தோழி கூற்றுக்கு உதாரணமாகக் காட்டப் பட்டுள்ளது. இப்பாடலைத் தோழியின் கூற்றாகக் கொள்ளுதல் தலைவியின் அருமைக்கும் அவட்கு ஏதும் வருமோ என்று அஞ்சும் தோழியின் உட்கோளுக்கும் பொருந்தாது என நச்சினார்க்கினியர் மறுத்தவாறு.

*அறியக் கூறுகம் எழுமோ நெஞ்சே*
*நாடுவிளங்கு ஒண்புகழ் நடுதல் வேண்டித்தன*
*ஆடுமழைத் தடக்கை அறுத்துமுறை நிறுத்த*
*பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்*
*கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்து*
*விளங்குமுத் துறைக்கும் வெண்பல்*
*பன்மாண் சாயல் பரதவர் மகட்கே''*

என்னுஞ் செய்யுள் இரவு வலியுற்றது.

ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும் நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறும் பகுதியும்-தோழியை இரந்து பின்னிற்றலை வலித்த தலைவன்[1] தலைவியுந் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்வி பார்த்தாயினுந், தோழி தனித்துழி யாயினும், நும்பதியும் பெயரும் யாவை யெனவும் ஈண்டு யான் கெடுத்தவை காட்டுமினெனவும், அனையன பிறவற்றையும் அகத் தெழுந்ததோர் இன்னீர்மை தோன்றும் இக்கூற்று வேறோர் கருத்து உடைத்தென அவள் கருதுமாற்றானும் அமையச் சொல்லித், தோழியைத் தன் குறையறிவிக்கும் கூறுபாடும் :[2]

வினாவுவான் ஏதிலர்போல ஊரினை முன் வினாய்ச் சிறிது உறவு தோன்றப் பெயரினைப் பின்வினாய் அவ் விரண்டினும் மாற்றம் பெறாதான் ஒன்று கெடுத்தானாகவும் அதனை அவர் கண்டார் போலவும் கூறினான். இவன் எண்ணினாயதோர் குறையுடையனென்று அவள் கருதக் கூறுமென்பார் 'நிரம்ப'[3]

---

1. 'இரந்து பின்னிற்பல்' என வலித்தலாவது, தலைமகனாகிய தான் பணிப்பெண்ணாகிய தோழியின் பின் சென்று இரந்து நிற்றல் இழிவு எனத்தன் உள்ளம் தளராதவாறு 'யான் தோழியாகிய இவளை இரந்து பின்னின்று எனது குறையினை முடித்துக் கொள்வேன்' எனத் தலைமகன் தனது வேட்கைக்குத் துணை நிற்கும்படி தனது நெஞ்சினை வன்மையுடையதாக்கிக் கொள்ளுதல்;

> ''இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
> வன்மையின் வன்பாட்ட தில்'' (குறள். 1063)

என்றவாறு 'இரந்து தீர்வாம்' என்னும் வன்மையினையுடையனாதல்.

2. நிரம்ப - அமைய; தனது கருத்து நிறைவேற.

3. குறையுறுதல் - தன் குறையறிவித்தல்.

வென்றார். கெடுதியாவன,[1] யானை புலி முதலியனவும் நெஞ்சும் உணர்வும் இழந்தேன் அவை கண்டீரோ வெனவும் வினாவுவன பலவுமாம்.

'பிறவு' மென்றதனால் வழிவினாதலுந் தன்னோடு அவரிடை உறவு தோன்றற்பாலனவுங் கூறுதலுங் கொள்க.

குறையுறூஉம் பகுதி, குறையுறு பகுதி எனவுமாம்; எனவே குறையுறுவார் சொல்லுமாற்றானே கண்ணி முதலிய கையுறையோடு சேறலுங் கொள்க. பகுதியென வரையாது கூறலில் தனித்துழிப் பகுதி முதலியனவும் இருவருமுள்வழி இவன் தலைப்பெய்தியுடையன் எனத் தோழி உணருமாறும் வினாவுதல் கொள்க. இவை குறையுறவுணர்தலும் இருவருமுள்வழி அவன் வரவுணர்தலுமாம். முன்னுறவுணர்தல் 'நாற்றமுந் தோற்றமும்' (தொல்.பொ.114) என்புழிக் கூறுப. மதியுடம்பாடு மூவகையவென மேற்கூறுப.

தோழி குறை அவட் சார்த்தி மெய்யுறக்[2] கூறலும் - தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாய் இருந்ததென்று அவள்மேலே சேர்த்தி அதனை உண்மையென்று உணரத் தலைவன் கூறுதலும் :

> "குன்ற நாடன் குன்றத்துக் கவாஅன்
> பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
> அஞ்சி லோதி யசையியற் கொடிச்சி
> கண்போன் மலர்தலு மரிதிவள்
> தன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே." (ஐங்குறு. 299)

இஃது இருவரும் உள்வழி வந்த தலைவன் தலைவி தன்மை கூறவே இவள்கண்ணது இவன் வேட்கையென்று தோழி குறிப்பான் உணரக் கூறியது.

குன்றநாடன், முருகன் ; அவள் தந்தையுமாம்.

இது முதலியவற்றைத் தலைவன் கூற்றாகவே கூறாது தோழி கூறினாளாகக் கூறி அவ்விடத்துத் தலைவன் மடன்மா கூறுமென்று

1. கெடுதியாவன - தனக்குரியவாகும் நிலைமைக்கண் தன்னைவிட்டுத் தவறிய பொருள்கள்.

2. மெய்யுற - மெய்யென்று உணர. கூறல் - தலைவன் கூறல், அவள் என்றது தலைவியை.

பொருள்கூறின், 'நாற்றமுந் தோற்றமும்' (தொல். பொ. 114) என்னுஞ் சூத்திரத்துத் தோழி இவற்றையே கூறினாளென்றல்[1] வேண்டாவாம், அது கூறியது கூறலாமாகலின்.

தண்டாது இரப்பினும் - இடந்தலைப்பாடு முதலிய கூட்டங்களான் அமையாது பின்னும் பகற்குறியையும் இரவுக் குறியையும் வேண்டினும் :

உ-ம்: *''கொண்டன் மாமழை குடக்கேர்பு குழைத்த*
*சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்*
*வகைசே ரைம்பா றகைபெற வாரிப்*
*புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்*
*பெருங்கண் ணாயம் உவப்பத் தந்தை*
*நெடுந்தேர் வழங்கும் நிலவுமணன் முற்றத்துப்*
*பந்தொடு பெயரும் பரிவி லாட்டி*
*அருளினும் அருளா ளாயினும் பெரிதழிந்து*
*பின்னிலை முனியன்மா நெஞ்சே யென்னதூஉம்*
*அருந்துய ரவலந் தீர்க்கும்*
*மருந்துபிறி தில்லை யானுற்ற நோய்க்கே.''*

(நற்றிணை, 140)

இதில் பரிவிலாட்டியையென இரண்டாவது விரிக்க.

*''கடுந்தே ரேறியுங் காலிற் சென்றும்*
*கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்*
*கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்*
*புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு*
*வைகலும் இனைய மாகவும் செய்தார்ப்*
*பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை*
*யொளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருத*
*பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போலப்*
*பின்னிலை முனியா நம்வயின்*
*என்னென நினையுங்கொல் பரதவர் மகளே.''*

(நற்றிணை, 349)

தோழி நம்வயிற் பரதவர்மகளை யென்னென நினையுங்கொலென்க.

1. இங்ஙனம் கூறியவர் இளம்பூரணர்.

*"பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்*
*தாலொத்த வைவனங் காப்பாள்கண்—வேலொத்தென்*
*நெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பா ளெவன்கொலோ*
*வஞ்சாயற் கேநோவல் யான்."* (திணை. நூற்.19)

இவை பஃற்குறி இரந்தன.

*"எல்லும் எல்லின் றசைவுபெரி துடையன்*
*மெல்லிலைப் பரப்பின் விருந்துண வொருவன்"*
(அகம். 110 : 11-12)

எனத் தலைவன் இரவுக்குறி வேண்டியதனைத் தோழி கூறிய வாறு காண்க. இன்னும் 'இரட்டுற மொழிதல்' என்பதனால், 'தண்டாது' என்பதற்குத் தவிராது இரப்பினு மெனப் பொருள்-கூறிக், கையுறை கொண்டுவந்து கூறுவனவும், நீரேவுவன யான் செய்வேனெனக் கூறுவனவுந், தோழி நின்னாற் கருதப்படுவாளை அறியேனென்றுழி அவன் அறியக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.[1]

உ-ம்: *"கவளக் களியியன்மால் யானைசிற் றாளி*
*தவழத்தா னில்லா ததுபோல்—பவளக்*
*கடிகை யிடைமுத்தம் காண்டொறு நில்லா*
*தொடிகை யிடைமுத்தம் தொக்கு."* (திணை. நூற். 42)

நின் வாயிதழையும் எயிற்றையும் காணுந்தோறும் நில்லா என் கையிடத்தில் இருக்கின்ற பவளக்கொடியும் முத்தும் என்க.[2]

**மற்றைய வழியும்** - குறியெதிர்ப்பட்டுங் கையுறை மறுக்கப் பட்டுங் கொடுக்கப்பெற்றும் இரந்து பின்னின்றான் அங்ஙனங் குறி-யெதிர்ப்பாடின்றி ஆற்றானாய் இரந்து பின்னிற்றலை மாறுமவ்-விடத்தும் :

**சொல்லவற் சார்தலிற் புல்லிய வகையினும்** - தான் வருந்திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூறலின் இவ்வாறு ஆற்றானாய் இங்ஙனங் கூறினானென்று அஞ்சித் தோழி உணராமல் தலைவி தானே கூடிய பகுதியினும் :

1. பாடற் பொருளைத் துறையொடு தொடர்பு படுத்தியுணர்தற்கு இக்-குறிப்பு வரையப் பெற்றுளது.

2. மேற்கோட் செய்யுளின் பொருளைச் சொல் முடிவு காட்டி விளக்கும் முறையில் இக்குறிப்பு வரையப்பெற்றுளது.

*"களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்"*
(தொல். பொ. கள. 29)

என்பதனால் தலைவியாற் குறிபெற்றுந் தோழியை இரக்கும்.

'வகை' யென்றதனானே இதனின் வேறுபட வருவனவுங் கொள்க.

அறிந்தோள் அயர்ப்பின்[1] அவ்வழி மருங்கிற் கேடும் பீடுங் கூறலும் - மதியுடம்பட்ட தோழி நீர் கூறிய குறையை யான் மறந்தேனெனக் கூறுமாயின், அவ்விடத்துத் தன்னொடு கூடாமையால் தலைவிமருங்கிற் பிறந்த கேட்டையும், அவள் அதனை ஆற்றியிருந்த பெருமையையும் கூறுதலும்:

தோழி நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி - தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து:

உம்மை, சிறப்பு. இதுவே மடன்மா கூறுவதற்கு ஏதுவாயிற்று.

மடன்மாகூறும் இடனுமாருண்டே - அச் சேட்படையான் மடலேறுவலெனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு.

நோக்கி மடன்மா கூறுமென்க. உம்மையான் வரைபாய்வலெனக் கூறும் இடனும் உண்டென்றவாறு.

உ-ம்: *"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடன்*
*மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி*
*வெள்ளென் பணிந்துபிறர் எள்ளத் தோன்றி*
*ஒருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்*
*தெருவி னியலவுந் தருவது கொல்லோ*
*கலிழ்தவி ரசைநடைப் பேதை*
*மெலிந்தில ளாம்விடற் கமைந்த தூதே."* (குறுந். 182)

இது நெஞ்சொடு கிளத்தல்.

*"நாணாக நாறு நனைகுழலாள் நல்கித்தன்*
*பூணாக நேர்வளரும் போகாது—பூணாக*
*மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமேல்*
*நின்றேன் மறுகிடையே நேர்ந்து."* (திணை. நூற். 16)

இது தோழிக்குக் கூறியது.

---

1. அயர்த்தல் —மறத்தல்.

இவை சாக்காடு குறித்தன.

*''மாவென மடலும் ஊர்ப பூவெனக்*
*குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப*
*மறுகின் ஆர்க்கவும் படுப*
*பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே.''* (குறுந். 17)

இதனுட் 'பிறிதுமாகுப' என்றது வரைபாய்தலை.

'இட' னென்றதனால் தோழி பெரியோர்க்குத் தகாதென்ற வழித் தலைவன் மறுத்துக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவும் கொள்க.

*''நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்*
*காமுற்றார் ஏறு மடல்''* (குறள். 1133)

எனவரும்.

இனி 'இடனும்' என்ற உம்மையைப் பிரித்து நிறீஇ இருநான்கு கிளவியும் மகிழ்ச்சியுங் கலங்கலுங் கூறும் இடனும் உண்டு, உரைப்பினும் பெட்பினு முவப்பினு மிரப்பினும் வகையினும் கூறும் இடனும் உண்டு, பகுதிக்கண்ணும் மற்றைய வழிக்கண்ணுங் கூறும் இடனும் உண்டு, மெய்யுறக் கூறலும் பீடுங்கூறலும் உண்டென முடிக்க. (11)

**ஆய்வுரை**

இஃது, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியிற் கூட்டம் என்னும் களவிற் கூட்டத்தின்கண் தலைவன் கூற்று நிகழ்த்துமாறும் காதல் மிக்கு ஆற்றாமை எல்லை கடந்த நிலையில் தலைவனுக்குளதாம் நிலையும் கூறுகின்றது.

(இ-ள்.) பெருமையும் உரனும் உடைய தலைவன் காதல் மீதூர்ந்த நிலையில் தனக்குச் சிறந்தாள் எனத் தெளிந்த தலைமகளது மெய்யினைத் தீண்டிப் பழகுதலும், விளையாட்டின்கண் அவள் நலத்தைப் பாராட்டியுரைத்தலும், அவள் நின்ற இடத்தை நெருங்கிநின்று அன்பொடு தழீஇய சொற்களைக் கூறுதலும், (தலைவனது ஊற்றுணர்வு என்றும் பயிலாததன் மெல்லியல் மெய்யிற்படுதலால் நாணமுடையளாகிய தலைமகள், அவ்விடத்திலுள்ள

மரக்கிளைகளையும் கொடிகளையும் தனக்குச் சார்பாகக் கொண்டு மறைந்து ஒல்கி நின்றாளாக, அதுகண்ட தலைமகன்) தனது ஊற்றின்பத்திற்கு இடையூறாக நின்ற தடைகளை எடுத்துரைத்தலும், தலைமகளை மெய்யுறுதற்குரிய காலம் வாய்க்காமையை எண்ணி வருந்துதலும், பின்னர் மெய்யுறுதலும், மேற்கூறியவற்றுடன் இன்ப நுகர்ச்சியினையும் விரைவாகப் பெற்றவிடத்து, 'நின்னைப் பிரியேன்' எனத் தலைவிக்குத் தான் பிரியாமைக்கு ஏதுவாகிய தெளிவுரை பகர்தலும் ஆகிய நிலைபெயராச் சிறப்பினவாகிய எட்டுவகைக் கூற்றும், முன் கூட்டம் பெற்ற இடத்தினையே மீண்டுந் தலைப்பட்டுக் கூடி மகிழ்தலும், தலைமகளைப் பிரிந்தவழிக் கலக்கமுறுதலும், என்றும் நிலைநிற்பனவாகிய இல்லறப் பண்புகளை நினைந்து மேல் நிகழ்வனவற்றை எடுத்துரைக்குமிடத்தும், தன்பால் சேர்வு மிகுதியாலும் காதல் மிகுதியாலும் நேரும் குற்றங்களை எடுத்துக் காட்டி இடித்துரைக்கும் உயிர்த்தோழனாகிய பாங்கன் தனது களவொழுக்கத்தை ஏற்று உடன்பட்ட இடத்தும், தலைமகளால் விரும்பப்பட்ட உயிர்த்தோழியை வாயிலாகப்பெற்று அவளை இரந்து பின்னின்று அவள் கூட்டக் கூடுவேன் எனக் கருதி அங்ஙனம் இரத்தலை மேற்கொள்ளுமிடத்தும், ஊரும் பேரும் தான் இழந்தனவும் பிறவும் ஆகியவற்றை வினவுமுகத்தால் தன் மனக்கருத்துப் புதுக்கலத்துப் பெய்த நீர் புறம் பொசியுமாறுபோன்று குறிப்பிற் புலனாகத் தோழியைக் குறையிரந்து நிற்கும் பகுதியும், தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியைக் குறித்ததாக இருந்ததென்று அவள்பாற் சார்த்தி எண்ணும் நிலையிற் சில கூறுதலும், தடைபடாது பலமுறையுஞ் சென்று இரத்தலும், மற்றைய வழியும் தலைவன் வருந்திக் கூறுகின்ற சொல்லினைத் தலைவியொடு சார்த்திக் கூறுதலின் முன்னுறுபுணர்ச்சி முறையே யடைகவெனவும் தலைவி பேதைத் தன்மையள் எனவும், இவ்வாறு ஒழுகுதலாற் கேடு உண்டாகும் எனவும், இவ்வொழுக்கம் நின்பெருமைக்கு ஏலாது எனவும் கூறித் தோழி தலைவனை அவ்விடத்தினின்றும் அஞ்சி நீங்குதலாலுளதாய வருத்த நிலைமையும் நோக்கி மடலேறுவேன் எனக் கூறும் இடமும் தலைவனுக்கு உண்டு எ-று.

௫௦. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே.

**இளம்பூரணம்**

என்—எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் தலைமகன் 'மடல்மா கூறும் இடனுமாருண்டே' என்றார், இஃது அவன் மடல்மா கூறுதற்கு நிமித்தமாகிய நீக்கத்தினை மாறுபட்டுக் கூறாத் தலைமகள் இயல்பைக் கூறிப் பெயர்ப்பினும், அஃதறிந்து தாம் உடன்படத் தலைமகன் வருத்தத்தினான் மெலிகின்றமை கூறிய இடத்தினும், தலைமகன் குறையை மறுப்புழி அன்பு தோன்றத் தக்க இடத்தும், தோழி உடன்பாடுற்றவழியும், தலைமகனும் மேற்சொல்லப்பட்ட மடல்மா கூறுதல் இடையூறுபடுதலும் தோழியிற் கூட்டத்திற்கு இயல்பு என்றவாறு.[1]

உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

பண்பிற் பெயர்ப்பினும் — தலைமகள் இளமைப்பண்பு கூறிப் பெயர்த்த வழித் தலைமகன் கூறியது. அதற்குச் செய்யுள்:—

*"குன்றக் குறவன் காதல் மடமகள்*
*வண்டுபடு கூந்தல் தண்தழைக் கொடிச்சி*
*வளையள் முளைவாள் எயிற்றள்*
*இளைய ளாயினும் ஆரணங் கினளே."* (ஐங்குறு. 256)

பரிவுற்று மெலியினும் — பரிந்த வுள்ளத்துடன் மெலிதலுறுதலும். பரிவுற்றுத் தோழி மெலிதலாவது 'உடம்படுவளியாள்' என்றாற்போல வருவது. அவ்வழித் தலைமகன் கூற்று:—

*"தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு*
*மாலை உழைக்குந் துயர்."* (குறள். 1135)

அன்புற்று நகினும் — அன்பு தோன்றும் உள்ளத்துடன் நக்ககாலும் கூற்று நிகழும். அன்புற்று நக்கவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்: —

*"நயனின் மையிற் பயனிது என்னாது*
*பூம்பொறிப் பொலிந்த அழலுமிழ் அகன்பைப்*
*பாம்புயிர் அணங்கி யாங்கும் ஈங்கிது*

1. 'அன்புதோன்ற நக்கவிடத்தும்' எனத் திருத்துக.

*தகாஅது வாழியோ குறுமகள் நகாஅது*
*உரைமதி யுடையுமென் உள்ளஞ் சாரல்*
*கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப்*
*பச்சூன் பெய்த பகழி போலச்*
*சேயரி பரந்த ஆயிழை மழைக்கண்*
*உறாஅ நோக்க முற்றவென்*
*பைதல் நெஞ்சம் உய்யு மாறே"* (நற்றிணை, 75)

அவட்பெற்று மலியினும்—தோழி உடம்பாட்டினைப் பெற்று மகிழல். இரட்டுற மொழிதலான் தலைமகளை இருவகைக் குறி-யினும் பெற்று மகிழினும் என்றும் கொள்க.

உ-ம்:- *"எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்*
*நன்னுதல் அரிவையொடு மென்மெல இயலி*
*வந்திசின் வாழியோ மடந்தை*
*தொண்டி அன்ன நின் பண்புபல கொண்டே."*
(ஐங்குறு. 175)

இது அவட்பெற்று மலியுந் தலைவன் கூற்று.

இனி, உள்ளப்புணர்ச்சியா னின்றி யியற்கை யிடையீடுபட்டுழி, பின் தலைமகள் குறியிடங் கூறியவழி யதனைப் பாங்கற் குரைத்-தற்குச் செய்யுள்:—

*"அணங்குடைப் பணித்துறைத் தொண்டி அன்ன*
*மணங்கமழ் பொழிற்குறி நல்கினள் நுணங்கிழைப்*
*பொங்கரி பரந்த உண்கண்*
*அங்கலிழ் மேனி அசையியல் எமக்கே."*
(ஐங்குறு. 174)

எனவுஞ் சிறுபான்மை வரும்.

*"காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்*
*மாணிழை கண்ஒவ்வேம் என்று."* (குறள். 1114)

இது தலைவியைப் பகற்குறிக்கண் பெற்று மலிதல்.

*"மதியும் மடந்தை முகனும் அறியா*
*பதியிற் கலங்கிய மீன்."* (குறள். 1116)

இஃது இரவுக்குறிக்கண் தலைவன் அவட்பெற்று மலிந்தது.

*"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்*
*காதலை வாழி மதி"* (குறள். 1118)

என்பதும் அது.

ஆற்றிடை உறுதலும்—தான்சேறும் ஆற்றிடை இடையூறு உண்டாய விடத்தும் கூற்று நிகழும். இரட்டுற மொழிவான் வரைவிடை வைத்துப் பிரிந்தான், தான் சேறும் ஆற்றின்கண் வருத்தமுற்றுக் கூறலும் கொள்ளப்படும்.[1]

*"குருதி வேட்கை உருகெழு வயமான்*
*வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்*
*மரம்பயில் சோலை மலியப் பூழியர்*
*உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்*
*மாரி எண்கின் மலைச்சுர நீளிடை*
*நீநயந்து வருதல் எவனெனப் பலபுலந்து*
*அழுதனை உறையும் அம்மா அரிவை*
*பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்*
*பூதம் புணர்த்த புதிதியல் பாவை*
*விரிகதிர் இளவெயில் தோன்றி அன்னநின்*
*ஆய்நலம் உள்ளி வரினெமக்கு*
*ஏமம் ஆகும் மலைமுதல் ஆறே"* (நற்றிணை, 192)

இந் நற்றிணைப்பாட்டு தலைவி ஆற்றினது அருமை செப்பத் தலைவன் செப்பியது.

*"ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்*
*தூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிச்*

1. 'ஆற்றிடையுறுதலும் — தலைமகன் மேற்சொல்லப்பட்ட மடன்மா கூறுதல் தடைப்படுதலு' எனமுன்வரைந்த பொழிப்புரைக்கும் "தான்சேறும் ஆற்றிடை இடையூறு உண்டாய விடத்தும்" எனப் பின்வரும் பதவுரை விளக்கத்திற்கும் வேறுபாடுண்மை நோக்குக. 'அவ்வினை' என்றது தோழியிற் கூட்டத்தை.

*கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி*
*மரையினம் ஆரும் முன்றிற்*
*புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே"*

(குறுந். 235)

இக் குறுந்தொகைப் பாட்டு தலைவன் வரைவிடத்துச் சேறுவான் கூறியது.

**நச்சினார்க்கினியம்**

இதுவும் இரந்து பின்னிற்புழித் தலைவன் கூற்று நிகழுமாறு கூறுகின்றது. (கஉ)

(இ - ள்.) பண்பிற் பெயர்ப்பினும்[1] - தோழி தலைவியது இளமை முதலிய பண்புகூறி அவ் வேட்கையை மீட்பினும்:

உ-ம்: *"குன்றக் குறவன் காதன் மடமகள்*
*வண்டுபடு கூந்தல் தண்டழைக் கொடிச்சி*
*வளையண் முளைவா ளெயிற்றள்*
*இளைய ளாயினும் ஆரணங் கினளே"*

(ஐங்குறு.256)

இஃது இளையளெனப் பெயர்த்துழித் தலைவன் கூறியது.

பரிவுற்று மெலியினும்[2] இருவகைக் குறியிடத்துந் தலைவியை எதிர்ப்படும் ஞான்றும் எதிர்ப்பட்ட ஞான்றும் எதிர்ப்படாநின்ற ஞான்றும் பலவாயவழி அவன் பரிந்த உள்ளத்தனாய் மெலியினும்:

இன்னும் 'பரிவுற்று மெலியினும்' என்றதனானே புணர்ந்து நீங்குந் தலைவன் ஆற்றாது உறுவனவும், வறும்புனங்கண்டு கூறுவனவும், இற்செறிப்பறிவுறுப்ப ஆற்றானாய்க் கூறுவனவும், தோழி இற்புணர்ச்சிக்கண்[3] தன்னிலைக் கொளீஇக் கூறுவனவும், இரவுக் குறிக்கண் வருகின்றான் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அமைக்க.

---

1. பெயர்த்தல் — மீட்டல்.
2. பரிவுற்றுமெலிதல் — பரிவுடைய உள்ளத்தனாய் மெலிதல்.
3. 'தோழியிற்புணர்ச்சிக்கண்' என்ற தொடரைச் சேர்க்க.

*''மயில்கொல் மடவாள்கொல் மாநீர்த் திரையுள்*
*பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்—குயில்பயிலும்*
*கண்ணி யிளஞாழல் பூம்பொழில் நோக்கிய*
*கண்ணின் வருந்துமென் னெஞ்சு''* (திணை. ஐம்.49)

என வரும்.

அன்பு உற்று நகினும் [1]- தோழி குறைமறுப்புழி அன்பு தோன்ற நகினும்:

உ-ம்: *''நயனின் மையிற் பயனிது வென்னாது*
*பூம்பொறிப் பொலிந்த வழலுமி ழகன்மைப்*
*பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது*
*தகாஅது வாழியோ குறுமக ணகா அது...''*
(நற்றிணை, 75)

இஃது அன்புற்று நக்குழித் தலைவன் கூறியது.

அவட்பெற்று[2] மலியினும்-தோழி உடம்பாடு பெற்று மனம் மகிழினும்:

இன்னும் 'அவட்பெற்று மலியினும்' என்றதற்கு, இரட்டுற மொழிதலென்றதனாற், றலைவியைப் பகற்குறியினும் இரவுக் குறியினும் பெற்று மகிழினும் என்று பொருளுரைக்க.[3]

*''நன்றே செய்த வுதவி நன்று தெரிந்து*
*யாமென் செய்குவ நெஞ்சே காமர்*
*மெல்லியல் கொடிச்சி காப்பப்*
*பல்குரல் ஏனற் பாத்தருங் கிளியே.''*
(ஐங்குறு. 288)

இது பகற்குறிக்கண் கிளி புனத்தின்கண்கட் படிகின்ற தென்று தலைவியைக் காக்க ஏவியதனை அறிந்த தலைவன் அவளைப் பெற்றேமென மகிழ்ந்து கூறியது.

*''காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்*
*மாணிழை கண்ணொவ்வே மென்று.''*
(குறள். 1144)

இஃது இரவுக்குறிக்கண் அவட்பெற்று மலிந்தது.

1. அன்புற்று நகுதலாவது, அவன்பால் உள்ள அன்பு புலப்பட நகைத்தல்.

2. அவட் பெற்று — அவளது (தோழியது) உடன்பாட்டினைப் பெற்று;

3. இனி, அவள் என்றது தலைவியை எனக் கொண்டு, 'தலைவியைப் பகற்குறியினும் இரவுக் குறியினும் பெற்ற' என இரட்டுற மொழிதலாகக் கொள்வர்.

ஆற்றிடை உறுதலும்[1] - தலைவன் செல்லும் நெறிக்கண் இடையூறு தோன்றின இடத்தும்:

என்றது, தலைவியுந் தோழியும் வருவழியருமை கூறியவழித் தலைவன் கூற்று நிகழுமென்றவாறு.

உ-ம்: "குருதி வேட்கை யுருகெழு வயமான்
வலமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயில் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவி னாண்மேய லாரு
மாரி யெண்கின் மலைச்சுர நீளிடை
நீநயந்து வருத லெவனெனப் பலபுலந்
தழுதனை யுறையும் அம்மா வரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதிர் இளவெயிற் றோன்றி யன்னநின்
ஆய்நலம் உள்ளி வரினெமக்
கேம மாகு மலைமுத லாறே" (நற்றிணை. 132)

எனத் தலைவி ஆற்றினதருமை கூறியதற்குத் தலைவன் கூறியது.

இரட்டுறமொழித லென்பதனான், 'ஆற்றிடையுறுத'ற்கு வரைவிடைவைத்துப் பிரிந்தான் ஆற்றிடை வருத்தமுற்றுக் கூறுவன-வுங் கொள்க.[2] அது போகின்றான் கூறுவனவும் மீண்டவன் பாங்-கற்குக் கூறுவனவுமாம்.

"ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
தூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் தண்ணுமை யதுவே நெல்லி
மரையின மாரு முன்றில்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே." (குறுந். 235)

1. ஆறு — தலைவன் செல்லும் வழி. உறுதல் — இடையூறு உண்டாதல் 'உறுதற்கண்ணும்' எனக் கண்ணுருபு விரித்துரைப்பர்.

2. இனி, 'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தான் வழியிடை வருத்தமுற்றுக் கூறுவனவும்' இரட்டுறமொழிதலாற் கொள்ளப்படும்.

*"கவலை கெண்டிய கல்வாய்ச் சிறுகுழி*
*கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்*
*பொன்செய் பேழை மூய்திறந் தன்ன*
*காரெதிர் புறவி னதுவே யுயர்ந்தோர்க்கு*
*நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்*
*வரைகோ ளறியாச் சொன்றி*
*நிரைகோற் குறுந்தொடி தந்தை யூரே."* (குறுந். 233)

அவ் வினைக்கு இயல்பே-அத்தோழியிற் கூட்டத்திடத்துத் தலைவன் கூற்று நிகழ்வதாகிய இலக்கணமாம் என்றவாறு. (12)[1]

**ஆய்வுரை**

இது, தோழியிற் கூட்டத்தின் தலைமகனுக்குரியதோர் இயல்புணர்த்து நின்றது.

(இ-ள்.) தலைமகளது இளமைப்பண்பினைத் தோழி எடுத்துக் கூறித் தலைவனை அவ்விடத்திருந்து பெயர்த்த வழியும், வருத்தத்தினால் மெலிகின்றமை கூறியவிடத்தும், தலைமகன்து குறையை மறுக்குந்தோழி அன்பு தோன்ற நகைத்த நிலையிலும், அவளது உடன்பாட்டினைப் பெற்று மகிழுமிடத்தும், தான் செல்லும் வழியிடை இடையூறுண்டாமிடத்தும் தோழியிற் கூட்டமாகிய அவ்வினைக்கண் (தலைவன் கூற்று நிகழ்தல்) இயல்பாம் எ-று.

௰௩. பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப.

**இளம்பூரணம்**

என்-எனின், பலவகை மணத்திற் பாங்கராயினார் துணையாகுமிடம் இத்துணையென வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

பாங்கராயினார் துணையாகக் கூடும் கூட்டம் பன்னிரண்டு வகையென்றவாறு.

நிமித்தம் என்பது நிமித்தமாகக் கூடும் கூட்டம். அக்கூட்டம் நிமித்தமென ஆகுபெயராய் நின்றது. பாங்கராற் கூட்டம் பாங்கர் நிமித்தமென வேற்றுமைத் தொகையாயிற்று. அவையாவன:— பிரமம் முதலிய நான்கும், கந்திருவப் பகுதியாகிய களவும், உடன்-

1. அவ்வினைக்கு இயல்பு — அவ்வினைக்கண் (தலைவன் கூற்று நிகழ்தல்) இயல்பு என உருபு மயக்கமாகக் கொண்டு உரை வரையப்பட்டது.

போக்கும், அதன்கண் கற்பின் பகுதியாகிய இற்கிழத்தியும், காமக்கிழத்தியும், காதற்பரத்தையும், அசுரம் முதலாகிய மூன்றுமென இவை.[1]

(கங)

**நச்சினார்க்கினியம்**

இது மேற் பாங்கிநிமித்தங் கூறிய அதிகாரத்தானே பாங்கன் நிமித்தங் கூறுகின்றார். 'வாயில்பெட்பினும்' (தொல் - பொ - கள - 11) என்ற பாங்கினிமித்தம் போலாது இது வேறுபடக் கூறலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது. என்னை? பாங்கன் தலைவியை எதிர்ப்பட்டு வந்து தலைவற்கு உரைத்தலன்றிக் காளையரொடு கன்னியரை உலகியலாற் புணர்க்குமாறு புணர்க்குந் துணையேயாகலின்.[2]

---

1. "பாங்கர் நிமித்தம்" எனப் பாடங்கொண்டு, "பலவகை மணத்திற் பாங்கராயினார் துணையாகுமிடம்" எனப் பொருளுரைப்பர் இளம்பூரணர். ஈண்டு 'நிமித்தம்' என்பது நிமித்தமாகக் கூடும் கூட்டத்திற்கு ஆகியதோர் கருவியாகுபெயர். பாங்கராற் கூடும் கூட்டம் பன்னிரண்டாவன : எண்வகை மணத்துள் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் முன்னைய நான்கும், கந்திருவப் பகுதியாகிய களவு, உடன்போக்கு, கற்பின் பகுதியாகிய இற்கிழத்தி, காமக் கிழத்தி, காதற்பரத்தை என்பன ஐந்தும், அசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் பின்னைய் மூன்றும் என்பர் இளம்பூரணர்.

ஈண்டு நிமித்தம் என்னும் சொல், காரணம் என்ற பொருளின்றிக் காரியம் என்ற பொருளில் ஆளப்படாமையானும், ஒத்த காமமாகிக் கருப்பொருளொடும் புணர்ந்த கந்தருவநெறி இடவகையால் ஐந்துவகைப்படும் என இளம்பூரணர் குறித்த ஐந்தனுள் களவும் உடன்போக்கும் நீங்கலாக இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை என்னும் மூன்றும் கற்பியலிலன்றிக் களவியலில் இடம்பெறாமையானும், முன்னைய மூன்று, பின்னர் நான்கு, முதலொடு புணர்ந்த யாழோர்மேன ஐந்திலம் என இங்குப் பகுத்துரைக்கப்பட்ட பன்னிரண்டும் இதற்கு முன்னர் இவ்வாறு நிரற்படுத்து எண்ணும் நிலையில் ஒரு தொகுதியாகத் தொல்காப்பியனாரால் கூறப்படாமையானும், இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை பற்றிய குறிப்புக்கள் இவ்வியலில் இடம்பெறாமையானும் இந்நூற்பாக்கள் நான்கற்கும் இளம்பூரணர் கூறும் பொருள் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையதாக அமையவில்லை.

2. இந்நூற்பாவில் உள்ள 'பாங்கன்' என்னுஞ் சொல் அகனைந்திணையில் வரும் பாங்கனைக் குறியாது, உலகியலிற் காளையரொடு கன்னியரை மணஞ்செய்து வைத்தற்குத் துணையாயினாரைக் குறித்து நின்றது என்பதும், ஈண்டுப் பாங்கன் எனப்பட்டான் மணமகன் மணமகள் என்னும் இருவருடைய கோத்திரங்களையும் நன்குணர்ந்து நடுநின்று திருமணத்தை நடத்திவைக்கும் பார்ப்பான் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

(இ - ள்) அகனைந்திணையும் அல்லாதவழிப் பாங்கன் கண்ணவாகிய நிமித்தம் பன்னிரு பகுதியவாம் (எ-று).

எண்வகை மணத்தினும் இடைநின்று புணாககும பார்ப்பன் இருவகைக் கோததிரம் முதலியனவுந் தானறிந்து இடைநின்று புணர்த்தல் வன்மை அவர் புணர்தற்கு நிமித்தமாதலின் அவை அவன்கண்ண வெனப்படும். இவனைப் பிரசாபதியென்ப. நிமித்தமுங் காரணமும் ஒன்று. காரணம் பன்னிரண்டெனவே காரியமும் பன்னிரண்டாம்; அவை எண்வகை மணனுமாதலின் அவற்றைக் கைக்கிளை முதலிய ஏழுதிணைக்கும் இன்னவாறு உரியவென வருகின்ற சூத்திரங்களாற் பன்னிரு பகுதியும் அடங்கக் கூறுப. அவ்வாற்றானே பிரமம் பிரசாபத்தியம் ஆரிடந் தெய்வம் எனவும், முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனவும், அசுரம் இராக்கதம் பேய் எனவும் பன்னிரண்டாம். பிரமம் முதலிய நான்கற்கும் பாங்கன் ஏதுவாகலின் இவ்வாறு பிரமசரியங் காத்தானெனவும், இவன் இன்ன கோத்திரத்தான் ஆகலின் இவட்கு உரியனெனவும், இவனை இன்னவாற்றாற் கொடுக்கத் தகுமெனவும், இன்னோனை ஆசாரியனாகக்கொண்டு வேள்வி செய்து மற்றிற் கன்னியைக் கொடுக்கத் தகுமெனவுஞ் சொல்லிப் புணர்க்குமென்பது. இனி யாழோர் கூட்டத்துள் ஐந்திணையுமாயிற் பாடலுட் பயின்ற வகையானே முதல் கரு உரிப்பொருள் வரையறை பற்றி முறை சிறந்து வருதலும் பெயர்கொளப் பெறாமையும் உடையவன்றே அவ்வாறன்றி. ஈண்டுக் கொள்கின்ற யாழோர் கூட்டத்து ஐந்திணையுமாயின் அவ்வந் நிலத்தியல்பானும் பிறபாடை யொழுக்கத்தானும் வேறுபட்ட வேறுபாடு பற்றியுஞ் சுட்டி யொருவர்ப் பெயர் கொடுத்தும் வழங்குகின்ற உலகியலான் எல்லாரையும் இடைநின்று புணர்ப்பாருள் வழி அவ்வந்நிமித்தங்களும் வேறுவேறாகி வரும் பாங்கன் நிமித்தங்களையுடைய எனப்பட்டன.[1]

இங்ஙனம் ஐந்திணைப் பகுதியும் பாங்கனிமித்தமாங்கால் வேறுபடுமெனவே, புலனெறி வழக்கிற்பட்ட இருவகைக் கைகோளும்

1. பாங்கன் நிமித்தம் — பாங்கன் கண்ணவாகிய நிமித்தம் என விரியும். நிமித்தம் — காரணம். காரணம் பன்னிரண்டு எனவே அவற்றின் காரியமும் பன்னிரண்டாம் எனக் கொண்டு, எண்வகை மணத்துள் ஒன்றாகிய கந்தருவத்தை முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என ஐந்தாக்கி அவ்வைந்துடன் பிரமம் முதலிய ஏனைய ஏழினையும் கூட்டிப் பன்னிரண்டாக விரித்துரைத்தார் நச்சினார்க்கினியர்.

போலா இவை யென்பதூஉம், அவ்வந்நிலத்தின் மக்கட்குத் தக்க மன்றலும் வேறாகலின் அவர்க்கும் பாங்கர் உளரென்பதூஉம், இவ்வாற்றான் எண்வகை மணனும் உடனோதவே இவையும் ஒழிந்த எழுவகை மணனும்போல அகப்புறமெனப்படுமென்பதூஉங் கொள்க.[1]

இனி, அசுரத் தன்மையாளைக் குரவர் இன்னவாறு கொடுப்பர், நீயுஞ் சேறியென்று ஒருவன் பாங்குபடக் கூறலும், இவனை அவட்குக் காட்டி இவன் இன்னனென்று ஒருவன் இடைநின்று கூறலும் உண்மையின், அதுவும் பாங்கனிமித்தமுடைத்து. இராக்கதத்திற்கும் இத்தன்மையாள் இன்னுழி இருந்தாளென்று பாங்காயினார் கூறக்கேட்டு ஒருவன் வலிதிற் பற்றிக் கோடலின் இதுவும் பாங்கனிமித்தமுடைத்து. பேய்க்கும் பொருந்துவது அறியாதான் இடைநின்று புணர்ப்பின் அதற்கும் அது நிமித்தமாம். இப்பன்னிரண்டுந் தொன்மையுந் தோலு (550-1) மென்ற வனப்பினுள் வருவன. (கரு)

---

1. கந்தருவ மணத்தின் பகுப்பாக இங்குச் சொல்லப்பட்ட ஐந்திணை மணங்களும் பாடலுட் பயின்ற வகையால் முதல் கரு உரிப்பொருள் வரையறை பற்றி முறை சிறந்து வருதலும் சுட்டியொருவர்ப் பெயர்கொளப் பெறாமையும் ஆகிய இயல்புடைய அன்பின் ஐந்திணை பாலன்றி அவ்வந்நிலத்தியல்பாலும் பிறமொழியாளர் வாழ்வியல் வேறுபாடுகளாலும் சுட்டியொருவர்ப் பெயர் கொடுத்தும் உலகியலிற் பலரும் அறிய நிகழ்கின்ற மணங்களாம் என்பதும் இவை அகப்புறம் எனப்படும் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

'பாங்கனிமித்தம் பன்னிரண்டென்ப' எனவரும் இந்நூற்பா களவியலில் விரித்துரைக்கப்படும் அன்பின் ஐந்திணைக் களவொழுக்கத்தில் ஒருவனும் ஒருத்தியும் கூடி அளவளாவுதற்குக் காரணமாகியவற்றைக் குறிப்பதன்றி உலகியலிற் பலரும் அறிய நிகழும் காரியங்களாகிய திருமண வகைகளைக் குறிப்பதென்றும் இப்பன்னிரண்டும் தொன்மை (புராணம்), தோல் (பொருட்டொடர் நிலையாகிய காப்பியம்) ஆகிய வனப்பினுள் வருவனவென்றும் கூறுவர் நச்சினார்க்கினியர்: கரணமொடு புணர மகட்கொடைக்குரியோர் கொடுப்ப மணமகன் கொள்வதாகிய மண முறையினைக் குறித்தலே இதன் கருத்தாயின் இந்நூற்பா களவியலில் இடம் பெறுதற்கில்லை. இது கற்பியலில் இடம் பெற்றிருத்தல் வேண்டும். அன்றியும் ஆரியர்களது ஒழுகலாறாகிய எண்வகை மணத்தைப் பற்றிய விளக்கத்திற்குத் தமிழியல் வழக்கமே நுதலிய இக்களவியல் இடமாகாமையும் இங்குக் கருதத்தகுவதாம்.

ஆய்வுரை

பாங்கா நிமித்தம் பன்னிரண் டென்ப.

இது, களவொழுக்கத்தில் தலைவன் தலைவி இருவரும் கூடுதற்கு நிமித்தமாவன இவையெனக் கூறுகின்றது.

(இ-ள்.) அன்பற்றார் இருவர் துணையாய்க் கூடுதற்கு நிமித்தாவன பன்னிரண்டு என்பர் ஆசிரியர்.

அவையாவன: காட்சி, ஐயம், துணிவு என இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னர்க் கூறிய மூன்றும், குறிப்பறிதலின் பயனாய்த் தோன்றும் வேட்கை முதல் சாக்காடு ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பதுமாகும். இவை பன்னிரண்டுமே அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக்கூட்டத்திற்குக் காரணமாவனவாதலாற் பாங்கா நிமித்தம் எனப்பட்டன. பாங்கா நிமித்தம் என்பது பாங்கு ஆம் நிமித்தம் எனப் பிரியும். பாங்கு-துணை; நிமித்தம்-காரணம். 'பாங்கா நிமித்தம்' என்பதே ஏடெழுதுவோரால் 'பாங்கர் நிமித்தம்' எனப் படிக்கப்பெற்றிருத்தல் வேண்டும். 'பாங்கர் நிமித்தம்' என்பது இளம்பூரணர் கொண்ட பாடம்.

௱௪. முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே.

இளம்பூரணம்

என்—எனின், மேற்சொல்லப்பட்ட பன்னிருவகையினும் கைக்கிளைப் பாற்படுவன வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

எண்வகை மணத்தினுள்ளும் முன்னையவாகிய அசுரம் முதல் மூன்றும்[1] கைக்கிளைப்பாற்படும் என்றவாறு.

௱௫. பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.

இளம்பூரணம்

என்—எனின், மேற்சொல்லப்பட்டவற்றுள் பெருந்திணைக்குரியன உணர்த்துதல் நுதலிற்று.

1. முன்னைய மூன்று என்பன, வேதத்திற் கூறப்பட்ட பிரமம் முதலாகவுள்ள எட்டு மணங்களுள் காலவகையாற் பிற் கூறப்படுவனவாகிய அசுரம் இராக்கதம் பைசாசம் என்னும் மூன்றும் எனவும், பின்னர் நான்கு என்பன காலவகையால் முற்கூறப்பட்டனவாகிய பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்னும் நான்கும் எனவும், இங்கு முன், பின் என்பன இட வகையினைக் குறித்தன எனவும் கொள்வர் நச்சினார்க்கினியர்.

எண்வகை மணத்தினுள்ளும் பிரமம் முதலிய நான்கும் பெருந் திணைப் பாற்படும் என்றவாறு. (சரு)

**நச்சினார்க்கினியம்**

மேற் பன்னிரண்டெனப்பட்ட எண்வகை மனத்தினுள் ஏழனை எழுதிணையுள் இன்னதிணைப்பாற்படும் என்கின்றது.

(இ-ள்.) முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே-இதற்கு முன் நின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமும் கைக்கிளை யென்றற்குச் சிறந்திலவேனுங் கைக்கிளையெனச் சுட்டப்படும்; பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே-பின்னர் நின்ற பிரமம் பிரசாபத்தியம் ஆரிடந் தெய்வமென்னும் நான்கினையும் பெருந்-திணை தனக்கு இயல்பாகவே பெறுமெனவும் கூறப்படும் (எ-று.)[1]

மன்றல் எட்டு என்ற வரலாற்று முறையானே 'வாளாது பன்னிரண்டென்றார்' என்பதே பற்றி, ஈண்டும் அம்முறையானே இடவகையான் 'முன்னைய மூன்றும்', 'பின்னர் நான்கு' மென்றார். எனவே, இனிக் கூறும் 'யாழோர் மேன' (தொல்-பொ-106) ஐந்தும் ஒன்றாக அவ்விரண்டற்கும் இடையதெனப் படுவதாயிற்று. வில்லேற்றி யாயினுங் கொல்லேறு தழீஇயாயினுங் கொள்வலென்னும்

1. மேற்குறித்த அகன் ஐந்திணையினையும் அடிப்படையாகக் கொண்டு பொருந்திவரும் கந்தருவ நெறியானது முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்னும் ஐம்புலத்து வாழ்வார் மணமாய்ச் சுட்டிபொருவர்ப் பெயர் பெற்றுக் கற்-பியலாகிய இல் வாழ்க்கையும் பெற்றுச் செய்யுளுட் பாடப்பெறும் என இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம், ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு வேறு பட்டதாயினும் உலகியலோடும் பிற்காலத்துத் தோன்றிய காப்பியங்களாகிய செய்-யுள் நெறியோடும் பொருந்தி வருதலின் இத் தொல்காப்பிய நூற்பாவின் பொரு ளொடு தொடர்புடையதாகக் கொள்ளத்தகுவதேயாகும். இந்நூற்பாவுக்கு நச்சி-னார்க்கினியர் கூறும் இப்பொருள் இளம்பூரணர் காலத்திலேயே கூறப்பெற்று வந்த தொன்மையுடையதென்பது, "ஐங்நிலம் என்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின என்றார் உளராலெனின் 'முதலொடு புணர்ந்த' என்பதனால் நிலம் பெறுமாதலான் நிலம் என்பதற்கு வேறுபொருள் உரைத்தல் வேண்டும் என்க" என வரும் இளம்-பூரணர் உரைப்பகுதியாற் புலனாம். இவ்வுரையினைக் கூர்ந்துணர்ந்த நச்சினார்க்-கினியர், 'முதலொடு புணர்ந்த' என்பதற்கு "மேற் கூறிய அகன் ஐந்திணையும் முதலாக அவற்றொடு பொருந்திவரும்" எனப் பொருள் வரைந்துள்ளமை காண-லாம். எனவே இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் வரைந்துள்ள இவ்வுரை இளம்-பூரணர் உரையுடன் அவர் காலத்தில் வழங்கிய பழைய உரையினையும் அடி-யொற்றியெழுதப்பெற்ற தென்பது நன்கு புலனாகும்.

உள்ளத்தனாவான் தலைவனேயாதலின், அதனை முற்படப் பிறந்த அன்பு முறைபற்றி ஒருதலைக் காமமாகிய 'கைக்கிளை' யென்றார். இராக்கதம் வலிதின் மணஞ்செய்தலாதலின் அதுவும் அப்பாற்படும்; பேயும் அப்பாற்படும். இவை முன்னைய மூன்றுங் கைக்கிளையாய வாறு. 'காமஞ் சாலா இளமையோள் வயிற்' (தொல்-பொ-50) கைக்கிளை சிறப்புடைத் தென்றற்குப் 'புல்லித்தோன்றும்' (தொல்-பொ. 50) எனக் கூறி, இதனை வாளாது 'குறிப்'பென்றார். ஆண்டு-பிற்காலத்தன்றிக் காட்சிக்கண் மணம் அதற்கின்மையின் ஈண்டு மணங் கூறும்வழிக் கூறாது அகத்திணையியலுட் கூறினார். 'ஏறிய மடன்மா' முதலியவற்றைப் 'பெருந்திணைக் குறிப்பே' (தொல்-பொ-51) எனக் கூறி, ஈண்டும் 'பெருந்திணை பெறுமே' யென்றார். அவை சிறப்பில; இவை சிறப்புடைய வென்றற்கு.

இந் நான்கும் ஒருதலைக் காமம்பற்றி நிகழாமையானும் ஒருவனோடொருத்தியை எதிர்நிறீஇ அவருடம்பாட்டோடு புணர்க்குங் கந்தருவ மன்மையானும் அவற்றின் வேறாகிய பெருந்திணையாம். (14)

**ஆய்வுரை**

இது, மேற்கூறியவற்றுள் கைக்கிளைப்பாற்படுவன இவையென்கிறது

(இ-ள்.) மேற்கூறப்பட்ட நிமித்தம் பன்னிரண்டனுள் முற்கூறப்பட்ட காட்சி, ஐயம், துணிவு என்பன மூன்றும் அன்பினைந்திணைக்குரியவாதலே யன்றி ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக்-குரிய குறிப்புக்களாகவும் அமையும் எ-று. (௰௪)

இது, பெருந்திணைப்பாற்படுவன இவை யென்கின்றது.

(இ-ள்.) மேற்குறித்தவற்றுள் நோக்குவவெல்லாம் அவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு எனப் பின்னர்க் கூறிய நிலைகளும் ஒத்த அன்பால் நிகழும்வழி அன்பினைந்திணையாதலே-யன்றி ஒவ்வாக் காமத்தால் நிகழும்வழிப் பெருந்திணைக்குரிய பொருந்தாநிலைகளாகவும் கொள்ளப்பெறும் எ-று. (௰௫)

௰௬. முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே.

**இளம்பூரணம்**

என்— எனின், மேற்சொல்லப்பட்ட ஒருதலைக் காமமும் பொருந்-தாக் காமமுமன்றி, ஒத்த அன்பின் வருங் கூட்டம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) முதல் என்பது நிலமும் காலமும். நிலத்தொடுங் காலத்தொடும் பொருந்திய கந்திருவர் பாற்பட்டன கெடுதலில்லாத சிறப்பினை யுடைய ஐந்துவகைப்படும் என்றவாறு.

முதலொடு புணர்ந்த என்றாரேனும் 'வந்தது கண்டு வாராதது முடித்தல்' (மரபியல்-112) என்பதனால் ஒழிந்த கருப்பொருளும் உரிப்பொருளும் கொள்ளப்படும். நிலம் என்பது இடம். இதனாற் சொல்லியது, ஒத்த காமமாகிக் கருப்பொருளொடும் புணர்ந்த கந்திருவநெறி இட வகையான் ஐந்து வகைப்படும் என்றவாறு. அவை யாவன: களவும் உடன்போக்கும், இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற் பரத்தையும் எனச் சொல்லப்பட்ட ஐவகைக் கூட்டம்.

இச்சொல்லப்பட்ட பன்னிருவகைப்பட்ட கூட்டத்திற்கும் பாங்ராயினார் நிமித்தமாக வேண்டுதலின், அவற்றுள் தலைவற்குந் தலைவிக்கும் ஒத்த காத லுள்வழிப் பாங்கராயினாரால் நிகழும் நிகழ்ச்சி கந்திருவப் பகுதியாகவும், ஒருதலை வேட்கையாகிய வழி இவரால் வரும் நிகழ்ச்சி கைக்கிளையாகவும் ஒப்பில் கூட்டமாகிய வழிப் பெருந்திணையாகவும் கொள்க. ஐந்நிலம் என்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின வென்றார் உளராலெனின், 'முதலொடு புணர்ந்த' என்பதனால் நிலம்பெறு மாதலான் நிலம் என்பதற்கு வேறுபொருள் உரைத்தல்வேண்டு மென்க. அஃது அற்றாக, இற்கிழத்தி, காமக் கிழத்தி என்பார் உள்ளப் புணர்ச்சியானாதல் மெய்யுறு புணர்ச்சியா-னாதல் வரையப்பட்டாராகப் பெருட் பெண்டிராகிய காதற்பரத் தையர் கூட்டம் ஒத்த காமமாகியவாறென்னையெனின், அரும் பொருளானாதல், அச்சத்தானாதல் அன்றி அன்பினாற் கூடுதலின் அதுவுங் கந்திருவப்பாற்படும். அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுவராயின் இவன்மாட்டுத் தலைமை இன்றாமென்பது உணர்ந்து கொள்க. அஃதாமாறு,

*"அன்னை கடுஞ்சொல் அறியாதாய் போலநீ*
*என்னைப் புலப்பது ஒறுக்குவேன் மன்யான்*
*சிறுகாலை இற்கடை வந்து குறிசெய்த*
*அவ்வழி என்றும்யான் காணேன் திரிதர*
*எவ்வழிப் பட்டாய் சமனாக இவ்வெள்ளல்"* (கலித்.90)

எனவும், 'கண்டேனின் மாயங் களவாதல்' என்னுங் கலியுள்,

"... நோயும் வடுவுங் கரந்து மகிழ்செருக்கிப்
பாடுபெயல் நின்ற பானாள் இரவில்
தொடிபொலி தோளும் முலையுங் கதுப்பும்
வடிவார் குழையும் இழையும் பொறையா
ஒடிவது போலும் நுசுப்போ டடிதளர்
வாராக் கவவின் ஒருத்திவந் தல்கல்தன்
சீரார் செழுகிழுஞ் சிலம்ச் சிவந்துநின்
போரார் கதவம் மிதித்த தன்மையோ" (கலித். 97)

எனவும், பரத்தையர் அன்பினாற் கூறியவாறும் இவர் இற்கிழத்தியும் காமக்கிழத்தியும் அன்மையும் அறிந்து கொள்க. இவ்வகை வருவன ஐந்து நிலனாய் வரும். அஃதேல், மருதக்கலியுள்,

"... ... ... ... ... ...
அடக்கமில் போழ்தின்கண் தந்தை காமுற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்கான்" (கலித். 82)

எனவும்,

'வழிமுறைத்தாய்' எனவும், 'புதியோள்' எனவும் இவ்வாறு கூறக் கேட்கின்ற காமக்கிழத்தியுமென மனைவியர் நால்வருளர். அவரெல்லாரையும் கூறாது மனைக்கிழத்தியர் இருவர் என்றதனாற் பயன் இன்றெனின், அவரெல்லாரும் இற்கிழத்தியும் காமக்கிழத்தியு மென இரண்டு பகுப்பினுள் அடங்குப. அன்றியும், இவர் நால்வ-ரோடு பரத்தையுட்பட ஐவர் கந்திருவப்பகுதியர் என உரைப்போரு மமையும்.

'பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே' (பொருளியல், 28)

என ஓதுதலானும், தலைவற்குப் பிரமம் முதலாக வரும் நான்கு வருணத்துப் பெண்பாலரும் பரத்தையும் என ஐவகைப்படுமென் பதூஉம் ஒன்றெனக் கொள்க. (16)

நச்சினார்க்கினியம்

இஃது அப் பன்னிரண்டனுள் இடையதாய் ஒழிந்த ஐந்துங் கூறுகின்றது.

(இ - ள்.) முதலொடு புணர்ந்த யாழோர் மேன - மேற்கூறிய நடுவணைந்திணையுந் தமக்கு முதலாக அவற்றோடு பொருந்தி-

வரும் கந்தருவமார்க்கம் ஐந்தும்; தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே - கெடலருஞ் சிறப்பொடு பொருந்திய ஐவகை நிலனும் பெறுதலின் அவை ஐந்தெனப்படும் (எ - று).

எனவே, முதற்கந்தருவம் ஐந்துமேயன்றி அவற்றோடு பொருத்தமுடைய கந்தருவம் இவ்வைந்துமென வேறுபடுத்தினார் இவை அப் பன்னிரண்டனுட் கூறாநின்ற ஐந்தும், முதலொடு புணர்ந்தவென்றே ஒழியாது பின்னும் 'யாழோர் மேன' வென்றார் இவையுங் கந்தருவமே என்றற்கு. இவையும் ஒருவன் ஒருத்தி யெதிர்நின்று உடம்படுத்த லொப்புமையுடைய, 'கெடலருஞ் சிறப்' பெனவே முதல் கரு உரிப்பொருளானுங் களவென்னுங் கைகோ-ளானும் பாங்கி புணர்த்தலின்மையானும் இலக்கணங் குறைப்பட்ட-தேனுஞ், சுட்டி யொருவர்ப் பெயர்கொள்ளப்பட்டுக் கற்பியலாகிய இல்வாழ்க்கையும் பெற்றுவருதற் சிறப்புடைய இவையும். ஐந்நிலம் பெறுதலேயன்றி, யென்றானாம். இது புலநெறியன்றி உலகிய லாகலின், உலகியலாற் பாலைநிலனும் ஆண்டு வாழ்வார்க்கு மன்ற லும் உளதாகலிற் பாலையுங் கூறினார். எனவே, ஐம்புலத்து வாழ்வார் மணமுஞ் செய்யுளுட் பாடியக்கால் இழுக்கின் றென்றார்.[1]

(15)

ஆய்வுரை

இஃது அன்பினைந்திணைக்குச் சிறந்தன இவை என்கின்றது.

(இ - ள்.) முதல் கரு உரியென்னுந் திணைக் கூறுபாட்டுடன் பொருந்திய யாழோர் நெறியினையொத்த காமக்கூட்டம், வேட்கை, ஒருதலையுள்ளுதல், மெலிதல், ஆக்கஞ்செப்பல், நாணுவரையிறத்தல் என்னும் கெடுதலில்லாத சிறப்பினையுடைய ஐந்து நிலைகளையும் தனக்குச் சிறந்த நிலைக்களன்களாகக் கொள்ளும் எ—று. (16)

தவல் அருஞ்சிறப்பு—கெடுதலில்லாத சிறப்பு. அருமை ஈண்டு இன்மை குறித்துநின்றது.

1. 'தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம்' என்பதற்கு முல்லை, குறிஞ்சி முதலாயின என இளம்பூரணர் காலத்தில் ஒரு சாரசிரியர் பொருள் கூறிவந்தனர் என்பது. "'ஐந்நிலம் என்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின என்றார் உளராலெனின்; 'முதலொடு புணர்ந்த' என்பதனால் நிலம் பெறுமாதலான் நிலம் என்பதற்கு வேறு பொருள் உரைத்தல் வேண்டும் என்க" எனவரும் இளம்பூரணர் உரைப்பகுதியாற் புலனாம். ஈண்டு 'ஐந்நிலம்' என்றது ஐந்து நிலமென்ற பொருளிலன்றி ஐந்து இடம் என்ற பொருளிலேயேயாதலின், கந்தருவ நெறியினையொத்த களவு 'ஐந்தி-ணைகளை இடமாகப் பெறும் ' என்பார் உரையும் ஏற்புடையதேயாகும்.

இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்துங்
காணா வகையிற் பொழுதுநனி இகப்பினும்
தானகம் புகாஅன் பெயர்தல் இன்மையிற்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளாண் எதிரும் விருப்பின் கண்ணுந்
தாளாண் எதிரும் பிரிவி னானும்
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்
வரைவுடம் படுதலும் ஆங்கதன் புறத்தும்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோன் மேன என்மனார் புலவர்.

இளம்பூரணம்

இது தோழியிற் கூடிய தலைமகன் வரைந்தெய்துங்காறும் கூறும் பொருண்மை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இருவகைக் குறிபிழைப்பாகிய இடத்தும் என்பது—பகற்குறியும் இரவிற்குறியும் பிழைப்பாகிய இடத்தும் என்றவாறு. பகற்குறி இரவிற்குறி யென்பது எற்றாற் பெறுது மெனின்.

*குறியெனப் படுவ திரவினும் பகலினும்*
*அறியக் கிளந்த ஆற்ற தென்ப''* (களவியல், 40)

என்பதனாற் கொள்க. அக்குறிக்கண் தலைவி வரவு பிழைத்தவிடத்துத் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு.

ஐங்குறு-298 : இது, குறிபிழைத்தவழித் தோழிக்குச் சொல்லியது.

குறுந். 120 : இது, குறிபிழைத்தவழி உள்ளத்திற்குச் சொல்லியது.

காணா வகையிற் பொழுதுநனி இகப்பினும் என்பது—தலைமகளைக் காணா வகையிற் பொழுது மிகவும் கடப்பினுங் கூற்று நிகழும் என்றவாறு. செய்யுள் :

"உள்ளிக் காண்பென் போல்வல் முள்ளெயிற்று
அமிழ்தம் ஊறுஞ் செவ்வாய்க் கமழகில்
ஆரம் நாறும் அறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கண் கொடிச்சி
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே" (குறுந். 286)

எனவரும்.

தாஅம் புகாஅன் பெயர்தல் இன்மையிற் ... பொழுதினும் என்பது —காணாவகையிற் பொழுது மிகக்கழிந்துழிக் காட்சி யாசையினாற் குறியிடத்துச் சென்று ஆண்டுக் காணாது கலங்கி வேட்கையான் மயக்கமுற்றுச் செயலற்று நிற்குங் காலத்தினுங் கூற்று நிகழும் என்றவாறு.

புகான் என்பது முற்று வாய்பாட்டான் வந்த வினையெச்சம்[1] செய்யுள் வந்தவழிக் காண்க.

புகாஅக் காலை புக்கெதிர்ப் பட்டுழிப்...கண்ணும் என்பது— தான் புகுதற்குத் தகுதியில்லாத காலத்துக்கண்[2] அகம்புக் கெதிர்ப்பட் டுழி அவரால் நீக்கப்படாத விருந்தின்பகுதிய னாகியவழியும் கூற்று நிகழும் என்றவாறு. செய்யுள்:

"இரண்டறி களவின் நம் காத லோரே
முரண்கொள் துப்பிற் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம் தண்ணுற வந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி

1. "புகான் எனபது, முற்றுவாய்பாட்டான் வந்த வினையெச்சம்" என இவ்வுரையாசிரியர் கூறுதலால் வினையெச்சமே வினைமுற்றுவாய்ப்பாட்டாய் திரிந்து வரும் என்பது இவர் கருத்தெனத் தெரிகிறது.

2. தலைவன் தான் புகுதற்குத் தகுதியில்லாத காலத்துக்கண் அகம்புக்குத் தலைவியை எதிர்ப்பட்டான் என்றல் அவனது தலைமைக்கு ஏற்றதன்றாம். 'புகா அக்காலை' என்பதற்கு 'உணவுண்ணுங்காலை' என நச்சினார்க்கினியர் கூறிய பொருளே ஆசிரியர் கருத்துக்கு ஏற்புடையதாகும். புகாஅ—உணவு. 'புனத்துளான் எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ' (முல்லைக்கலி 8) என்பது கலித்தொகை. புகாஅவிருந்து — நீக்க வொண்ணாதவிருந்து.

*அமரா முகத்த ளாகித்*
*தமரோர் அன்னள் வைகறை யானே''* (குறுந். 312)

என வரும்.

வேளா ணெதிரும் விருப்பின் கண்ணும்[1] என்பது - தலைவி உபகாரம் எதிர்ப்பட்ட விருப்பின் கண்ணும் கூற்றுநிகழும் என்றவாறு.

அது, குறிவழிக்கண்டு கூறுதல். அவ்வழித் தலைவிக்குக் கூறிய செய்யுள்:

*''சிலம்புகமழ் காந்தள் நறுங்குலை யன்ன*
*நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே*
*பாயல் இன்துணை யாகிய பணைத்தோள்*
*தோகை மாட்சிய மடந்தை*
*நீயல துளரோஎன் நெஞ்சமர்ந் தோரே.''* (ஐங்குறு. 293)

இது தலைவி கண்புதைத்தவழித் தலைவன் கூறியது.

தாளாண் எதிரும் பிரிவி னானும்[2] என்பது—தாளாண்மை எதிரும் பிரிவின் கண்ணும் என்றவாறு. எனவே நெட்டாறு சேறலன்றி அணிமைக்கண் பிரிவென்று கொள்க.

நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும் என்பது - நாணந் தலைவி நெஞ்சினை வருத்துதலானே நீக்கி நிறுத்துதற்கண்ணும் என்றவாறு.

அஃது, அலராகும் என்றஞ்சி நீக்குதல். அவ்வழித் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு. அவ்வழி இவ்வாறு கூறுகின்றது, புனைந்துரையென்று கருதிக் கூறுதலும் மெய்யென்று கருதிக் கூறுதலும் உளவாம்.

*''களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்*
*வெளிப்படுந் தோறும் இனிது''* (குறள். 1045)

இது புனைந்துரையென்று கருதிக் கூறியது.

---

1. 'வேளாண் எதிரும் விருந்தினானும்' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். 'வேளாண்' என்றது, விருந்துபசரிப்போரையும், 'விருந்து' என்றது உபசரிக்கப் பெறுவோரையும் குறித்து வழங்கும்பெயர்.

2. தாளாண் எதிரும் பிரிவு — தாளாண்மையை மேற்கொண்டு பிரியும் பிரிவு.

*"உறாஅது ஊரறி கௌவை அதனைப்*
*பெறாஅது பெற்றன்ன நீர்த்து."* (குறள்.1143)

'ஊரறிந்த கௌவை நன்றே காண்; அதனைக் குற்றமாகக் கொள்ளாது பெறாது பெற்ற நீர்மைத்தாகக் கொள்' என்றமையானுந் தமர் வரைவுடன் படுவர் எனக் கூறியவாறாம். இது மெய்யாகக் கொண்டு கூறியது.

வரைதல் வேண்டி...புல்லிய எதிரும் என்பது—வரைந்து கோடல் வேண்டித் தோழியாற் சொல்லப்பட்ட குற்றந்தீர்ந்த கிளவி பொருந்திய எதிர்ப்பாட்டுக் கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃதாவது பின்னுங் களவொழுக்கம் வேண்டிக் கூறுதல்.

வரைவுடம் படுதலும் தோழி கூறிய சொற்கேட்டு வரைவுடம் படுதற்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

ஆங்கதன் புறத்தும் என்பது—அவ் வரைவு நிகழ்ச்சிக் கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு. செய்யுள் வந்தவழிக் காண்க.

புரைபடவந்த மறுத்தலொடு தொகைஇ என்பது—குற்றம்பட வந்த மறுத்தலொடுகூட என்றவாறு.

*"தேன்இமிர் அகன்கரைப் பகுக்குங்*
*கானலம் பெருந்துறைப் பரதவன் நமக்கே"* (அகம்.280)

என வரும்.

கிழவோன் மேன என்மனார் புலவர் என்பது—இச் சொல்லம் பட்டன வெல்லாங் கிழவோன் இடத்தன என்றவாறு.

கூற்றென்னாது பொதுப்படக் கூறுதலான் உள்ள நிகழ்ச்சியும் கூற்றும் கொள்ளப்படும்.[1] (17)

1. 'கிழவோன் கூற்று' என்னாது 'கிழவோன்மேன' எனப் பொதுப்படக் கூறினமையால் தலைமகனது கூற்றேயன்றி அவனது உள்ள நிகழ்ச்சியும் ஈண்டுக் கொள்ளப்படும் என்பது கருத்து.

**நச்சினார்க்கினியம்**

இது மேற் றலைவற்குரிய கிளவிகூறிப், பாங்கனிமித்தம் அவன்கண் நிகழும் பகுதியுங் கூறி அம் முறையானே தலைவிக் குரிய கிளவி கூறுகின்றது[1].

(இ-ள்.) இருவகைக்குறி பிழைப்பு ஆகிய இடத்தும்-இரவுக் குறியும் பகற்குறியும் பிழைத்தவிடத்தும்:

> ''இருள்வீ நெய்தல் இதழகம் பொருந்திக்
> கழுதுகண் படுக்கும் பானாட் கங்குல்
> எம்மினு முயவுதி செந்தலை யன்றில்
> கானலஞ் சேர்ப்பன் போல நின்பூ
> நெற்றிச் சேவலும் பொய்த்தன்றோ குறியே.''

இது தன்னுட் கையாறெய்திடு கிளவி.

> ''புன்கண் கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
> துன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
> இன்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
> வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ''
>
> (சிலப். கானல்வரி, 33)

எனவும், இவை குறிபிழைத்துழித் தன்வயி னுரிமையும் அவன் வயிற் பரத்தைமையும் படக் கூறியனவாம். குறிபிழைத்தலாவது புன-லொலிப்படுத்தலும் புள்ளெடுப்புதலும் முதலியன குறியெனக் குறித்தவழி, அவனானன்றி அவை வேறொரு காரணத்தான்

---

1. 'கிழவோள்மேன' எனப் பாடங்கொண்டு 'தலைவிக்குரிய கிளவி கூறு-கின்றது' இந்நூற்பா எனக் கருத்துவரைந்து அதற்கேற்பப் பொருள் விரித்-துரைப்பர் நச்சினார்க்கினியர். இளம்பூரணர் கொண்ட 'கிழவோன்மேன' என்ற பாடத்தைக் கொள்ளாது, 'கிழவோள் மேன' என்ற பாடத்தைத் தாம் கொள்ளு-வதற்குக் காரணம் கூறும் வகையில் அமைந்தது, ''மேல் தலைவிக்குரிய கிளவி கூறிப் பாங்கனிமித்தம் அவன்கண் நிகழும் பகுதியும் கூறி அம்முறையானே தலைவிக்குரிய கிளவி கூறுகின்றது'' எனவரும் கருத்துரையாகும், களவிற் கூட்டம் நான்கினிடத்தும் தலைவன் கூற்று நிகழுமாறு இவ்வியல் பதினோராம் நூற்பாவில் மெய் தொட்டுப்பயிறல் முதலாக 'மடன்மாகூறும் இடனுமாருண்டே' என்பது ஈறாகக் கூறினாராதலின் மீண்டும் இதனைத் தலைவன் கூற்றாக்குதல் பொருந்தாது என்பதனைக் குறிப்பிற் புலப்படுத்தும் முறையில் இக்கருத்துரை அமைந்துள்ளமை காணலாம்.

நிகழ்ந்துழி, அதனைக் குறியென நினைந்து சென்று அவை அவன்குறியன்மையின்அகன்று மாறுதலாம். பகற்குறிக்கு உதாரணம் வந்துழிக் காண்க.

காணா வகையிற் பொழுது நனி இகப்பினும்-குறிவழிச் செல்லுந் தலைவனை இற்றைஞான்றிற் காண்டல் அரிதென்று கையறுவதோராற்றாற் பொழுது சேட்கழியினும்;

என்றது, தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவுவெளிப்படுதல், நாய் துஞ்சாமை போல்வனவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப்பெறாமல் நீட்டித்தலாம்.

தானகம் புகாஅன் பெயர் தலின்மையிற்[1] காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும்-அங்ஙனங் காணாவகையிற் பொழுது நனியிகந்து தலைவி குறி தப்பியக்காலுந் தலைவன் குறியிடம் புகுந்தல்லது பெயரானென்பது தான் அறியுமாதலின், ஆண்டுப் புகுந்தவன் தான் வந்து நீங்கினமை அறிதற்கு ஒரு குறி செய்தன்றி வாளாது பெயரானன்றே? அக் குறிகாணுங் காட்சி விரும்பினாற் றலைவி பிற்றைஞான்று விடியலிற் சென்று ஆண்டைக்குறி கண்டு கலங்கி, அவனை எதிர்ப்படுதல் வேட்கையளாகிச் செய்வதறியாது மயக்கத்தோடு கையுறவு எய்தும் பொழுதின் கண்ணும்;

'தான்' என்றது தலைவனை. இரவுக்குறியினை 'அக' மென்றார், இரவுக்குறி எயிலகத்தது என்பதனால்.[2] குறியிற் சென்று நீங்குவனெனவே காட்சி அவன்மேற்றன்றிக் குறிமேற்றாம். குறி, மோதிரம், மாலை, முத்தம் முதலியன கோட்டினுங் கொடியினும் இட்டுவைத்தனவாம்; இவை வருத்தத்திற்கு ஏதுவாம். இது விடியல் நிகழுமென்றற்குப் பொழுதென்றான்; எனவே காண்பன விடியலிற் காணுமென்றார். 'மயங்கும்' என்றதனால் தோழியும் உடன்மயங்கும். அது,

---

1. தான் அகம் புகாஅன் பெயர்தல் இன்மையின் - தலைவன் குறியிடம் புகுந்தல்லது பெயரான் என்பதுதான் அறியுமாதலின்.

2. இரவுக்குறி எயிலகத்தது என்பதனால் ஈண்டு அகம் என்றது இரவுக் குறியினை.

''இக்காந்தண் மென்முகைமேல் வண்டன்றஃ திம்முகையில்
கைக்காந்தண் மெல்விரலாய் காணிதோ—புக்குச்
செறிந்ததுபோற் றோன்றுந் தொடுபொறி யாம்பண்
டறிந்ததொன் றன்ன துடைத்து.''

புகாஅக் காலைப் புக்கு எதிர்ப்பட்டுழிப் பகாஅ விருந்தின் பகுதிக்கண்ணும்[1] - உண்டிக்காலத்துத் தலைவியில்லத்துத் தலைவன் புக்கெதிர்ப்பட்டவழி நீக்கி நிறுத்தாத விருந்து ஏற்றுக் கொள்ளும் பகுதிக்கண்ணும் ;

எனவே, மனையகம் புகுதற்கு ஒவ்வாத மிக்க தலைவன் புகுந்தால் இஃதொன்றுடைத்தெனத் தேராது தாய் அவனை விருந் தேற்று நீக்கி நிறுத்தற் பகுதியுந் தழீஇயினவாறாயிற்று.

புகாக்கால மாதலிற் பகாவிருந்தென்றான் விடியற்காலமாயிற் றலைவன் புகானெனவும், புகாக்காலத்துப் புக்கதொன்றாயின் அவர் விருந்தேற்றுக்கோடல் ஒருதலையென்று புகும் என்றுங் கொள்க. தலைவி காட்சியாசையிற் கலங்கியதற்கேற்பத் தலைவர்க்குங் காட்சி யாசை கூறிற்று. அது,

''சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானும்
தன்னை அறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னாய் இவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினான் என்றேனா அன்னையுந்

1. புகா — உணவு, புகாக்காலை உண்டிக்காலத்து. பகா விருந்து — தள்ளத்தகாத விருந்து ; எளிதிற் கிடைத்தற்கரிய விருந்து எனினும் அமையும்

*தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்*
*கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக் கூட்டஞ்*
*செய்தானக் கள்வன் மகன்.''* (கலி. 51)

இது புகாக்காலத்துப் புக்கானை விருந்தேற்றுக் கொண்டமை இன்னொருகாலத்துத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க.

*''அன்னை வாழ்க பலவே தெண்ணீர்*
*இருங்கடல் வேட்டம் எந்தை புக்கெனத்*
*தார்மணி நெடுந்தேர் நீவி யானுமோர்*
*எல்லமை விருந்தின னென்ற*
*மெல்லம் புலம்பனைத் தங்கென் றோளே.*

இது தோழிகூற்றுமாம்.

ஒன்றிய தோழி யென்றதனால் தோழிகூற்று வந்துழிக் காண்க.

*''மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை*
*புனறரு பசுங்காய் தின்றதன் றப்பிற்*
*கொன்பதிற் றொன்பது களிற்றோ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்*
*பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை*
*யொருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே.''* (குறுந். 292)

இது புகாக்காலத்துத் தலைமை மிக்க தலைவன் புக்கதற்கு விருந்தேலாது செவிலி இரவுந் துயிலாதாளைத் தலைவி முனிந்து கூறியது.

வேளாண் எதிரும் விருந்தின்கண்ணும் - அங்ஙனம் விருந்தாதலேயன்றித் தலைவி வேளாண்மைசெய்ய எதிர்கொள்ளக் கருதுதல் காரணத்தால் தோழி அவனை விருந்தேற்றுக் கோடற் கண்ணும்:

என்றது, தலைவி அவற்கு உபகாரஞ்செய்யக் கருதி அதனைக் குறிப்பாற் கூறத், தோழி அவனை விருந்தாய்த் தங்கென்னும்.

உ-ம் : *''நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்*
*நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்*

பறிகொள் கொள்ளையர் மறுக உக்க
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
எல்லை தண்பொழிற் சென்றெனச் செலீஇயர்
தேர்பூட் டயர வேஎய் வார்கோல்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்
செல்லினி மடந்தைநின் தோழியொடு மனையெனச்
சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து
தீங்கா யினளிவ ளாயின் தாங்காது
நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப்
பிறிதொன் றாகலும் அஞ்சுவல் அதனால்
சேணின் வருநர் போலப் பேணாய்
இருங்கலி யாணரெஞ் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் விரைஇத்
துறையும் மான்றின்று பொழுதே சுறவும்
ஓதம் மல்கலின் மாறா யினவே
எல்லின்று தோன்றல் செல்லா தீமென
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்லுறை நல்விருந் தாதல்
ஒல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே.'' (அகம்.300)

இதனுள், 'தான் பெரிது கலுழ்ந்து தீங்காயின' ளெனவே அக் குறிப்புத் தலைவன் போகாமற் றடுப்பக் கூறியதென்று உணர்ந்து தோழி கூறினாள்.

வாளாண் எதிரும் பிரிவினானும்[1] - வாளாண்மை செய்தற்கு ஒத்த பிரிவு தோன்றியவழியும் :

ஆண்டுத் தலைவிமேற்றுக் கிளவி மூவகைப் பிரிவினும் பகை வயிற்பிரிவை விதந்தோதி அதிகாரப்பட்டு வருகின்ற களவினுள் அவை நிகழப்பெறா; இதுவாயின வரைவிடை வைத்துப் பிரியவும்

1. வாளாண் எதிரும் பிரிவு என்றது, பகைவயிற் பிரிவின் வேறாக முடியுடை வேந்தரின் ஏவலிற் பிரிவும் பிரிவினை. திலகவதியாரைத் திருமணம் பேசி முடித்த பின் கலிப்பகையார் போர் மேற் சென்றது வாளாண் எதிரும் பிரிவாகும். பகைவயிற் பிரிவு என்பது பொது. இது சிறப்பு.

பெறும் அரசர்க்கு இன்றியமையாத பிரிவாகலின் என்பது கருத்து ஓதலுந் தூதும் வரைவிடை வைத்துப் பிரிவிற்குச் சிறந்தில வென்றானாம் இப் பிரிவு அரசர்க்கு உரித்தென்பது 'தானே சேறலும்' (தொல்-பொ.27) என்னும் சூத்திரத்தாற் பெறுதும். வாளாண்மைக்கு ஏற்ற பிரிவென்வே, முடியுடை வேந்தரேவலிற் பிரியும் அரசர்கண்ணது இப் பிரிவென்க. சிறுபான்மை அவ் வேந்தற்கு உரித்து, 'வெளிப்படை தானே' (தொல்-பொ.141) என்பதனுள் இப் பிரிவில்லை என்பராதலின் அது,

> *''பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்*
> *வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ*
> *புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா*
> *முகைவெண்ப னுதிபொரா முற்றிய கடும்பனி.''* (கலி.31)

இதனுட் பனி யெதிர் பருவங் குறிஞ்சியாகலிற் களவிற்-பிரிந்தான் வாளாணெதிரும் வென்றி தோழிக்குத் தலைவி கூறிய-வாறு. இஃது அவன்வயிற் பரத்தைமை கருதாதது.

நாணு நெஞ்சு அலைப்ப விடுத்தற்கண்ணும்-தலைவிக்கு இன்றியமையாத நாணுத்தான் அவள் நெஞ்சினை அலைத்தலின் அவள் அந் நாணினைக் கைவிடுதற் கண்ணும்[1]; அஃது உடன் போக்கினாம் வரைவுகடாவும் வழியும் வேட்கைமீதூர்ந்து நாண் துறந்துரைத்தல் போல்வன.

> *''அளிதோ தானே நாணே நம்மொடு*
> *நனிநீ டுழந்தன்று மன்னே இனியே*
> *வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை*
> *தீம்புன னெரிதர வீந்துக் காஅங்குத்*
> *தாங்கு மளவைத் தாங்கிக்*
> *காம நெறிதரக் கைந்நில் லாதே.''* (குறுந். 149)

இஃது உடன்போக்கு வலித்தமையின் நாண் துறந்து கூறியது.

வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் கிளவி புல்லிய எதிரும் - வரைதல் விருப்பினால் தோழி தலைவற்கு வரைவு கடாய்க்

---

1. விடுத்தல் — அந்நாணினை நெகிழ விடுதல்.

கூறிய புரைதீர் கிளவியைத் தலைவி பொருந்தி நின்றே இயற்பழித்-தற்கு மறுத்தாள்போல் நிற்கும் எதிர்மறையையும் ;

புரைதீர் கிளவி தலைவனுயர்பிற்கு ஏலாது இயற்பழித்து உரைக்குங் கிளவி. அது, ''பாடுகம் வா வாழி தோழி'' என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

*''இலங்கு மருவித் திலங்கு மருவித்து*
*வானின் இலங்கு மருவித்தே தானுற்ற*
*சூள்பேணான் பொய்த்தான் மலை''* (கலி. 41)

எனத் தோழி இயற்பழித்த வகையாட்டான் வரைவு கடாய அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதாள்,

*''பொய்த்தற் குரியனோ பொய்த்தற் குரியனோ*
*அஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற் குரியனோ*
*குன்றக னன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றின்*
*திங்களுட் டீத்தோன்றி யற்று.''* (கலி. 41)

எனத் தலைவி இயற்பட மொழிந்து எதிர்மறுத்தவாறு காண்க.

*''அருவி வேங்கைப் பெருவரை நாடற்*
*கியானெவன் செய்கோ வென்றி யானது*
*நகையென வுணரே னாயின்*
*என்னா குவைகொல் நன்னுத னீயே.''* (குறுந். 96)

இதுவும் இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது.

வரைவு உடன்படுதலும் - தலைவற்குத் தலைவி தமர்வரை வுடம்பட்டதனைத் தலைவி விரும்புதலையும் :

தமரான் ஏறுக்கப்பட்டு ஒவாராய்த் துயருழத்தல் ஆகா தென ஆற்றுவிக்குஞ் சொற்களான் மறுத்துரைப்பவுந் தேறாராய்த் தனித்து இருப்பார் உறக்கம் காரணமாக எழுந்த கௌவை கேளாது வரைந்-தெய்திய மாற்றங் கேட்டு இவ்வூரும் இன்புறுக என்பதாம்.

ஆங்கதன் புறத்துப்[1] புரைபட[2] வந்த மறுத்தலொடு தொகைஇ-அவன் வரைவு வேண்டினவிடத்து அவ் வரைவு புறத்ததாகிய வழித் தலைவி தன்னுயர்பு உண்டாகத் தோன்றியது மறுத்தலோடே முற்கூறியவற்றைத் தொகுத்து.

'அதன்புறம்' எனவே அதற்கு அயலாகிய நொதுமலர் வரை-வாயிற்று. தலைவி தன் குடிப்பிறப்புங் கற்பும் முதலிய உயர்ச்சிக்கு ஏற்ப அதனை மறுத்துத் தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் கூறுமென்றற்குப், 'புரைபட வந்த மறுத்தல்' என்றார்.

இச் சூத்திரத்து உருபும் எச்சமுமாயவற்றைக் 'கிழவோண் மேன' என்பதனோடு முடித்து, முற்றிற்குக் கிளவியென ஒரு பெயர் வெளிப்படுத்து முடிக்க.[3] புல்லிய எதிரையும் உடன்படு தலையும் மறுத்தலுடன் தொகுத்தது.

கிழவோள் மேன என்மனார் புலவர் - தலைவியிடத்து கிளவியென்று கூறுவர் புலவர் என்றவாறு. (16)

**ஆய்வுரை**

இது, தோழியின் உடன்பாடு பெற்றுத் தலைமகளைக் கூடிய தலைவன், தலைவியை மணந்து கொள்ளுங்காறும் நிகழ்வனவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்.) பகற்குறி இரவுக்குறியென்னும் இருவகைக்குறிகளும் தப்பிய நிலையிலும், தலைமகளைக் காணவியலாதவாறு பொழுதும் நீட்டித்த நிலையிலும், தான் தலைமகளது இல்லத்திற்குட் புகப்-பெறானாகிக் களவொழுக்கத்தின் மீளுதலின்மையால் தலைமகளைக் காணுதல் வேண்டுமென்னும் பெருவிருப்பத்தால் மீண்டும் குறியிடத்தே சென்று காணப்பெறாது கலக்கமுற்று வேட்கையால் மயங்கிச் செய-லற்று நிற்கும் காலத்தினும், உணவுண்ணுங் காலத்தில் தலைமகளது மனைக்கண் விருந்தினனாகப் புகுந்து தலைமகளை எதிர்ப்பட்ட போது அவளுடைய சுற்றத்தாரால் தள்ளத்தகாத விருந்தாக ஏற்று உபசரிக்கப் பெற்ற நிலையிலும், (தலைமகளும் தோழியும்) விருந்து உபசரிப்பாராக விரும்பி எதிரேற்ற நிலையிலும், தாளாண்மையின்ன

---

1. அதன்புறம் என்றது, நொதுமலர் வரைவினை.
2. புரை — உயர்வு.
3. கிழவோள் மேன கிளவி என ஒரு பெயர் வருவித்து முடிக்கப் பெற்றது.

மேற்கொண்டு வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியும் நிலையிலும், களவு அலராகி வெளிப்பட்டு விடுமோ என்னும் அச்சத்தோடு நாணம் தலைவி நெஞ்சினை வருத்துதலால் தலைமகளை விலகி ஒழுகுதற் கண்ணும், தலைவியை மணந்து கொள்ளுதல் வேண்டித் தோழி கூறிய குற்றந்தீர்ந்த சொல்லினையேற்றுப் பொருந்திய எதிர்ப் பாட்டின் கண்ணும், தோழி கூறிய சொற்கேட்டு வரைவுடம் படுதற் கண்ணும், அங்கு அவ்வரைவு புறத்ததாயவழிக் குற்றம்பட நேர்ந்த தமர் வரைவு மறுத்தலொடுகூட இங்குக் கூறப்பட்டனவெல்லாம் தலைமகன் மேலன என்பர் ஆசிரியர் எ-று.

இந்நூற்பாவில் 'தான் அகம்புகான்' என்புழித் தான் தலைவனையாகலானும் 'நாணுநெஞ்சலைப்ப விடுத்தல்' என்புழி விடுத்தல் தொழிலாகலானும் வரைதல் வேண்டித் தோழி செப்புதல் தலைவனை நோக்கியாகலானும் 'கிழவோன் மேன' என இளம்பூரணர் கொண்ட பாடமே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையதென்பதும், 'கிழவோள் மேன' என நச்சினார்க்கினியர் கொண்ட பாடம் அத் துணைப் பொருத்தமுடையதன்றென்பதும் நன்கு புலனாகும்.

'கிழவோன் கூற்று' என்னாது 'கிழவோன் மேன' எனப் பொதுப்படக் கூறினமையின் இவ்விடங்களில் தலைவனது உள்ள நிகழ்ச்சியும் கூற்றும் உடன்கொள்ளப்படும்.

ல்அ. **காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்**
**நாணும் மடனும் பெண்மைய ஆகலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்பட வாரா அவள்வயின் ஆன.**

**இளம்பூரணம்**

என்பது மேல் தலைவற் குரிய கிளவி கூறி, இனித் தலைவிக்குரிய கிளவி கூறுகின்றாராகலின் முற்பட அவள் தலைவனைக் கண்ணுற்றவழி வரும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

தலைவியிடத்து நிலைமைபெற்று வருகின்ற நாணமும் மடனும் பெண்மைக்கு அங்கமாகலின், காமவொழுக்கத்தின்கண் குறிப்பினானும் இடத்தினானுமல்லது வேட்கை புலப்பட நிகழாதுலைவிதயிடத்து எ-று.[1]

1. நின்றுவரூஉம் நாணும் மடனும் பெண்மையவாகலின் காமத்திணையிற்கண் குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை நெறிப்பட வாரா அவள்வயினான் என இயையும்.

காமத்திணை என்பதனைக் குறிப்பென்பதற்கு முன்னே கூட்டியுரைக்க. அச்சமும் இயல்பன்றோவெனின், அதுவும் வேட்கைக்குறிப்பினான் நீங்குமென்ப. அச்சமுள்வழி வேட்கை நிகழாமையின், வேட்கையுள்வழி நாணும் மடனும் நீங்காவோ எனின், அது வருகின்ற சூத்திரத்தாற் கூறுப. இதனாற் சொல்லியது தலைவி தலைவனை எதிர்ப்பட்டு முன்னிலையாக்கல் முதலாகத் தலைவன்மாட்டு நிகழ்ந்தமைபோலத் தலைவிமாட்டு நிகழ்பவை உளவோ வெனின், அவள்மாட்டுக் குறிப்பினானாதல், சொல்லுதற்குத் தக்க விடத்தினானாதல் தோற்றுவதல்லது, புலப்பட்டு நிகழா தென்றவா றாயிற்று.

*"உண்டார்கண் அல்ல தடுநறாக் காமம்போற்*
*கண்டார் மகிழ்செய்தல் இன்று"* (குறள். 1090)

என்றது தலைவனைக் கண்ட தலைவி வேட்கைக் குறிப்பினால் தன்னுள்ளே கருதியது.

இடம் பற்றி வேட்கை தோற்றியதற்குச் செய்யுள்:—

*"................ .... ........... ......................*
*நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ*
*காணா மோவெனக் காலிற் சிதையா*
*நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்*
*என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்*
*ஒழிகோ யானென அழிதகக் கூறி*
*யான்பெயர்க என்ன நோக்கித் தான்தன்*
*நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி*
*நின்றோன் போலும் இன்றும்என் கட்கே"*[1] (அகம். 110)

எனத் தன் குறிப்புக் காலத்தாற் கூறுதலாற்றாது பின் இடம்பெற்றுழிக் கூறியவாறு காண்க. (௪அ)

---

1. இவ்வுரையாசிரியர் அகநானூறு 110-ஆம் பாடலைத் தலைவி கூற்றாகக் கொண்டார் எனத்தெரிகிறது. இதன் ஈற்றடி இங்கு எடுத்துக்காட்டியபடி 'நின்றோன்போலும் இன்றுமென் கட்கே' என்ற பாடமே இவ்விடத்திற்கு ஏற்புடையதாகும்.

**நச்சினார்க்கினியம்**

இஃது உள்ளப்புணர்ச்சிக்கு உரியவாறு மெய்யுறு புணர்ச்சிக்கண்ணும் நிகழுமென்ற நாணும் மடனுங் குறிப்பினும் இடத்தினும் வருமெனக் கூறுதலின், 'அச்சமு நாணும்' (தொல். பொ. 99) என்பதற்குப் புறநடையாயிற்று. இதனை ஈண்டுக் கூறினான், இடத்தின்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென்பதூஉம்,[1] அது கூற்றின்கண் வருமென்பதூஉங் கூற்றுநிகழ்கின்ற இவ்விடத்தே கூறவேண்டுதலின், எனவே, இதுமுதலிய சூத்திரம் மூன்றும் முன்னர்த் தலைவிக்குக் கூற்று நிகழுமென்றற்குக், கூற்று நிகழுங்கால் நாணும் மடனும் நீங்கக் கூறும் என்று அக் கூற்றிற்கு இலக்கணங் கூறினவேயாயிற்று.

(இ - ள்.) அவள்வயின் ஆன நாணும் மடனும் பெண்மைய ஆதலின்-தலைவியிடத்து உளவாகிய நாணும் மடனும் பெண்மைப் பருவத்தே தோன்றுதலையுடையவாதலின்; காமத்திணையிற் கண்ணின்று குறிப்பினும் வரூஉம் - அப் பருவத்தே தோன்றிய காமவொழுக்கங் காரணமாக அவை கண்ணின்கணின்று குறிப்பினும் வரும்; வேட்கை நெறிப்பட இடத்தினும் வரூஉம் - அன்றி வேட்கை தன்றன்மை திரியாது வழிப்படுதலாலே கரும நிகழ்ச்சிக்கண்ணும் வரும்; அல்லது வாரா - அவ்வீரிடத்துமல்லது அவை வாரா (எ-று.)[2]

இயற்கைப் புணர்ச்சிக்கண் உரியவாகக் கூறும் பன்னிரண்டு மெய்ப்பாட்டானுங் குறிப்பின்கண் நாணும் மடனும் நிகழ்ந்தவா றுணர்க.

> ''ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
> கரும நிகழ்ச்சி யிடமென மொழிப'' (தொல்-பொ-செய். 198)

என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தான் இடமென்றதனைக்[3] கரும நிகழ்ச்சி என்றுணர்க:

---

1. தன்தன்மை திரிதலாவது தலைவி தனது வேட்கையினைக் கண்ணின் குறிப்பினால் அன்றிக் கூற்றினால் வெளிப்படுத்தித் தோழிக்கு உரைத்தலை.

2. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் கூறிய பொருளே ஆசிரியர் கருத்தினைத் தெளிவாக விளக்குவதாகும்.

3. இங்கு இடன் என்றது கரும நிகழ்ச்சியினைச் சுட்டாது கரும நிகழ்ச்சிக்கு ஏதுவாகிய மெய்ப்பாட்டினைச் சுட்டியது எனக் கொள்ளுதல் பொருத்தமாகும். நாணும் மடனும்நீங்கத் தலைவி கூற்று நிகழ்த்துவாள் என்பதற்கு இந்நூற்பாவில் இடமில்லை.

அஃதாவது இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமாம். இவற்றின்கண்ணும் நாணும் மடனும் நிகழு-மென்றான். இனித் தோழியிற் புணர்வின்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென மேலிற் சூத்திரத்தாற் கூறுகின்றான்.[1] (கஎ)

**ஆய்வுரை**

தலைவியின் வேட்கை குறிப்பினாலும், இடத்தினாலும் அன்றி கூற்றினால் வெளிப்படாது என்பதே இந்நூற்பா நுதலிய பொரு-ளாகும். தலைவியின் வேட்கை கூற்றினால் வெளிப்படாமைக்குக் காரணம் காட்டும் நிலையில் அமைந்தது,

> *"காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்*
> *நாணு மடனும் பெண்மைய வாதலின்"*

என்னும் தொடராகும்.

காமத்திணையாகிய அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றில் கண்ணின் குறிப்புடன் ஒன்றி வெளிப்படும் நாணும் மடனுமாகிய இவை பெண்மைக்குரிய நீங்காப் பண்புகளாதலின், தலைவியின் வேட்கை குறிப்பினானும் இடத்தினானும் அன்றிக் கூற்றினால் வெளிப்படும் அளவிற்குத் தலைவி மாட்டு மிக்குத் தோன்றுதல் இல்லை என்பதே இந்நூற்பாவின் பொருளாகும்.

இந்நூற்பாவில் கண்ணின்று வரூஉம் என்பதற்குத் தலைவி-யிடத்து நிலைபெற்று வருகின்ற எனப் பொருள் கூறுவர் இளம்-பூரணர். முதலடியில் வந்த கண்ணின்று வரூஉம் என்ற தொடரை கண்ணின்று எனவும், வரூஉம் எனவும் இரண்டாகப் பிரித்து மூன்றா மடியிலுள்ள குறிப்பினும் என்பதன் முன்னும் பின்னும் இயைத்துக் கண்ணின்ற குறிப்பினும் வரூஉம் என நச்சினார்க்கினியர் வலிந்து பொருள் கூறுவர். குறிப்பினும் எனவே கண்ணினான் வரும் குறிப்பு என்பது தானே விளங்கும். இவ்வாறு இடர்ப்பட்டுச் சொற்களைப் பிரித்துக் கூட்ட வேண்டிய இன்றியமையாமையில்லை.

இந்நூற்பாவில் எழுவாயாக அமைந்தது வேட்கை. அவ்வேட்கை அவள்வயின் குறிப்பினும் இடத்தினும் அல்லது (கூற்றின்கண்)

---

1. மேலிற் சூத்திரமென்றது 'காமஞ் சொல்லா நாட்டமின்மையின்' என அடுத்து வரும் நூற்பாவினை.

நெறிப்பட வாரா என்பதே இங்குக் கூறும் பொருள். அங்ஙனம் வாராமைக்குக் காரணம் கூறுவதாக அமைந்த ஏதுமொழியே 'காமத்திணையிற் கண்ணின்று வரூஉம் நாணுமடனும் பெண்மைய வாதலின்'[1] என்னும் தொடராகும். கண்ணின்று வருதலாவது கண்ணிலிருந்து புலப்படும் காமக் குறிப்பினுடனே நாணுமடனும் ஒருங்கு வெளிப்படுதல்,

**ஆய்வுரை**

ஒத்த அன்பினராய தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுக் கண்ணுற்ற நிலையில் தலைமகள்பால் வேட்கை தோன்றுமாறு கூறுகின்றது,

(இ-ள்.) அன்பின் ஐந்திணையொழுகலாற்றில் தலைமகளது கண்ணின் குறிப்புடன் ஒன்றி வெளிப்படும் நாணமும் மடனும் ஆகிய இவை பெண்மைக்குரிய இன்றியமையாப் பண்புகளாதலின், தலைவியின் வேட்கை, குறிப்பினாலும் இடத்தினாலும் அன்றிக் கூற்றினால் வெளிப்படுமளவுக்கு அவளிடத்தில் முறைமைப்பட மிக்குத் தோன்றுதல் இல்லை எ-று.

வேட்கை, குறிப்பினும் இடத்தினும் அல்லது அவள்வயின் நெறிப்பட வாரா என இயையும். தலைமகள் உள்ளத்தே தோன்றும் வேட்கை யுணர்வுகள் அவளது சொல்லால் வெளிப்படாமைக்குக் காரணம் கூறும் நிலையில் அமைந்தது,

*"காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்*
*நாணும் மடனும் பெண்மைய வாதலின்"*

எனவரும் தொடராகும். காமத்திணை-காமப்புணர்ச்சி ; அன்பின் ஐந்திணையொழுகலாறு. கண் நின்று வருதலாவது கண்ணின் குறிப்புடன் ஒன்றிநின்று வெளிப்படுதல். பெண்மைய - பெண்மையிடத்தன ; குறிப்பு வினைமுற்று. அவள் என்றது தலைவியை.

புகூ. காமஞ் சொல்லா நாட்டம் இன்மையின்
ஏமுற இரண்டும்[1] உளவென மொழிப.

**இளம்பூரணம்**

1. இரண்டும் என்றது- பெண்மைக்கு இன்றியமையாத நாணும் மடனும் ஆகிய இரண்டினையும். இவை இரண்டும் தலைமகற்கு ஏமம் தருவன ஆதலால் 'ஏமுற இரண்டும் உளவென மொழிப' என்றார்.

என்பது, மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

வேட்கையுரையாத கண் உலகத்தின்மையால் தலைவன் ஏமுறற் பொருட்டு நாணும் மடனும் உளவாம் என்றவாறு.

இதனாற் சொல்லியது மேல் தலைவிக்கு இயல்பாய்க் கூறப்பட்ட அச்சமும் நாணும் மடனும் என்பனவற்றுள் வேட்கையால் அச்சம் நீங்கினவழி நாணும் மடனும் நீங்காவோ என்றையுற்றார்க்கு அவை தலைமகற்கு ஏமமாதற்பொருட்டு நீங்காவாம் என்பதூஉம், வேட்கைக்குறிப்புக் கண்ணினான் அறியலா மென்பதூஉம் உணர்த்தியவாறு. என்னை? நாணும் மடனும் இல்லாதாரைத் தலைமக்கள் அவமதிப்பாரதலால். உதாரணம் :-

''கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.''　　　　(குறள். 1173)

இதனுள் 'கடலன்ன காமம் உழந்தும்' என்றதனான் வேட்கை மிக்க நிலையினையும், 'மடலேறாப் பெண்' என்றமையான் நாணும் மடனும் நீங்கா நிலையினையும் கூறுதல் காண்க.

''கண்ணொடு கண்இணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.''

இதனுள் அகத்துநிகழ் வேட்கையினைக் கண்ணினால் அறியக்கிடந்தமை கூறியவாறு காண்க.　　　　(கக)

**நச்சினார்க்கினியம்**

இது கருமநிகழ்ச்சிக்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவரு மென்கின்றது.

(இ-ள்.) சொல்லாக் காமம் இன்மையின் - கரும நிகழ்ச்சி யிடத்துக் கூற்று நிகழாத காமம் புலனெறி வழக்கின்கணின்மையின், இரண்டும் ஏமுற நாட்டம் உளவென மொழிப-முற்கூறிய நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவர நாட்டுதல் உளவென்று கூறுவர் புலவர் எ-று.[1]

---

1. இந்நூற்பாவிற்குச் சொற்கிடந்த முறையே பொருள் கொள்ளாது தொடர் மொழிகளை முன் அமைந்த இயல்புக்கு முரண்பட மாற்றி நச்சினார்க்கினியர் கூறும் பொருள் நூலாசிரியர் கருத்துக்கு ஒவ்வாததாகும்.

என்றது, தோழியிற் கூட்டத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவ ளென்பதூஉம், நிழுங்கால் நாணும் மடனும் பெரும்பான்மை கெட்டு அக் கூற்று நிகழுமென்பதூஉம், அங்ஙனங் கெடுதலையும் முந்து-நூற்கண் ஆசிரியர் நாட்டுதல் உளவென்பதூஉங் கூறியவாறா-யிற்று.

''தேரே முற்றன்று நின்னினும் பெரிதே'' (கலி. 74)
''பேரே முற் றாய்போல முன்னின்று விலக்குவாய்'' (கலி.114)

என்றாற்போல மயக்கம் உணர்த்திற்று.

இனி நாணும் மடனுங் கெட்ட கூற்றுத் தோழியை நோக்கிக் கூறுமென மேற்கூறுகின்றான். (கஅ)

**ஆய்வுரை**

இது, காதலர் இருவர் தம்முள் எதிர்ப்பட்டுக் காணும் காட்சியில் தலைமகளது உள்ளத்தே தோன்றும் வேட்கை தனித்து மீதூர்ந்து வெளிப்படாது நாணொடும் மடனொடும் பிரிவின்றித் தோன்றுதற்-குரிய காரணம் கூறுகின்றது.

(இ-ள்.) உள்ளத்தெழுந்த வேட்கையை வெளிப்படுத்தாத காதலர் கண்கள் உலகத்தில் இல்லாமையால் (ஒத்த காதலர் இருவரிடையே நிகழ்தற்குரிய களவொழுக்கமாகிய இவ்வொழுக-லாறு) ஏமம் (பாதுகாவல்) உடையதாதற் பொருட்டு முற்குறித்த நாணமும் மடனுமாகிய பெண்மைக்குணங்கள் இரண்டும் தலை-மகள்பால் நீங்காது உள்ளனவாம் என்று கூறுவர் சான்றோர் எ-று.

சொல்லுதல் - வெளிப்படுத்தல். நாட்டம் - கண். ஏமம், ஏம் என மருவியது. ஏமம் - பாதுகாவல். உற - உறுதற்பொருட்டு. இரண்டும் - முன்னைச் குத்திரத்திற் கூறப்பட்ட நாணமும் மடனும்.

மகளிர்பால் என்றும் நீங்காதுளவாதற்குரிய அச்சம் நாணம் மடன் என்னும் மூன்றனுள் முதற்கண்ணதாகிய அச்சம் வேட்கை காரணமாக நீங்கினும் நாணம் மடன் என்னும் இரண்டும் தலை-மகள்பால் எக்காலத்தும் நீங்காது உளவாம் என்பது கருத்து.

உ௰. சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்
அல்ல கூற்றுமொழி[1] அவள்வயி னான.

**இளம்பூரணம்**

என்பது, இதுவும் தலைவிமாட்டு ஒரு கூற்றுச்சொல் நிகழு-மாறு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் இயற்கைப்புணர்ச்சி கருதிக்கூறுஞ் சொல்லெதிர் தான் வேட்கைக் குறிப்பினளாயினும் அதற்குடம்பட்ட நெறியைக் கூறுதல் அருமையுடைத் தாதலான் அதற்கு உடம்பாடல்லாத கூற்றுமொழி தலைவியிடத்தன என்றவாறு, என்றது இசைவில்-லாதாரைப் போலக் கூறுதல்,

உதாரணம்:-

*"யாரிவன் என்னை விலக்குவான் நீருளர்*
*பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்*
*கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு*
*சொல்லலோம் பென்றார் எமர்"* (கலித்.112)

என வரும். இதன்பின்,

*"............................*
*எவன் கொலோ*
*மாயப் பொதுவன் உரைத்த உரையெல்லாம்*
*வாயாவ தாயின் தலைப்பட்டாம் பொய்யாயின்*
*சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்*
*ஆயித ழுண்கண் பசப்பத் தடமென்தோள்*
*சாயினும் ஏஎர் உடைத்து"* (கலித். 112)

என உடம்பாடு கூறினாளாதலின் முற்கூறியது அல்ல கூற்றாயிற்று (உ௰)

**நச்சினார்க்கினியம்**

இது நாணும் மடனும் பெரும்பான்மை நிகழாத கூற்றுத் தோழிக்குத் தலைவி கூறுமென்கின்றது.[2]

(இ-ள்.) எதிர் சொல்- அங்ஙனம் நாணும் மடனும் நீங்கிய சொல்லை; அவள் வயின் மொழிதல் அருமைத்து அல்ல ஆகலின்-

1- அல்லகூற்றுமொழி — உடன்பாடல்லாத கூற்றுமொழி; என்றது இசை-வில்லாதாரைப் போலக் கூறும் சொல்.

2. இனி களவில் தலைவன் தலைவி இருவரிடமே நிகழும் வேட்கை வெளிப்பாடு பற்றிய அதிகாரத்தில் அமைந்த இந்நூற்பாவினைத் தோழிக்குத் தலைவி கூறும் கூற்றுப் பற்றியதாகக் கொண்டு உரை வரைதல் பொருந்தாது.

தோழியிடத்துக் கூறுதல் அருமையுடைத்தல்லவாகையினாலே; கூற்றுமொழி ஆன-குறிப்பானன்றிக் கூற்றாற் கூறும்மொழி தலைவிக்குப் பொருந்தின எ-று.[1]

எதிர்தல் தன்றன்மை மாறுபடுதல். 'ஒன்றிய தோழி யொடு' (தொல்-பொ-41) என அகத்திணையிற் கூறுதலானுந் 'தாயத்தினடையா' (தொல்-பொ-221) எனப் பொருளியலிற் கூறுதலானும், அவள்வயின் நாணும் மடனும் நீங்கிய சொல்லைக் கூறுதலும் பொருந்து மென்றான்; அவை முற்காட்டிய உதாரணங்களுட் ''கூடுதல் வேட்கையாற் குறிபார்த்து'' எனவும், ''வளைமுன்கை பற்றி நலியத் தெருமந் திட்டு'' எனவும், ''காமநெறிதரக் கைந்நில்லாதே'' எனவுங் கூறியவாற்றானும், மேற்கூறுகின்ற உதாரணங்களானும், நாணும் மடனும் நீங்கிக் கூற்று நிகழ்ந்தவாறுணர்க.

'சூத்திரத்துட்பொரு ளன்றியும் ...........படுமே' (தொல்-பொ-மர-103) என்பதனால், இவ்விலக்கணம் பெறுதற்கு, இம் மூன்று சூத்திரத்திற்கும் மாட்டுறுப்புப்படப் பொருள் கூறினாம்.

இனிக் கூற்று நிகழுங்கால், நாணும் மடனும் பெண்மையவாதலிற், குறிப்பினும் இடத்தினுமன்றி வேட்கை நெறிப்பட வாராவென்று பொருள் கூறிற், காட்டிய உதாரணங்கட்கு மாறுபாடாகலானுஞ், சான்றோர் செய்யுட்களெல்லாங் குறிப்பும் இடனுமன்றிப் பெரும்பான்மை கூற்றாய் வருதலானும், ஆசிரியர் தலைவன் கூற்றுந் தலைவி கூற்றுந் தோழிகூற்றுஞ் செவிலி கூற்றுமெனக் கூற்றுஞ் சேர்த்து நூல்செய்தலானும் அது பொருளன்மையுணர்க.[2]

---

1. 'சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்
அல்ல கூற்றுமொழி யவள் வயினான'

எனவரும் இச்சூத்திரத்தை 'எதிர்சொல் அவள்வயின் மொழிதல் அருமைத்தல்ல ஆதலின் கூற்றுமொழிஆன' என இங்ஙனம் சொற்களைத் தாம் வேண்டியவாறு பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளுதல் உரைநெறி யன்றாம்.

ஆய்வுரை

இது, தலைமகள் தன் வேட்கையைக் குறிப்பினாலன்றிக் கூற்றினாற் புலப்படுத்துதல் இல்லை என்கின்றது.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவன் தன்னை நோக்கி வினவும் வினாவுக்குத் தலைவி வெளிப்பட மறுமொழி கூறுதல் என்பது அவளது பெண் தன்மைக்கு மிகவும் அருமையுடைய-தாதலின் கூற்றுமொழியல்லாத குறிப்பு மொழிகளே அவள்பால் தோன்றும் எ-று.

'அல்ல கூற்றுமொழி' என்றது, கூற்றுமொழியல்லாத குறிப்பு மொழியினை.

> *"தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்பதென்ப*
> *தாமென லாவதன்றால் அருங்குல மகளிர்க் கம்மா"*
> (கம்ப-சூர்ப்பணகைப் -45)

என்பதும் இங்கு நினைக்கத் தகுவதாம்.

களவின்கண் தலைவன் வினாவும் சொல்லிற்குத் தலைவி எதிர் மொழிகூறுதல்என்பதுமிகவும்அரிதாகலின் அந்நிலையில் கூற்றல்லாத குறிப்பு மொழிகளே அவள்பால் தோன்றும் என்பதாம். அல்ல கூற்று மொழியென்றது, கூற்று மொழியல்லாத குறிப்பு மொழியினை.

இங்ஙனம் கூறுபவர் இளம்பூரணர்.

தலைவி தனது வேட்கையினைக் குறிப்பினாலல்லது கூற்-றினால் வெளிப்படுத்துரைத்தல் அவளது பெண்மைக்கு இயல்பன்று என வற்புறுத்துவதே இந்நூற்பாவாகும். இது கொண்டு களவின்கண் தலைவிக்கு யாண்டும் கூற்று நிகழ்தல் இல்லையெனக் கருதுவார் யாருமிலர். தலைவி கூற்றாக இங்கு எடுத்துக் காட்டிய செய்யுட்கள் எல்லாம் தலைவன்தலைவிபாற் கொண்ட வேட்கையைப்புலப்படுத்தும் நிலையில் அமைந்த கூற்றுக்களேயன்றித் தலைவி தனது வேட்கை-யினை வெளியிட்டுரைக்கும் நிலையில் வந்தன அல்ல என்பதும் இங்குக் குறித்துணரத் தகுவதாகும்.

உக மறைந்தவற் காண்டல் தற்காட் டுறுதல்
நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தல் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினும் நாணுமிக வரினும்
இட்டுப்பிரி விரங்கினும் அருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி எள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினும்
நொந்துதெளி வொழிப்பினும் அச்சம் நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்
வருந்தொழிற் கருமை வாயில் கூறினும்
கூறிய வாயில் கொள்ளாக் காலையும்
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்
உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல
வேற்றுவரைவு வரின் அது மாற்றுதற் கண்ணும்
நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள்
அருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற இயல்பின் கண்ணும்
பொய்தலை அடுத்த மடலின் கண்ணுங்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்
குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினும் களவறி வுறினும்
தமர்தற் காத்த காரண மருங்கினும்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்
பொழுதும் ஆறும் புரைவ தன்மையின்

அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்
காமஞ் சிறப்பினும் அவனளி சிறப்பினும்
ஏமஞ் சான்ற வுவகைக் கண்ணும்
தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்
அன்னவு முளவே ஓரிடத் தான.

**இளம்பூரணம்**

என்றது, தலைவிக்கு இயற்கைப்புணர்ச்சி முதலாகக் களவின்-கட் 'குறிப்பினு மிடத்தினு மல்லது' (களவியல் - 18) நிகழ்ச்சி யெல்லாவற்றினும் கூற்று நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மறைந்தவற் காண்டல் என்பது-தன்னைத் தலைவன் காணாமல் தான் அவனைக் காணுங் காட்சி.

தற்காட்டுறுதல் என்பது - தன்னை அவன் காணுமாறு நிற்றல்.

நிறைந்த ... மழுங்கல் என்பது - நிரம்பிய வேட்கையால் தலைவன் கூறிய சொற் கேட்டு எதிர்மொழி கூறாது மடிந்து நிற்றல்.

இம் மூன்றிடத்தினுங் கூற்று நிகழாது.

வழிபாடு மறுத்தல் என்பது-அதன்பின் இவள் வேட்கைக் குறிப்புக் கண்டு சாரலுற்றவழி அதற்கு உடம்படாது மறுத்தல்.

அது குறிப்பினானும் கூற்றினானும் வரும்.

மறுத்தெதிர்கோடல் என்பது - மறுத்தாங்கு மறாது பின்னும் ஏற்றுக்கோடல்.

பழிதீர்...தோற்றல்-குற்றந்தீர்ந்த முறுவல் சிறிது தோற்று-வித்தல்.

அது புணர்தற்குஉடன்பாடுகாட்டி நிற்கும். இவை ஆறுநிலை-யும் புணர்ச்சிக்கு முன் நிகழும். ஈண்டுங் குறிப்பு நிகழ்ச்சியல்லது கூற்று நிகழ்ச்சி அருகியல்லது வாராது. அவற்றுள் சில வருமாறு:

'இகல்வேந்தன் சேனை' என்னும் முல்லைக்கலியுள்,

*''மாமருண் டன்ன மழைக்கண்சிற் றாய்த்தியர்*
*நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை*
*யாமுனியா ஏறுபோல் வைகற் பதின்மரைக்*
*காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை*

*நீஎவன் செய்தி பிறர்க்கு,*
*யாம்எவன் செய்தும் நினக்கு;"*

இது வழிபாடு மறுத்தது. இன்னும் இதனுள்,

*"தேங்கொள் பொருப்பன் சிறுகுடி எம்ஆயர்*
*வேந்தூட்டு அரவத்து நின்பெண்டிர் காணாமல்*
*காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்*
*தூங்குங் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை*
*ஆம்பற் குழலாற் பயிர்பயிர் எம்படப்பைக்*
*காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி."* (கலி.108)

இது மறுத்தெதிர் கோடல்.

பழிதீர் முறுவல் சிறிதே தோற்றற்கு உதாரணம்:

*"அன்னையோ,*
*மன்றத்துக் கண்டாங்கு சான்றார் மகளிரை*
*இன்றி அமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்*
*நின்றாய்நீ சென்றீ எமர்காண்பர் நாளையுங்*
*கன்றொடு சேரும் புலத்து."* (கலித்.110)

இதனுள் "அன்னையோ" என்பது நகையொடு கூடிய சொல்.

கைப்பட்டுக் கலங்கினும் என்பது—தலைவன் கையகப்பட்ட பின்பு என்செய்தே மாயினேம் எனக் கலக்கமுறினும் என்றவாறு.

நாணுமிகவரினும் என்பது - தலைவிக்கு முன்புள்ள நாணத்-திலும் மிக நாணம் வந்துழியும் என்றவாறு.

இட்டுப்பிரி விரங்கினும் என்பது—தலைவன் இட்டு வைத்துப் பிரிவன் என அஞ்சியதற்கு இரக்க முறினும் என்றவாறு.

அருமைசெய் தயர்ப்பினும் என்பது - தலைவன் வருதற்குக் காவலாகிய அருமை செய்ததனால் அவனும் வருதலைத் தவிரினும் என்றவாறு.

வருதலைத் தவிர்தலை அயர்ப்புஎன்றார். அன்றியும் புறத்து விளையாடுதற்கு அருமை செய்ய மயக்கம் வரினும் என்றுமாம். செய்தென்பதனைச் செயவெனத் திரிக்க.

வந்தவழி எள்ளினும் என்பது—தலைவன் வந்தவிடத்து அல-ராகு மென்றஞ்சி இகழ்ந்தவழியும் என்றவாறு.

விட்டுயிர்த்தழுங்கினும் என்பது—மறையுரைத்து சொல்லி இரங்கினும் என்றவாறு.

நொந்து தெளிவொழிப்பினும் என்பது—தலைவன் தெளிவித்த தெளிவை நொந்து, அதனை யொழிப்பினும் என்றவாறு.

அச்சம் நீடினும் என்பது—தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மிக்குழியும் என்றவாறு.

பிரிந்தவழிக் கலங்கினும் என்பது—தலைவன் பிரிந்தவழிக் கலக்க முறினும் என்றவாறு.

அது தாளாணெதிரும் பிரிவு.

பெற்றவழி மலியினும் என்பது — தலைவனோடு கூட்டம் பெற்றவழி மகிழினும் என்றவாறு.

வருந்தொழிற்கு அருமை வாயில் கூறினும் என்பது – தலைவன் வருதற்கு இடையீடாகக் காவலர் கடுகுதலான் ஈண்டுவருதல் அரிதென்த் தோழி தலைவிக்குச் சொல்லினும் என்றவாறு.

கூறிய...காலையும் என்பது—தோழி இவ்வாறு கூறியதனை மனங்கொள்ளாத காலத்தினும் என்றவாறு.

மனைப்பட்டு ... அருமறை யுயிர்த்தலும் என்பது—புறத்து விளையாடுதல் ஒழிந்து மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்குச் சூழ்தலமைந்த அரிய மறைப்பொருளைச் சொல்லலும் என்றவாறு.

எனவே சிதையாதவழித் தோழிக்குச் சொல்லாளாம் என்பது போந்தது. வேட்கை மறைக்கப்படுதலின் மறையாயிற்று.

'கைப்பட்டுக் கலங்கல்' முதலாகக் 'கூறிய வாயில் கொள்ளாக்காலை' யீறாகச் சொல்லப்பட்ட பன்னிருவகையினும் தலைமகள் தோழிக்கு உரைக்கப்பெறும். அஃது உரைக்குங்கால் மனைப்பட்டுக் கலங்கி மேனி சிதைந்தவழியே உரைக்கப்பெறுவது. ஆண்டும் இதற்கு என்செய்வாம் என உசாவுதலோடுகூடத் தனது காதன்மை தோன்ற உரைக்கும் என்றவாறு. மனைப்படாக்கால் அவனைக் காண்டலால்

உரைக்கவேண்டுவதில்லை யென்றவாறாயிற்று. இப்பன்னிரண்டும் ஒருத்தி மாட்டு ஒருங்கு நிகழ்வன அல்ல. இவ்விடங்கள் உரைத்தற்கு இடமென இலக்கணங் கூறியவாறு.

இதனுட் கைப்பட்டுக் கலங்கியவாறும் அருமறை உயிர்த்த வாறும் இவ்வாறு செய்யாக்கால் இறந்துபடுவன் என்னுங் குறிப்-பினளாய் 'மன்னாவுலகத்து மன்னுவது புரையும்' எனவுங் கூறிய-வாறு காண்க.

இவை யெல்லாம் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தபின் நிகழ்-வன, உள்ளப்புணர்ச்சியான் உரிமை பூண்டிருந்தவரும் இவ்வாறு கூறப்பெறும் என்று கொள்க; ஆண்டு மனநிகழ்ச்சி ஒருப்பட்டு நிற்றலின்.[1]

உயிராக்காலத்து உயிர்த்தலும் உயிர்செல[2] என்பது- இவ்வாறு கூறாக் காலத்து உயிர்செல்லுமாறு சொல்லுதலும் என்றவாறு.

ஈண்டு, உயிர்த்தல் என்பது சுவாதம் எனினும் அமையும். இந் நிகழ்ச்சியைத் தோழிக்கு நாணத்தால் உரையாளாயின், நோயட வருந்தும் என்றவாறு.

வேற்றுவரைவு...தன்பிழைப்பாகத் தழீஇத் தேறலும் என்பது- வேற்று வரைவு வரின் அது மாற்றுதல் முதலாகத் தமர் தற்காத்த காரணப் பக்கம் ஈறாக நிகழும்வழித் தன்குறி தப்பித் தலைவன் எதிர்ப்படுதலில்லாக் காலத்து வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன்குறையாக வுடம்பட்டுத் தேறுதலும் என்றவாறு.[3]

---

1. இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் நிகழ்வனவாகிய இக்கூற்றுக்களை மெய்யுறு புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தவரேயன்றி உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தோரும் ஆண்டு நிகழும் மனநிகழ்ச்சி பற்றிக் கூறுவதற்குரியர் என்பதாம்.

2. உயிராக் காலம் - வெளிப்படக் கூறவியலாத காலம். உயிர்த்தல் - வெளிப்-படக் கூறுதல்.

'உயிர்செல உயிர்த்தல்' என முன்பின்னாக இயைத்துப் பொருளுரைப்பர் இளம்பூரணர்.

3. வேற்றுவரைவுவரின் அது மாற்றுதல் முதலாகத் தமர்தற்காத்த காரணப் பக்கம் ஈறாக நிகழும் நிகழ்ச்சிகளில் தலைவி தான் குறிதப்பித் தலைவன் எதிர்ப்-படுதல் இல்லாக் காலத்து வந்த தலைவன் திரும்பிச் சென்று வறுங்களத்தினை நோக்கித் தான் குறிதப்பியதனால் ஏற்பட்ட குறையென்று உட்கொண்டு அவ்-விடத்திற் கலக்கமின்றித் தெளிவு பெறுவாள் என்பதாம்.

ஆண்டுக் கலக்கமின்றித் தேறுமென்பது கூறினாராம்.

அவ்வழி, வேற்று வரைவு வரின் அது மாற்றுதற்கண்ணும் என்பது-பிறனொருவன் வரைய வரின் அதனை மாற்றுதற்காகவும் தன்குறி தப்பும் என்றவாறு.

நெறிப்படு...மறைப்பினும் என்பது-கூட்டம் உண்மை வழக்கியலால் நாடுகின்ற காலத்து மெய் வேறுபாடு நிகழ்ந்துழி, தோழி அறியாமலும் செவிலி அறியாமலுந் தலைவி மறைப்பினும் என்றவாறு.

பொறியின் ... இயல்பின் கண்ணும் என்பது-பொறி யென்பது ஊழ். ஊழாற் கட்டப்பட்ட புணர்ச்சியைக் குறித்து ஒற்றுமைப்பட்ட நண்பினானே தலைவன் வரைதற்குக் குறையுறுகின்றதனைத் தெளிந்த தலைவி செய்தற்கு அருமையமைந்த எண்வகையினாற் பெருமை இயைந்த இயல்பினளாகி நிற்றற்கண்ணும்[1] என்றவாறு.

எண்வகையாவது மெய்ப்பாட்டியலுள் மனன் அழிவில்லாத கூட்டம் என ஓதுகின்ற,

> *''முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்*
> *அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்*
> *தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்*
> *காதல் கைம்மிகல் கட்டுரை யின்மை.''* (மெய்ப்பாட். 23)

என்பன. அவற்றுள்,

முட்டுவயிற் கழறல் ஆவது-களவொழுக்கம் நிகழாநின்றுழி நிலவு வெளிப்பாடு, காவலர் கடுகுதல், தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, தலைவன் குறிவருவதற்கு இடையீடுபடுதல், இவ்வழிக் களவொழுக்கத்தினாற் பயனின்மை கூறல். அவ்வாறு கூறி இனி இவ்வொழுக்கம் அமையுமெனை வரைந்தெய்துதல்காறும் புணர்ச்சியை விரும்பாது கலக்கமின்றித் தெளிவுடையளாம்.

1. அருமைசான்ற நாலிரண்டு வகையிற் பெருமை சான்ற இயல்பாவது, மெய்ப்பாட்டியலில் வரைந்து எய்துங் கூட்டத்திற்குரியனவாக 'முட்டுவயிற்கழறல்' முதல் 'கட்டுரையின்மை' யீறாகச் சொல்லப்பட்ட எண்வகை மெய்ப்பாடுகளை-யுடையவாகிய இயல்பு என்பர் இளம்பூரணர்.

முனிவு மெய்ந்நிறுத்தல் ஆவது - இவ்வொழுக்கத்தினான் வந்த துன்பத்தைப் பிறர்க்குப் புலனாகாமை மெய்யின் கண்ணே நிறுத்தல்.

அவ்வழியும் வரைந்தெய்தல் சான்றமையும் புணர்ச்சியெனக் குறிவழிச் செல்லாளாம்.

அச்சத்தின் அகறல் ஆவது-இதனைப் பிறரறிவர் என்னும் அச்சத்தினானும் குறிவழிச் செல்லாளாம்.

அவன் புணர்வுமறுத்தல் ஆவது-தலைவன் புணர்ச்சி யில்வழியும் குறிவழிச் செல்லாளாம்.

தூது முனிவின்மை ஆவது-அவ்வழித் தலைவன்மாட்டுத் தூதாகி வருஞ் சொற்கேட்டலை முனிவின்மை.

துஞ்சிச் சேர்தல் ஆவது-உறங்காமையின்றி யுறக்கம் நிகழ்தல்

காதல் கைம்மிகல் ஆவது-இவ்வாறு செய்யுங் காதல் அன்பின்மையன்றி அன்பு மிகுதல்.

கட்டுரை யின்மை ஆவது-கூற்று நிகழ்தலின்மை.

இவையெல்லாம் கலக்கமில்லாத நிலைமை யாதலிற் பெருமை சான்ற இயல்பாயின.

பொய்தலையடுத்த மடலின் கண்ணும் என்பது-பொய்ம்மையால் மடலேறுவன் எனத் தலைவன் கூறியவழியும் வெறுத்த உள்ளத்தளாய்க் குறிவழிச் செல்லாளாம்.

கையறு தோழி கண்ணீர்துடைப்பினும் என்பது-தோழி கையினால் தலைவி கண்ணீர் துடைத்தவழியுங் குறிவழிச் செல்லாளாம்.

வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் என்பது - தலைவி வேறுபாடு எற்றினாயிற்றெனச் செவிலி வெறியாட்டுவிக்க வரும் அச்சத்தினானுங் குறிவழிச் செல்லாளாம்.

குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் என்பது — தலைவன் செய்த குறியை ஒப்புமைபற்றிச் சென்று அஃது அவ்வழி மருளுதற்கண்ணும் குறிவழிச் செல்லாளாம்.

அஃதாவன புள்ளெழுப்புதல் போல்வன. அவைபெற்றுப் புள்ளரவம் எழும். அவ்வாறு மருளுதல்.

வரைவுதலை வரினும் என்பது—தலைவன் வரையவருகின்ற நாள் அணித்தாக வரினும் குறிவழிச் செல்லாளாம்.

களவறிவுறினும் என்பது – களவினைப் பிறர் அறியினும் குறிவழிச் செல்லாளாம்.

தமர்தற்காத்த காரணமருங்கினும் என்பது—தன்னைத் தமர் காத்த காரணப் பக்கத்தினும் என்றவாறு.

அஃது ஐயமுற்றுக் காத்தல்.

வழுவின்று...அன்னவுமுளவே என்பது—வழுவின்று நிலைஇய இயற்படு பொருண் முதலாக 'ஏமஞ்சான்ற உவகை' யீறாகச் சொல்லப்பட்ட இடங்களில் தன்னிடத்து உரிமையும் அவனிடத்துப் பரத்தைமையும் அன்னவையும் நிகழப்பெறும் என்றவாறு.

அன்ன என்பது - அவைபோல்வன என்றவாறு.

ஓரிடத்துக்கண் என்றதனால் இவ்வாறு எல்லார் மாட்டும் எவ்விடத்தும் நிகழாது என்றவாறாம். எனவே மேற் குறிப்பினும் இடத்தினு மல்லது (களவியல் - 18) கூற்று நிகழாதென்பதனை மறுத்து ஓரிடத்துக் கூற்று நிகழும் என்றவாறாம்.

அவற்றுள் வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும் என்பது—தலைவனை இயற்பழித்தவழி அவன் குற்றமிலனாக நிலைநிறுத்தப்பட்ட இயற்பட மொழிந்த பொருண்மைக் கண்ணும் தன்வயின் உரிமைதோன்றவும் அவன்வயிற் பரத்தைமை தோன்றவும் கூறும் தலைவி என்றவாறு.

இரண்டினுள் ஒன்றுதோன்ற உரைக்குமென்றவாறு. எனவே இரண்டுந் தோற்ற வருவனவு முளவாம்.

பொழுது மாறும்...சிந்தைக் கண்ணும் என்பது — தலைவன் வருங் காலமும் இடனும் குற்றமுளவாதலான். ஆண்டு அழிவு வந்த சிந்தைக் கண்ணும் தலைமகள் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் தோன்றக் கூறும் என்றவாறு.

காமஞ் சிறப்பினும் என்பது — தலைமகன்மாட்டு வேட்கை மிகினும் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் உரைக்குந் தலைவி என்றவாறு.

அவன் அளி சிறப்பினும் என்பது — தலைவன் தலையளி மிக்கவழியும் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் தோன்றக்கூறும் என்றவாறு.

ஏமஞ்சான்ற உவகைக்கண்ணும் என்பது—ஏமம் பொருந்திய மகிழ்ச்சி வந்துழித் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் தோன்றக் கூறும் என்றவாறு. அஃதாவது இவன் வரைந்தல்லது நீங்கான் என்னும் உவகை.

பரத்தைமை தோன்ற வந்ததற்குச் செய்யுள்:—

"...... ..........................
கணங்கொள் இடுமணற் காவி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் தளிக்கும்
மணங்கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை" (கலித். 131)

என்னும் பாட்டினுள் தான் ஊடினாளாகவும் மகிழ்ந்தவாறும் அவன் வயிற் பரத்தைமை கூறியவாறும் காண்க.

இச் சூத்திரத்தாற் சொல்லியது 'மறைந்தவற் காண்டல்' முதலாக ஓதப்பட்ட அறுவகைப் பொருண்மையும், 'கைப்பட்டுக் கலங்கல்' முதலாகக் 'கூறியவாயில் கொள்ளாக்காலை' ஈறாகவரும் மகிழ்ச்சியினால்[1] மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழி எண்ணுதல் சான்ற அருமறையைச் சொல்லுதலும், இவ்வாறும் எண்ணாந்தான் உரையாக்காலத்துத் தன்னுயிர் செல்லுமாறு உரைத்தலும், 'வேற்றுவரைவு வரின் அது மாற்றுதல்' முதலாகத் 'தமர்தற்காத்த காரணப்பக்கம்' ஈறாகத் தன் குறிபிழைக்க நிற்கப் பெறும் எனவும், அவ்வழித் தலைவன் வந்து பெயர்ந்துழிக் கலக்கமின்றி தெளிதலும், 'வழுவின்று நிலைஇய இயற்படு பொருள்' முதலாக 'ஏமம் சான்ற உவகை' ஈறாகத் தான் உரியளாகிய நெறியும் தலைவன் அயலாகிய நிலையும்போ லவரிற்[2] சொல்லப்பெறும் எனவும்

1. 'நிகழ்ச்சியினால்' எனத் திருத்துக.

2. 'லவளாற் எனத் திருத்துக.

குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை நெறிப்பட்டவாறாகத் தலைவிக்குக் கூற்று நிகழுமிடமும் உணர்த்தியவாறு.[1] (21)

நச்சினார்க்கினியம்

இதனுள் தலைவி கூற்று நிகழ்த்துமாறு கூறுகின்றான். சில கூற்றுக்களுள் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் பட நிகழ்த்தவும் பெறுமென்கின்றான். 'அவன்வயின்' எனவே 'தன்'னென்றது தலைவியையாம்; உரிமை களவிலே கற்புக்கடம் பூண்டொழுகல்; எனவே, புலவியுள்ளத்தாளாகவும் பெறுங் களவினென்பது கருதிப் பரத்தையுமுள என்றான்; ஊடலும் உணர்த்தலும் வெளிப்பட நிகழாமையின் இவை புலவிப் போலி.[2] பரத்தை, அயன்மை. அவன்கட் பரத்தைமை யின்றேனும் காதன்மிகுதியான் அங்ஙனங் கருதுதல் பெண்தன்மை. உம்மை எதிர்மறையாகலின் இவ்விரண்டும் இலவாதலே பெரும்பான்மை.

(இ-ள்.) மறைந்து அவற் காண்டல்-தலைவன் புணர்ந்து நீங்குங்கால் தன் காதன்மிகுதியால் அவன் மறையுந்துணையும் நோக்கிநின்று அங்ஙனம் மறைந்தவனைக் காண்டற்கண்ணுந் தோழிக்குக் கூற்றாற் கூறுதலுள :

உ-ம்: "*கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்*
*வண்டற் பாவை வரிமண லயர்ந்தும்*
*இன்புறப் புணர்ந்து மிளிவரப் பணிந்தும்*
*தன்றுயர் வெளிப்படத் தவறில் நந்துயர்*
*அறியா மையி னயர்ந்த நெஞ்சமொடு*
*செல்லு மன்னோ மெல்லம் புலம்பன்*

---

1. மறைந்தவற்காண்டல், தற்காட்டுறுதல், சொல்லெதிர் மழுங்கல் இம் மூன்றிடத்திலும் கூற்று நிகழாது. வழிபாடு மறுத்தல் குறிப்பினானும் கூற்றினானும் வரும். முறுவல் சிறிதே தோற்றல்புணர்தற்கு உடம்பாடு காட்டி நிற்கும். ('மறைந்தவற் காண்டல்' முதலாகவுள்ள) இவை ஆறு நிலையும் புணர்ச்சிக்கு முன் நிகழும். ஈண்டும் குறிப்பு நிகழ்ச்சியல்லது கூற்று நிகழ்ச்சி அருகியல்லது வாராது.

2. கற்பின்கண் பரத்தை காரணமாகத் தலைமகள்பால் தோன்றும் புலவி, உணர்த்தலானன்றி நீங்காது. களவின்கண் தோன்றும் அயன்மை பற்றிய இப்புலவி தலைவன்கண் பரத்தமையின்றியும் தலைவி தனது காதல் மிகுதியால் அங்ஙனம் ஏறிட்டுக்கொள்ளும் பெண்ணியல்பால் சிறிது போது வெளிப்பட்டுக் கடிதின் மாறும் இயல்பினதாதலின் புலவிப்போலி என்றார்.

*செல்வோன் பெயர்புறத் திரங்கி முன்னின்று*
*தகைஇய சென்றவெ னிறையி னெஞ்சம்*
*எய்தின்று கொல்லோ தானே யெய்தியும்*
*காமஞ் செப்ப நாணின்று கொல்லோ*
*உதுவ காணவர் ஊர்ந்த தேரே*
*குப்பை வெண்மணற் குவவுமிசை யானும்*
*எக்கர்த் தாழை மடல்வயி னானும்*
*ஆய்கொடிப் பாசடும் பரிவுூர் பிழிபு*
*சிறுகுடிப் பரதவர் பரதவர் பெருங்கடன் மடுத்த*
*கடுஞ்செலற் கொடுந்திமில் போல*
*நிவந்துபடு தோற்றமொ டிகந்துமா யும்மே.''* (அகம். 330)

'அறியாமையின் அயர்ந்த நெஞ்சமொடு' என்பது தன் வயனுரிமை; 'இகந்து மாயும்' என்பது அவன்வயிற் பரத்தைமை.

தற்காட்டுறுதல்—தன்னை அவன் காணாவகை நாணான் மறைந்து ஒழுகினுந் தன் பொலிவழிவினை அவற்குக் காட்டல் வேண்டுதற்கண்ணும் : அது,

*''இன்ன ளாயினள் நன்னுத லென்றவர்த்*
*துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே*
*நன்றுமன் வாழி தோழிநம் படப்பை*
*நீர்வார் பைம்புதற் கலித்த*
*மாரிப் பீரத் தலர்சில கொண்டே.''* (குறுந். 93)

'இன்னளாயின்' னென்றது தற்காட்டுறுதல்; 'செப்புநர்ப் பெறினே' யென்பதனாற் களவாயிற்று; கற்பிற்கு வாயில்கள் செப்புவார் உளராதலின், இதற்கு இரண்டும் உள.[1]

நிறைந்த காதலிற் சொல் எதிர்மழுங்கல்—தலைவி காதன் மிகுதியால் தலைவன் பரத்தைமையை எதிர்கூற நினைந்து கூற் றெய்தாது குறைபடுதற்கண்ணும்.

---

2. இதற்கு - இக்களவிற்கு. இரண்டும் - தன் வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தமையும் ஆகிய இரண்டும்.

உ-ம் "பிறைவனப் பிறந்த நுதலும் யாழநின்
இறைவரை நில்லா வளையு மறையாது
ஊரலர் தூற்றுங் கௌவையு நாணிட்
டுரையவற் குரையா மாயினு மிரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது
முடமுதிர் நாரை கடன்மீ னொய்யு
மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக்
கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக்
குரைத்த தோழி யுண்க ணீரே." (நற்றிணை, 263)

இது 'யாம் உரையாமாயினுங் கண் உரைத்தன' என்றலின் இரண்டுங் கூறினாள்.

வழிபாடு மறுத்தல்—வருத்தமிகுதியாற் றலைவனை வழி படுதலை மறுத்துக் கூறுமிடத்தும்:

"நீயுடம் படுதலின் யான்றர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை யளவை சென்றைக் கென்றி
கையுங் காலு மோய்வன வொழுகத்
தீயுறு தளிரி னடுங்கி
யாவது மில்லையான் செயற்குரி யதுவே." (குறுந். 383)

இத் தோழி கூற்றே 'சென்றைக்க' வென்றதனால் தலைவி மறுத்தமை பெற்றாம்.

மறுத்து எதிர்கோடல்-அங்ஙனம் வழிபாடு மறுத்த தலைவியே அவனை ஏற்றுக்கோடலை விரும்பியக்கண்ணும்; அது,

"கௌவை யஞ்சிற் காம மெய்க்கு
மெள்ளற விடினே யுள்ளது நாணே
பெருங்களிறு வாங்க முறிந்துநிலம் படாஅ
நாணுடை யொசிய லற்றே
கண்டிசிற் றோழியவ ருண்டவென் னலனே." (குறுந். 112)

இது 'நாணேயுள்ளது கற்புப்போம்' என்றலின் மறுத்தெதிர் கோடலாம்.

பழி தீர் முறுவல் சிறிதே தோற்றல்-தன் கற்பிற்கு வரும் பழி தீர்ந்த தன்மையால் தன்கண் தோன்றிய மகிழ்ச்சியைச் சிறிதே தோழிக்குத் தோற்றுவித்தற்கண்ணும் :

தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் முருகனால் தீர்ந்ததென்று அவன் கேட்பிற் கற்பிற்குப் பழியாமாதலிற் 'பழி' யென்றார்.

உ-ம்: *"அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதருங்*
*கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்*
*மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்*
*இதுவென வறியாள் மறுவரற் பொழுதில்*
*படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை*
*நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென*
*முதுவாய்ப் பெண்டி ரதுவாய் கூறக்*
*களனன் கிழைத்துக் கண்ணி சூட்டி*
*வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்*
*துருவச் செந்தினை குருதியொடு தூஉய்*
*முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநாள்*
*ஆர நாற வருவிடர்த் ததைந்த*
*சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்*
*களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கின்*
*ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல*
*நன்மனை நெடுநகர் காவல ரறியாமைத்*
*தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப*
*இன்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து*
*நக்கனென் அல்லனோ யானே எய்த்த*
*நோய்தணி காதலர் வரஈண்*
*டேதில் வேலற் குலந்தமை கண்டே."* (அகம்.22)

இதனுட் பழிதீர அவன் வந்து உயிர்தளிப்ப முயங்கி நக்க நிலையைத் தோழிக்குத் தலைவி கூறியவாறு காண்க.

கைப்பட்டுக் கலங்கினும் - தலைவி குறிப்பினன்றி எதிர்ப்பட்ட தலைவன் ஒருவழி அவளை அகப்படுத்தவழிக் காட்சி விருப்பினளா-யினும் அப்பொழுது அவள் கலங்கினும் :

பழி தீர் முறுவல் சிறிதே தோற்றல்-தன் கற்பிற்கு வரும் பழி தீர்ந்த தன்மையால் தன்கண் தோன்றிய மகிழ்ச்சியைச் சிறிதே தோழிக்குத் தோற்றுவித்தற்கண்ணும் :

தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் முருகனால் தீர்ந்ததென்று அவன் கேட்பிற் கற்பிற்குப் பழியாமாதலிற் 'பழி' யென்றார்.

உ-ம்: *''அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதருங்*
*கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்*
*மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்*
*இதுவென வறியாள் மறுவரற் பொழுதில்*
*படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை*
*நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென*
*முதுவாய்ப் பெண்டி ரதுவாய் கூறக்*
*களனன் கிழைத்துக் கண்ணி சூட்டி*
*வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்*
*துருவச் செந்திணை குருதியொடு தூஉய்*
*முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநாள்*
*ஆர நார வருவிடர்த் ததைந்த*
*சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்*
*களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கின்*
*ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல*
*நன்மனை நெடுநகர் காவல ரறியாமைத்*
*தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப*
*இன்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து*
*நக்கனென் அல்லனோ யானே எய்த்த*
*நோய்தணி காதலர் வரஈண்*
*டேதில் வேலற் குலந்தமை கண்டே.''*      (அகம். 22)

இதனுட் பழிதீர அவன் வந்து உயிர்தளிப்ப முயங்கி நக்க நிலையைத் தோழிக்குத் தலைவி கூறியவாறு காண்க.

கைப்பட்டுக் கலங்கினும் - தலைவி குறிப்பினன்றி எதிர்ப்பட்ட தலைவன் ஒருவழி அவளை அகப்படுத்தவழிக் காட்சி விருப்பினளா-யினும் அப்பொழுது அவள் கலங்கினும் :

கற்பினுட் சொல்லாத பிரிதலையும் இட்டுப் பிரிவென்ப, களவு போல நிகழ்பொருள் உணர்த்திப் பிரிதலருமையின்.

உ-ம்: *''யானே யீண்டை யேனேயென் னலனே*
*ஆனா நோயொடு கான லஃதே*
*துறைவன் றம்மூ ரானே*
*மறையல ராகி மன்றத் தஃதே''* (குறுந்.97)

'*தம்மூரான்*' என்றலின் ஓதன் முதலிய பிரிவின்றி அணித் தாயவழிப் பிரிந்தானென அவ்விரண்டும் பயப்பக் கூறியவாறு காண்க.

*''சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பைந்தோ*
*டெறி திரைத் திவலை யீர்ம்புற நனைப்பப்*
*பனிபுலந் துறையும் பல்பூங் கானல்*
*விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பி னொருநம்*
*இன்னுயி ரல்லது பிறிதொன்*
*றெவனோ தோழி நாமிழப் பதுவே.''* (குறுந். 334)

இதுவும் அது.

இவை களவினுட் புலவிப்போலியாம்.

அருமை செய்து அயர்ப்பினும் - முற்கூறிய இட்டுப் பிரிவே யன்றித் தலைவன் தன்னை அரியனாகச் செய்துகொண்டு தம்மை மறப்பினும் :

அது தண்டாதிரத்தலை (தொல்-பொ-102) முனிந்த மற்றையவழித் தலைவன் தானும் அரியனாய் மறந்தான் போன்று காட்டினும் அவ்விரண்டுங் கூறுதலாம்.

உ-ம்: *''தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்*
*தாமறிந் துணர்க வென்ப மாதோ*
*வழுவப் பிண்ட நாப்ப ணேமுற்*
*றிருவெதி ரீன்ற வேற்றிலைக் கொழுமுளை*
*சூன்முதிர் மடப்பிடி நாண்மேய லாரும்*
*மலைகெழு நாடன் கேண்மை பலவின்*
*மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்*
*விடரளை வீழ்ந்துக் காங்குத் தொடர்பறச்*
*சேணுஞ் சென்றுக் கன்றே யறியா*

*தேக லடுக்கத் திருண்முகை யிருந்த*
*குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர்*
*இன்னு மோவா ரென்றிறத் தலரே.''* (நற்றிணை, 116)

தீங்கு செய்தாரையும் பொறுக்கிற்பார் நம்மைத் துறத்தலின் நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினார் போலு மென அவ்விரண்டுங் கூறினாள்.

வந்தவழி எள்ளினும் - பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்தஞான்றும் பெறாதஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனையுங் கனவுபோன்றுகொண்டு இகழ்ந்திருப்பினும் ;

*''வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை*
*யாரஞ ருற்றன கண்.''* (குறள், 1179)

*''இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்*
*புன்கண் உடைத்தாற் புணர்வு.''* (குறள், 1152)

'வரிற்றுஞ்சா' வெனவும் 'புன்கணுடைத்து' எனவும் வரவும் பிரிவும் அஞ்சி இரண்டும் நிகழக் கூறினாள் இது முன்னிலைப் புறமொழி.

*''கண்டிரண் முத்தம் பயக்கும் இருமுந்நீர்ப்*
*பண்டங்கொள் நாவாய் வழங்குந் துறைவனை*
*முண்டகக் கானலுட் கண்டேன் எனக்கெளிந்தேன்*
*நின்ற வுணர்விலா தேன்.''* (ஐந். எழு.61)

இது முன்பு இன்பந் தருவனென உணர்ந்துநின்ற உணர்வு கண்டில்லாத யான் புணர்ச்சி வருத்தந்தருமென்று தெளிந்தே னென்றா ளென்க.

விட்டு உயிர்த்து [1] அழுங்கினும் - கரந்த மறையினைத் தலைவி தமர்க்கு உரைத்தற்குத் தோழிக்கு வாய்விட்டுக் கூறி, அக்கூறி-யதனையே தமர்கேட்பக் கூறாது தவிரினும்:

உயிர்த்தல், கூறுதல்.

---

1. விட்டுயிர்த்தல் - உள்ளங்கரந்த மறையினை வாய்விட்டுக் கூறுதல். அழுங்குதல் - தவிர்தல்,

நொந்து தெளிவு ஒழிப்பினும் - வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்றவழி அதற்கு நொந்து தெளிவிடை விலங்கினும்:[1]

''எம்மணங்கினவே'' (குறுந்தொகை, 53) என்பது தலைவி கூறக் கேட்டுத் தோழி கூறியது. அதுவும் இதனாற் கொள்க.

அச்சம் நீடினும்-தெய்வம் அச் சூளுறவிற்கு அவனை வருத்து-மென்றுந் தந்தை தன்னையர் அறிகின்றாரோ வென்றுங் கூட்ட முண்மை உணர்ந்த தோழிக்கும் உண்மை கூறுதற்கும் அஞ்சிய அச்சம் நீட்டிப்பினும்;

பிரிந்தவழிக் கலங்கினும் - களவு அலராகாமல் யான் பிரிந்-துழித் தலைவி கலங்குவளென்று அஞ்சித் தலைவன் பிரியாது உறைதலிற் பிரிவைக் கருதப்பெறாத தலைவி அவ்வாறன்றிப் பிரிந் துழிக் கலங்கினும்;

பெற்றவழி மலியினும்[2] - தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்றஞான்று புதுவது மலியினும்;

வரைவு நீட்டித்த காலத்துப் பெற்றவழி மலிவை வெளிப் படக் கூறுதலும், வரைவு நீட்டியாதவழிப் பெற்றவழி மலிவை வெளிப்படுத்தாமையும் உணர்க.

உ-ம்: ''இன்னிசை உருமொடு கனைதுளி தலைஇ
*மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்*
*காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது*
*வரிஅதள் படுத்த சேக்கைத் தெரியிழைத்*
*தேனாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை*
*கூதிரிற் செறியுங் குன்ற நாட*
*வனைந்துவர விளமுலை ஞெமுங்கப் பல்லூழ்*
*விளங்குதொடி முன்கை வளைந்து புறஞ் சுற்ற*
*நின்மார் படைதலின் இனிதா கின்றே*
*நும்மில் புலம்பினும் உள்ளுதொறு நலியும்*

---

1. தெளிவிடை விலங்கல் - முன்னர்க் கொண்ட தெளிவின்கண் ஐயுற்று மாறுபடல்.

2. பெற்றவழிமலிவு, வரைவு நீட்டித்தவிடத்து வெளிப்பட்டும் நீட்டியாதவழி வெளிப்படாதும் நிகழ்தற்குரித்து என்பதாம். நீட்டித்தல் - தாமதித்தல்,

*தண்வரல் அசைஇய பாம்பில் வாடை*
*பதம்பெறு கல்லா இடம்பார்த்து நீடிய*
*மனைமர மொசிய வொற்றிப்*
*பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே.''* (அகம். 58)

முயக்கம் இனிதெனை மகிழ்ந்து கூறுவாள் நும்மில் புலம்பால் வாடைக்கு வருந்தினே மென்றலின் இரண்டுங் கூறினாள்.[1]

*''அம்ம வாழி தோழி நலமிக*
*நல்ல வாயின வளியமெ னாள்கள்*
*மல்ல லிருங்கழி மல்கும்*
*மெல்லம் புலம்பன் வந்த மாறே''* (ஐங்குறு. 120)

*''அம்ம வாழி தோழி பன்மாண்*
*நுண்மணை லடைகரை நம்மொ டாடிய*
*தண்ணந் துறைவன் மரீஇ*
*அன்னை யருங்கடி வந்துநின் றோனே.''* (ஐங்குறு. 115)

எனவரும்.

இவை தோழிக்குக் கூறியன. 'பெற்றவழி மலியினும்' எனப் பெறுபொருள் இன்னதெனவும் இன்னார்க்குக் கூறுவதெனவும் வரையாது கூறவே, பிறர் பெற்று மலிந்து பிறர்க்குக் கூறுவனவுங் கொள்க.

*''அம்ம வாழி தோழி யன்னைக்*
*குயர்நிலை யுலகமுஞ் சிறிதால் அவர்மலை*
*மாலைப் பெய்த மணங்கமழ் முந்தி*
*யேர்குலை நிவந்த முழுமுதற் காந்தள்*
*மெல்லிலை குழைய முயங்கலும்*
*இல்லுய்த்து நடுதலுங் கடியா தோட்கே.''* (குறுந். 361)

இது பெற்றவழி மகிழ்ந்து தோழிக்கு உரைத்தது. இதற்கும் இரண்டுங் கூறினாள்.

வரும் தொழிற்கு அருமை வாயில் கூறினும் - தலைவன் இடைவிடாது வருதற்கு, ஆண்டு நிகழும் ஏதம் பலவாற்றானும் உளதாம் அருமையை, வாயிலாகிய தோழி கூறினும், தலைவிக்குக் கூற்று நிகழ்தலுள ;

---

1. இரண்டு ; தன்வயின் உரிமை, அவன்வயிற் பரத்தைமை.

அது,

*''நள்ளென் றன்றே யாமம் சொல்லவிந்*
*தினிதடங் கினரே மாக்கண் முனிவின்று*
*நனந்தலை யுலகமும் துஞ்சும்*
*ஓர்யான் மன்ற துஞ்சா தேனே.''* (குறுந். 6)

இதனுட் பொழுது சென்றதில்லையென்றும், மாக்கள் இன்னுந் துயின்றிலரென்றும் அருமையை வாயில் கூறியவழித், தலைவி யாமமும் நள்ளென்றும் மாக்களுந் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியவாறு காண்க.

நாம் ஏவிய தொழில் ஏற்றுக்கொண்டு வருகின்றவன், ஒரு காரணத்தானன்றி வாராதொழியுமோ வென்று தலைவி கொள்ளுமாறு கூறுமென்றற்குத் தொழிலென்றார்.

கூறுய வாயில் கொள்ளாக் காலையும் - தலைவற்குக் குறை நேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழியும் பிறவறியுந், தோழி கூற்றினைத் தலைவி ஏற்றுக்கொள்ளாத காலத்துக்கண்ணும்:[1] வாயில், தோழி.

உ - ம்: *''தெருவின்கட், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ*
*வாரண வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில*
*நீநின்மேற் கொள்வ தெவன்''* (கலி. 60)

எனத் தோழி கூற்றினை மறுத்தது.

நற்றிணை, 133: இது தோழி கூற்றினை நன்கு மதியாது கூறினாள்.

மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும் - காப்பு மிகுதிக்கண் மனையகப் பட்டுக் கலங்கி உணர்வு அழிந்தவழித், தலைவி ஆராய்ச்சி யுடைத்தாகிய அருமறையினைத் தோழிக்குக் கூறுதலும் உள.

உ - ம்: *''கேளா யெல்ல தோழி யல்கல்*
*வேணவா நலிய வெய்ய வுயிரா*
*வேமான் பிணையின் வருந்தினெ னாகத்*

1. 'வாயில் கூறிய கொள்ளாக்காலையும்' என இயைத்துப் பொருள் கூறப்பட்டது.

துயர்மருங் கறிந்தனள் போல அன்னை
துஞ்சா யோஎன் குறுமக ளென்றலின்
சொல்வெளிப் படாமை மெல்லவென் னெஞ்சிற்
படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்
கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்
கண்ணும் படுமோ வென்றிசின் யானே.'' (நற்றிணை,61)

இதனுள் துஞ்சாயோவெனத் தாய் கூறியவழி, மனைப்பட்டுக் கலங்கியவாறும், படர்ந்தோர்க்கென மறையுதிர்த்தவாறும், கண்படாக் கொடுமை செய்தானெனப் பரத்தைமை கூறியவாறுங் காண்க.

''பொழுது மெல்லின்று பெயலு மோவாது
கழுதுகண் பனிப்ப வீசு மதன்றலைப்
புலிப்பற் றாலிப் புதல்வற் புல்லி
அன்னா வென்னு மன்னையு மன்னோ
என்மலைந் தனன்கொ றானே தன்மலை
ஆர நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனவே.'' (குறுந்.161)

''பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
எலவெள் றிணைபயிரும் ஏகல்சூழ் வெற்பன்
புலவுங்கொல் தோழி புணர்வறிந் தன்னை
செலவுன் கடிந்தாள் புனத்து.'' (திணை, ஐம்.10)

இவையும் அது. இன்னும் 'மனைப்புட்டுக் கலங்கி' யென்றதனாற் காப்புச் சிறைமிக்க கையறுகிளவிகளுங் கொள்க.

உயிராக் காலத்து உயிர்த்தலும் - தலைவனோடு தன்றிறத்து ஒருவரும் ஒன்று உரையாதவழித், தனதாற்றாமையால், தன்னோடும் அவனோடும் பட்டன சில மாற்றந் தலைவி தானே கூறுதலும் உள :

தோழி மறைவெளிப்படுத்துக் கோடற்கு வாளாது இருந்துழித், தலைவன் தன்மேல் தவறிழைத்தவழி, இரண்டும்படக்[1] கேட்போரின்றியுங் கூறுதலாம்.

உயிராதாள் தோழியாயினாள்; அவள் தலைவி கூறுவன கேட்டற்குப் பொய்த்துயில் கொள்ளும்.

9. இரண்டும்பட - தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் பொருந்த.

உயிர்த்தலுமெனப் பொதுப்படக் கூறியவதனால் தோழிக்குக் கூறுவனவுங் கொள்க.

உயிர்செல வேற்று வரைவு வரின் அது மாற்றுதற் கண்ணும் - இறந்துபாடு பயக்குமாறுபோல் தன்றிறத்து நொதுமலர் வரையக் கருதியஞான்று அதனை மாற்றுதற்கண்ணும் :

நெறிபடு நாட்டத்து[1] நிகழ்ந்தவை மறைப்பினும் - தோழி கூட்டமுண்மை வழக்கியலால் நாடுகின்ற காலத்துக், கண்சிவப்பும் நுதல் வேறுபாடும் முதலிய மெய்வேறுபாடு நிகழ்ந்துழி, அவற்றைத் தோழி அறியாமலுஞ் செவிலி அறியாமலுந் தலைவி தான் மறைப்பினும் :

உ-ம்: *''கண்ணும் தோளும் தண்ணறுங் கதுப்பும்*
*ஒண்டொடி மகளிர் தண்டலை யல்குலும்*
*கான்றொறுங் கவினை யென்றி புதுமற்*
*றீண்டு மறந்தனையாற் றெரிதே வேண்டாய்*
*நீயே வன் மயங்கினை தோழி*
*யாமினுஞ் சிறந்தன்று நோய்பெரி துழந்தே.''*

காதன் மிகுதியாற் கவினையென்றாளாய், வேறுப்பட்டனை யென்று எற்றுக்கு மயங்கினையெனத் தலைவி தன் வருத்தம் மறைத்தாள்.

*''துறைவன் துறந்தெனத் துறையிருந் தழுதஎன்*
*மம்மர் வாண்முகம் நோக்கி அன்னைநின்*
*அவலமுரையென் றனளே கடலென்*
*பஞ்சாய்ப் பாவை கொண்டு*
*வண்டலஞ் சிறுமனை சிதைத்த தென்றேனே.''*

இது செவிலிக்கு மறைத்தது.

ஒருமைக் கேண்மையின்[2] உறுகுறை தெளிந்தோள் - தான் அவளென்னும் வேற்றுமையில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய குறையை ; பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கித் தெளிந்தோள் - முன்னர்த் தெய்வப் புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அது காரணத்தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி ; அருமை

1. நெறிபடுநாட்டம் - வழக்கியலால் நாடுதல்.

2. ஒருமைக் கேண்மை - தான் அவள் என்னும் வேறுபாடின்றியமைந்த நட்பு. 'ஒன்றித்தோன்றுந்தோழி' என்றதும் இக்கருத்தினதே.

சான்ற நால் இரண்டு வகையில்[1] - தான் முன் அருமை அமைந்து நின்ற நிலையால் தலைவன் தன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப் பயிறல் முதலிய எட்டினாலே; பெருமை சான்ற இயல்பின்கண்ணும்-தனக்கு உளதாம் பெருமை கூறுதற்கு அமைந்ததோர் இயல்பின் கண்ணும்:

என்றது, தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன் பெருமை தோழிக்குக் கூறுதலாம்.

உ-ம்: ''மின்னொளி ரவிர்அற லிடைபோழும் பெயல்மேபோல்
பொன்னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை யிட்ட கமழ் நறும் பூங்கோதை
இன்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதால் நினக்கொன்று கூறுவாங் கேளினி;
நில்லென நிறுத்தான் நிறுத்தே வந்து
நுதலும் முகனும் தோளுங் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளரும் கிளியு மன்று;

1. அருமை சான்ற நாலிரண்டு - தலைவன் தன்கண் (தலைமகள்பால்) நிகழ்த்திய மெய்தொட்டுப் பயிறல் முதலிய எட்டு. களவியல் 11 ஆம் நூற்பாவில் 'பேராச் சிறப்பின் இருநான்கு கிளவி' என்றது, இவ்வெட்டினையுமே என்பர் நச்சினார்க்கினியர். 'முட்டுவயிற் கழறல்' (23) முதலாக மெய்ப்பாட்டியலிற் கூறப்படும் எட்டினையும் என்பர் இளம்பூரணர்.

''இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத்த மைதியும் மாசில் சூழ்ச்சியும்'' — (பெருங்-1: 36—8991)

எனத் தலைவற்குப் பெருமையமைந்தன எட்டுக் குணமென்று கூறின், 'அறுவகைப் பட்ட பார்ப்பனப்பக்கம்' என வரையறுத்த வாறுபோல இவையொழித்துத் தலைவற்குச் சிறந்தனவாக வேறுகுணங்கள் எண்ணுதற்கில்லையாகல் வேண்டும். இங்கு எண்ணப்பட்டன எட்டினுள் அடங்காமல் தலைவற்குரிய குணங்கள் வேறும் உண்மையானும், இங்குச் சொல்லப்பட்ட இளமை முதலிய எட்டினையுமே தலைவி எண்ணிக்கூறினாள் என்பதற்கு உதாரணம் இன்மையானும், இவ்வெட்டினையும் தொல்காப்பியர் கிளந்தோதாமையானும் இக்கூற்றுப் பொருந்தாது என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

*எனவாங்*
*கனையன பலபா ராட்டிப் பையென*
*வலையர் போலச் சோர்பதன் ஒற்றியென்*
*நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉப்*
*புலையர் போலப் புன்கணோக்கித்*
*தொழலுந் தொழுதான் தொடலுந் தொட்டான்*
*காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்*
*தொழூஉந் தொடூஉமவன் றன்மை*
*ஏழைத் தன்மையோ வில்லை தோழி.''* (கலி.55)

இதனுட் 'பாராட்டி' யெனப் பொய்பாராட்டலுஞ், 'சோர் பதனொற்றி'யென நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கூறுதலிற் கூடுத லுறுதலும், 'புலையர்போல நோக்கி' யென நீடு நினைந்திரங்கலும், 'தொழலுந் தொழுதா'னென இடம்பெற்றுத் தழாஅலுந், 'தொடலுந் தொட்டா'னென மெய்தொட்டுப் பயிறலும், அவனிகழ்த்தியவாறுங் கூறி, மதத்தாற் பரிக்கோலெல்லையில் நில்லாத களிறுபோல, வேட்கை மிகுதியான் அறிவினெல்லையில் நில்லாதவனெனத் தீராத தேற்றமும் ஒருவாற்றாற் கூறித் தனக்குப் பெருமைசான்ற இயல்பைப் பின்னொருகால் தோழிக்குக் கூறியவாறு காண்க.

இனித் தலைவர்க்குப் பெருமை அமைந்தன எட்டுக்குண மென்று கூறி, அவற்றை,

*''இளமையும் வனப்பு மில்லொடு வரவும்*
*வளமையுந் தறுகணும் வரம்பில் கல்வியும்*
*தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியும்''* (பெருங்.1:36-89-91)

எனப் பொருள் கூறின், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' (தொல்.பொ. 75) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய எண்கள், அவை கூறிய வடநூல்களில் வேறே எண்ணுதற்கு உரியன சில இல்லாமல் எண்ணானாற்போல, ஈண்டும் இளமை முதலிய எட்டும் ஒழிய வேறெண்ணுதற்கு உரியன எட்டுந் தலைவற்கின் றாகக் கூறல் வேண்டும்; ஈண்டு அவ்வாறின்றித் தலைவற்கு உரியன வாகப் பலவகைகளான எவ்வெட்டுளவாகக் கூறக்கிடந்தமையின் அங்ஙனம்

ஆசிரியர் இலக்கணங் கூறாரென மறுக்க. அன்றியும் எட்டும் எடுத்து ஓதுபவென்றும் உதாரண மின்றென்றும் மறுக்க.[1]

இனி, 'முட்டுவயிற்கழறன், முனிவு மெய்ந்நிறுத்தல், அச்சத் தினகறல், அவன் புணர்பு மறுத்தல், தூது முனிவின்மை, துஞ்சிச் சேர்தல், காதல் கைம்மிகல், கட்டுரையின்மை' என்பன எட்டுமென்று (தொல். பொ. 271) அவற்றை ஈண்டுக் கொணர்ந்து பொருள் கூறிற், கூற்றுக் கூறுகின்றவிடத்து மெய்ப்பாடு கூறின் ஏனைமெய்ப்பாடுகளுங் கூற்றுக் கூறுகின்றவிடத்தே கொணர்ந்து கூற்றினுள் அடங்கக் கூறல்வேண்டுமென்று மறுக்க.[2]

பொய்தலை அடுத்த மடலின்கண்ணும் - பொய்யினைத் தலைக்கீடாகவுடைய மடலின் கண்ணும் :

அது மடன்மா கூறியவழி அம்மடலினை மெய்யெனக் கொண்டாள் அதனைப் பொய்யெனக் கோடலாம்.

உ-ம்: *"வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே*
*அவையினும் பலவே சிறுகருங் காக்கை*
*அவையினும் அவையினும் பலவே குவிமடல்*
*ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த*
*தூங்கணங் குரீஇக் கூட்டுள சினையே."*

இது மடன்மா கொள்ளக் குறித்தோனைப் பறவைக்குழாந் தம்மை மடலூர விடாவென விளையாட்டுவகையாற் பொய்யென்று இகழ்ந்தது.[3]

---

1. "அன்றியும் எடுத்து ஓதுபவென்றும் உதாரணமின்றென்றும் மறுக்க" என வரும் இத்தொடர், நச்சினார்க்கினியர்க்குப் பின் ஏடெழுதுவோரால் எழுதிச்சேர்க்கப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கருதவேண்டியுள்ளது.

2. கூற்றுக் கூறுகின்றவிடத்து அக்கூற்று நிகழ்ச்சிக்குக் காரணமாயமைந்த மெய்ப்பாடுகளைத் தொடர்புபற்றிக் கூறியது கொண்டு, ஏனை மெய்ப்பாடுகளும் கூற்றினுள் அடங்கக் கூறல வேண்டும என்னும் யாப்புறவின்மையின் இளம்பூரணருரையினை மறுக்கும் இவ்வுரைப்பகுதி வலியுடைய மறுப்பாகாது என்க.

3. 'மடலேறுவேன்' எனத் தலைவன் கூறிய கூற்று மெய்யேயாயினும், தோழி அந்நிகழ்ச்சி நிகழவொட்டாயல் அதனைப் பொய்யாக்குதல் வேண்டி, 'பனைமடலின் வாழும் பறவைக் குழாம் அருளுடையனாகிய நின்னை மடலேற வொட்டா' என இங்ஙனம் நகையாடிக் கூறுதலின், "பொய்தலையடுத்த மடலின்

கையறு தோழி கண்ணீர் துடைப்பினும் - தலைவியை ஆற்று வித்துக் கையற்ற தோழி தலைவி கண்ணீரைத் துடைப்பினும் :

உ-ம் : *''யாமெங் காமம் தாங்கவும் தாந்தங்*
*கெழுதகை மையின் அழுதன தோழி*
*கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்*
*மன்ற வேங்கை மலர்பத நோக்கி*
*யேறா திட்ட வேமப் பூசல்*
*விண்டோய் விடரகத் தியம்பும்*
*குன்ற நாடற் கண்டவெங் கண்ணே.* (குறுந். 241)

இது தன் ஆற்றாமைக்கு ஆற்றாத தோழியை ஆற்றுவிக் கின்றான் அவ்விரண்டுங் கூறியது.[1]

வெறியாட்டிடத்து வெருவின்கண்ணும் - தலைவி வேறுபாடு எற்றினானாயிற்றென்று வேலனை வினாய் வெறியாட்டு எடுத்துழித், தலைவி அஞ்சும் அச்சத்தின் கண்ணும் :

அது பண்டேயுந் தன் பரத்தைமையான் நெகிழ்ந்தொழுகு வான், இன்று நம் ஆற்றாமைக்கு மருந்து பிறிது முண்டென் றறி யின், வரைவு நீடுமென்று அஞ்சுதல்.

உ-ம்: *''பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்*
*துனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த*
*இனிய உள்ளம் இன்னா வாக*
*முனிதக நிறுத்த நல்க லெவ்வம்*
*சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்*

---

கண்'' என்றார் ஆசிரியர். இவ்வாறன்றி இத்தொடர்க்கு, 'பொய்ம்மையால் மட லேறுவேன் எனத் தலைவன் கூறிய வழியும்' என இளம்பூரணர் கூறும் பொருள், தோழி முதலியோரை அச்சுறுத்தித் தனது வேட்கையை நிறைவேற்றிக் கொள்ளும் கருத்துடன் தலைவன் இவ்வாறு பொய்கூறினான் எனத் தன்னிகரற்ற தலைவனைப் பொய்யனாக்குதலின் பொருந்தாது எனச் சுட்டாமல் இத்தொடர்க்குத் தொல்- காப்பியர் கருத்துணர்ந்து உண்மைப் பொருள் வரைந்த நச்சினார்க்கினியர் உரைத் திறம் நல்லறிஞர்களது பாராட்டுக்குரியதாகும்.

1. அவ்விரண்டும் - தன்வயினுரிமையும் அவன் வயிற் பரத்தைமையும்.

அறிந்தன எல்ல ளன்னை வார்கோல்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக னாரணங் கென்றலின் அதுசெத்
தோவத் தன்ன வினைபுனை நல்லில்
பாவை யன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇ
கூடுகொள் இன்னியங் கறங்கக் களனிழைத்
தாடணி யயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வெங்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையிற் றூங்கல் வேண்டின்
என்னாங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயின் இம்மறை
அலரா காமையோ அரிதே அஃதாஅன்
றறிவ ருறுவிய அல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவ னெனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யானுயிர் வாழ்தல் அதனினும் அரிதே.'' (அகம். 96)

'இன்னாவாக்கி நிறுத்த எவ்வ' மென்பது அவன்வயிற் பரத்தைமை. 'உயிர்வாழ்தல் அரிது' என்பது தன்வயினுரிமை. அவை வெறியஞ்சியவழி நிகழ்ந்தன.

குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் - இரவுக்குறி வருந் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனான நிகழ்ந்து தலைவன் குறியை ஒத்தவழி, அதனை மெய்யாக உணர்ந்து தலைவி மயங்கிய வழியும் : புனலொலிப்படுத்தன் முதலிய அவன் செயற்கையானன்றி இயற்கையான் நிகழ்த்துழிக் குறியினொப்புமையாம்.

உ-ம்: "மெய்யோ வாழி தோழி சாரன்
மைப்பட் டன்ன மாமுக முசுக்கலை
யாற்றப் பாயாத் தப்ப லேற்ற
கோட்டொடு போகி யாங்கு நாடன்
தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனஎன் தடமென் றோளே." (குறுந். 121)

கோடு ஆற்றப் பாயாது வேண்டியவாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல, நாங் குறிபெறுங் காலத்து வாராது புட்டாமே வெறித்து இயம்புந்துணையும் நீட்டித்துப் பின்பு வருதலிற், குறிவாயாத்தப்பு அவன்மேல் ஏற்றி, அதற்குத் தோள் பசந்தன-வென்று, பின்னொருநாள் அவன் வந்துழித் தோழியை நோக்கி இவ்வரவு மெய்யோவெனவே, அவ் விரண்டும் பெற்றாம்.

வரைவு தலைவரினும் - களவு வெளிப்பட்ட பின்னராயினும் முன்னராயினும் வரைந்தெய்துதற் செய்கை தலைவன்கண் நிகழினும் ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றாமை பற்றி அவ்விரண்டுங் கூறும் :

உ-ம்: "நன்னா டலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்டாந் தாங்குவார் என்னோற் றனர்கொல்;
புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ" (கலி. 39)

என நாண்தாங்கி ஆற்றுவாரும் உளரோவெனவுங், கனவிற் புணர்ச்சி கடிதுமெனவும் இரண்டும் கூறினாள்.

"கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து
வானின் அருவி ததும்பக் கவினிய
நாட னயனுடைய னென்பதனால் நீப்பினும்
வாடன் மறந்தன தோள்." (ஐந்திணை எழு. 2)

'நயனுடையன்' என்பதனால் வரைவு தலைவந்தமையும், 'நீப்பினு' மென்பதனால் அவன்வயிற் பரத்தைமையுங் கூறினான்.

களவு அறிவுறினும் - தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும்; ஆண்டும் அவ்விரண்டுங் கூறும்.

உ-ம்: ''நாண்மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து
மால்கடற் றிரையின் இழிதரு மருவி
அகலிருங் கானத் தல்கணி நோக்கித்
தாங்கவுந் தகைவரை நில்லா நீர்சுழல்
போதெழின் மழைக்கண் கலுழ்தலின் அன்னை
யெவன்செய் தனையோநின் னிலங்கெயி றுண்கென
மெல்லிய வினிய கூறலின் வல்விரைந்
துயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்
துரைக்கலுய்ந் தனனே தோழி சாரற்
காந்த ளூதய மணிநிறத் தும்பி
தீந்தொடை நரம்பி னிமிரும்
வான்றோய் வெற்பன் மார்பணங் கெனவே.''
(நற்றிணை, 17)

யான் அவனை எதிர்ப்பட்ட இடங்கண்டு அழுதேனாக அதனைக் கண்டு நீ எவன் செய்தனையென வினாய அன்னைக்கு, இம் மறையினைக் கூறலுற்றுத் தவிர்ந்தேனெனத் தாய் களவறிவுற்றவாறு கூறக் கருதி, அவன்வயிற் பரத்தைமை கூறிற்று.

தமர் தற்காத்த காரண மருங்கினும் - அங்ஙனங் களவறிவுற்ற அதன்றலைச், செவிலி முதலிய சுற்றத்தார் தலைவியைக் காத்தற்கு ஏதுவாகிய காரணப்பகுதிக்கண்ணும்:

ஆண்டுந் தமரை நொந்துரையாது அவன்வயிற் பரத்தைமை கூறும்.

காரணமாவன் தலைவி தோற்றப்பொலிவும் வருத்தமும் அயலார் கூறும் அலருமாம்.

உ-ம்: ''அடும்பி னாய்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்
ஓரை மகளி ரஞ்சியீர் ஞெண்டு

கடலிற் பரிக்குந் துறைவனொ டொருநாள்
நக்குவிளை யாடலுங் கடிந்தன்று
ஐதேமக் கம்ம மெய்தோய் நட்பே.'' (குறுந். 401)

இது வேறுபாடு கண்டு இற்செறித்தமை தன்னுள்ளே கூறியது.

அகம். 20, குறுந். 246 : இவை பிறர் கூற்றால் தமர் காத்தன.

''முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
அலமர லாயமொ டியாங்கணும் படாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
காப்புப் பூண்டிசின் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென'' (அகம்,7)

என்றன தோற்றப் பொலிவாற் காத்தன. இதற்கும் அவ்விரண்டும் உள.

தன்குறி தள்ளிய தெருளாக் காலை வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறலும்-தலைவி தன்னாற் செய்யப்பட்ட குறியிடங்கள் இற்செறிப்பு முதலிய காரணங்-களான் இழக்கப்பட்டனவற்றை, இவை இழக்குமென முந்துறவே உணராத காலத்து, முற்கூறிய குறியிடமே இடமாக வந்து தலைவன் கூடாது பெயர்தலால், தமக்குப் பயம் படாத வறுங்களத்தை நினைந்து, அதனைத் தலைவற்கு முந்துறவே குறிபெயர்த்திடப்-பெறாத தவறு தன்மேல் ஏற்றிக் கொண்டு, தோழியையும் அது கூறிற்றிலளெனத் தன்னொடு தழீஇக் கொண்டு, தலைவி தெளிதற்-கண்ணும்: ஆகவே அவன் தவற்றைத் தன் தவறு ஆக்கினளாம். தழீஇ, தோழியைத் தழீஇ. அத் தவறு அவன்கட் செல்லாமல் தனதாகத் தேறினாள்.

உ-ம்: ''விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
தெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்
அஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி

வுருதல் வாய்வது வாஃறோய் வெற்பன்
வந்தன னாயின் அந்தளிர்ச் செயலைத்
தாழ்வ லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புடன்
ஆடா மையிற் கலுழ்பில தேறி
நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குவவுப் பொறை யிறுத்த கோற்றலை யிருவிக்
கொய்தொழி புனமும் நோக்கி நெடிதுநினைந்து
பைதலன் பெயர்கவன் கொல்லோ ஐதேய்கு
அயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங் கண்ணதெம் மூரென
ஆங்கதை யறிவுறன் மறந்திசின் யானே." (அகம். 38)

இதனுள் ஊசன்மாறுதலும் புனமுந் தன்குறி தள்ளிய இடன்; மறந்திசின் என்றது தெருளாக்காலை, கூஉங்கண்ணது ஊரென உணர்த்தாமையின்; இடையீடு படுவதன்றி அவன்கண் தவறுண்டோவெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினாள். இது சிறைப்புறமாக வரைவுகடாயது.

வழுவின்றி நிலைஇய இயற்படு பொருளினும் - வழுப்படுத்தலின்றி நின்ற இயற்பட மொழிதற் பொருண்மைக் கண்ணும் :

வழுவின்றி நிலைஇய என்றதனால் தோழி இயற்பழித்துழியே இயற்பட மொழிவதென்க. தலைவன் வழுவைத் தோழி கூறியதற்குப் பொறாது தான் இயற்பட மொழிந்த தல்லது; தன் மனத்து அவன் பரத்தைமை கருதுதலுடைமையிற் பொருள் வேறு குறித்தாளாம்.

இஃது அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றுட் பெரிதாகிய நட்புடையவன் எனக் கூறியது. ஒருகாலைக்கு ஒருகாற் பெருகு மென்றுங் கூறினாளாயினும், நமது நட்புப்போல் ஒரு காலே பெருத்த தில்லையென இரண்டுங் கூறினாள்.[1]

1. இரண்டும் - மேற்குறித்த அவ்விரண்டும்.
'சிந்தை' என்றது ஈண்டுப் பல்வேறு சிந்தனைகளாகிய தவறுதலைக் குறித்தது.

பொழுதும் ஆறும் புரைவது அன்மையின் அழிவு தலை வந்த சிந்தைக்கண்ணும் - தலைவியுந் தோழியுந் தலைவன் இரவுக் குறி வருங்காற் பொழுதாயினும் நெறியாயினும் இடையூறாகிப் பொருந்துதலின்மையின், அழிவு தலைத்தலை சிறப்ப வந்த ஆராய்ச்சிக் கண்ணும்;

ஆண்டும் அவ்விரண்டும் நிகழும்,

உ-ம்: ''மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
ஏவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்சம்
என்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய இட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே.'' (அகம். 128)

காமங் கரைபொழியா நிற்கவும் என்ன நன்றி கருதி இருவ ரொடுஞ் சூழாது சென்றது நெஞ்சென இரண்டுங் கூறினாள். மனைமடிந்தன்றென்பது பொழுது; சிறுநெறியென்பது ஆற்றின்னாமை. இதனைப் பொருளியலுட் (210) கூறாது தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் பற்றி ஈண்டுக் கூறினான்

''குறையொன் றுடையேன்மற் றோழி நிறையில்லா
மன்னுயிர்க் கேமஞ் செயல்வேண்டு மின்னே
அரவழங்கு நீள்சோலை நாடனை வெற்பில்
இரவரா லென்ப துரை.'' (ஐந்திணை எழு. 14)

''வளைவாய்ச் சிறுகிளி'' என்னுங் (141) குறுந்தொகையும் அது.

காமஞ் சிறப்பினும் - தலைவி காமஞ் சிறந்து தோன்றினும்;

அவன் அளி சிறப்பினும்—தலைவிக்குக் காமமிக்க கழிபடர் சிறந்தாற்போல்வது தலைவன்கட் சிறந்துழி, அது காரணத்தால் அவன் அளி சிறந்து தோன்றினும்; இவ்வாறு அரிதின் வருகின்-றான் வரைகின்றிலனென அவ்விரண்டுந் தோன்றும்.

உ-ம்: "இருள்கிழிப் பதுபோன் மின்னி வானம்
துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்
மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்
குரும்பி கெண்டும் பெருங்கை யேற்றை
இரும்புசெய் கொல்லெனத் தோன்று மாங்கண்
ஆறே யருமர பினவே யாறே
சுட்டுநர்ப் பனிக்குஞ் சூருடை முதலைய
கழைபாய் நீத்தங் கல்பொரு திரங்க
அஞ்சுவந் தமிய மென்னாது மஞ்சுசுமந்
தாடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்
ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
இருங்களி றட்ட பெருஞ்சின உழுவை
நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த
பேய்மணி விளக்கிற் புலர ஈர்க்கும்
வாணடந் தன்ன வழக்கருங் கவலை
யுள்ளுநர் உட்கும் கல்லடர்ச் சிறுநெறி
அருள்புரி நெஞ்சமோடு எஃகுதுணை யாக
வந்தோன் கொடியனும் அல்லன் தந்த
நீதவ றுடையையும் அல்லை நின்வயின்
ஆனா வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே." (அகம் 72)

'வந்தோ' னென்பது அவனளி சிறத்தல்; 'தவறுடையே' னென்பது தன்வயினுரிமை 'கொடியனுமல்ல' னென்பது அவன்-வயிற் பரத்தைமை.

ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும்-நால்வகைப் புணர்ச்சி யால் நிகழுங் களவின்கண், எஞ்ஞான்றும் இடையீடுபடாமற் றலைவன் வந்து கூடுதல், இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகையினைத் தலைவி எய்தியக்கண்ணும்:

அஃது எஞ்ஞான்றுங் கூட்டம் பெற்றமையான் மகிழ்ந்து கூறுதலாம்.

உ-ம் : *"நோயலைக் கலங்கிய மதனழி பொழுதில்
காமஞ் செப்பல் ஆண்மகற் கமையும்
யானென், பெண்மை தட்ப நுண்ணிதிற் றாங்கிக்
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணாப் பசிமுத் தேய்ப்பக் குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வ முடைய ராகி
மார்பணங் குறுநரை யறியா தோனே"* (நற்றிணை,94)

'மண்ணாப் பசுமுத்தேய்ப்ப நுண்ணிதிற்றாங்கிப் பெண்மை தட்ப' வென மாறிக் கழுவாத பசிய முத்தந் தனது மிக்க ஒளியை மறைத்துக் காட்டினாற்போல், யாமும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல் அரிதாகத் தாங்கிப், பெண்மையாற் றகைத்துக் கொள்ளும்படியாகத், தன் மார்பால் வருத்தமுற்றாரைக் கண்டு அறியாதோனாகிய சேர்ப்பனை என்ன மகனென்று சொல்லப்படுமென மகிழ்ந்து கூறினாள். ஆர்வ முடையராக வேண்டி மார்பணங்குறுநரை அறியாதோனென்க. அலராமற் குவிந்த கொத்தையுடைய புன்னைக்கண்ணே புலானாற்றத்தையுடைய நீர் தெறித்தரும்பிய சேர்ப்பனென்றதனால், புன்னையிடத்துத் தோன்றிய புலனாற்றத்தைப் பூவிரிந்து கெடுக்குமாறுபோல, வரைந்து கொண்டு களவின்கண் வந்த குற்றம் வழிகெட ஒழுகுவனென்பது உள்ளுறை. "இரண்டறி களவி" (குறுந்தொகை 312) என்னும். பாட்டினுள் தோற்றப் பொலிவை மறைப்பளெனத் தலைவன் கூறியவாறும் உணர்க.

மறைந்தவற் காண்டல் முதலிய ஆறற்கும் உம்மையும் உருபும் விரித்து, ஏனையவற்றிற்கு உம்மை விரிக்க; உம்மை விரிக்கவேண்டுவனவற்றிற்கு உம்மையும், இரண்டும் விரிக்க வேண்டுவனவற்றிற்கு இரண்டும் விரித்து, அவற்றிற்கு ஏனை வினையெச்சங்கட்கும் கூற்று நிகழ்தலுளவென முடிக்க. கூற்று அதிகாரத்தான் வரும். உயிராக்காலத்து உயிர்த்தலு முளவென முடிக்க.

ஓரிடத்தான தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் உள—இக் கூற்று முப்பத்தாறனுள் ஒரோவிடங்களிலே தன்னிடத்து அன்பிற்கு உரிமையுண்டாகவும் அவனிடத்து அயன்மை உண்டாகவுங் கூற்று நிகழ்தலுள:

ஆன் ஆனவென ஈறு திரிந்தது.

அன்னவும் உள—அவைபோல்வன பிறவும் உள என்றவாறு.

'அன்னபிற' வென்றதனான் இன்னுந் தலைவி கூற்றாய் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

**ஆய்வுரை**

இது, களவொழுக்கத்தில் தலைமகள்பால் தோன்றும் உள்ள நிகழ்ச்சியினையும் கூற்றினையும் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ—ள்.) தன்னை அவன் காணவொண்ணாது மறைந்து நின்று தான் அவனைக் காணுதலும், தன்னியல்பினை அவன் உணருமாறு அவனெதிரே புலப்பட்டுத் தோன்றுதலும், தனது உள்ளத்தே நிரம்பிய காதல் காரணமாக வினவிய வினாவுக்கு எதிர்மொழி கூறவியலாது மொழி தடைப்படுதலும், தலைவன் தனது வேட்கைக் குறிப்பு உணர்ந்து தாழ்ந்து அணுகிய நிலையில் அவன் கருத்துக்கு உடன்படாது மறுத்தலும், அவனது காதல் மிகுதிகண்டு மீண்டும் ஏற்றுக் கொள்ளுதலும், பழியொடு படாத தனது முறுவற் குறிப்பினைச் சிறிதே புலப்படுத்தலும், தலைவனது கையகப்பட்ட நிலையில் 'என்ன காரியம் செய்தோம்' என மனக்கலக்கமுற்ற நிலையிலும் தனக்கு இயல்பாக அமைந்த நாணம் மீதூர்ந்த நிலையிலும், தலைவன் தன்னைச் சிறிது காலம் பிரிந்த நிலையிலுளதாகிய இரக்கத்தின்கண்ணும் தான் தலைமகனாற் காண்டற்கரியளாகிய காலத்து அவன் வருதலைத் தவிர்ந்த நிலையிலும், அவன் தன்னைக் காணவந்த காலத்து ஊரவர் கூறும் அலர்மொழிக்கு அஞ்சி அவனைக் காணுதலை விரும்பாது தவிர்ந்த நிலையிலும், தலைவனொடு தனக்குள்ள காதலுறவு வெருவிவாய் சோர்ந்து வெளிப்பட்ட நிலையில் அதனைச் செவிலி முதலியோர்க்குப் புலனாகாதவாறு தன் மனத்தடக்கி இரங்கும் நிலையிலும், தான் தலைவனைக் காணப் பெறாமைக்கு உளம் நொந்து 'நின்னைப் பிரியேன்' என அவன் தன்னை நோக்கிக் கூறிய தெளிவுரையினை உறுதியெனக் கொள்ளாது ஐயுறும் நிலையிலும்,

தலைவன் வருகின்ற வழியிடையேயுளவாகும் இடையூறுகளை நினைந்து தன் மனத்தே அச்சம் மிகுந்த நிலையிலும், தலைவன் (வரைவிடைவைத்துப்) பிரிந்தபோது மனம் கலங்கிய நிலையிலும், தலைவனைக் கண்டு அளவளாவப் பெற்றபோது மகிழ்கூர்ந்த நிலையிலும், தலைவன் வருதற்குத் தடைகளாக வழியிடையே நேரும் இடையூறுகள் பலவாதலின் அவன் இங்கு வருதல் அரிது எனத் தோழி கூறிய நிலையிலும், தோழி கூறியதனைத் தன்-மனம் ஏற்றுக் கொள்ளாத நிலையிலும், புறத்துப் போய் விளை-யாட இயலாதவாறு தான் இற்செறிக்கப்பட்டுக் கலங்கி உள்ளஞ் சிதைவுற்ற நிலையிலும், ஆய்ந்து நிறைவேற்றுதற்கு உரிய அரிய களவொழுக்கத்தினைத் தன் தோழிக்கு வெளிப்படுத்துதலும், தனது வருத்தத்தினை வெளிப்படக் கூறவொண்ணாத காலத்து நெட்டுயிர்ப் பெறிதலும், உயிர் தனது உடம்பினை விட்டு நீங்கு-வது போலும் துன்பமுண்டாக அயலார் தன்னை மணம் பேச-வந்த நிலையில் அதனை மாற்றுதற்பொருட்டும், தலைவனொடு தனக்குக் கூட்டமுண்மை உலகியலால் நாடி ஆராயுங்காலத்து மெய்வேறுபாடு நிகழ்ந்துழி அதனைப் பிறர் அறியாதபடி மறைக்-கும் நிலையிலும், பண்டை நல்வினையாற் கட்டப்பட்ட உறவி-னைக் குறித்து ஒற்றுமைப்பட்ட நண்பினாலே தலைவன் தன்னை மணந்து கொள்ளுதற்குக் குறையுறுகின்றதனைத் தெளிந்த தலைவி தான் அரியளாந் தன்மையினைப் புலப்படுத்துதலமைந்த எண்வகை மெய்ப்பாடுகளால் (தன்னைத்தான் கட்டுப்படுத்தியொழுகும்) பெருமை நிறைந்த இயல்பினளாய் நிற்கும் நிலையிலும், தன்குறை-யினை விரைந்து முடித்துக் கொள்ளும் வேட்கையுடையனாகிய தலைவன் தன் பெருமைக்குத் தகாதவாறு 'மடலேறுவேன்' எனப் பொய்யொடுமிடைந்து கூறும் மடற் கூற்றின் கண்ணும், தலை-மகளது துயர்கண்டு செயலற்ற நிலையினளாகிய தோழி துன்பக் கண்ணீரைத் துடைத்துத் தன்னை ஆற்றுவித்த நிலையிலும், தலை-விக்கு இவ்வுடல் மெலிவு எதனால் ஏற்பட்டது எனச் செவிலி வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவிக்க வரும் அச்சத்தின் கண்ணும், புள் முதலியவற்றால் இயல்பாக நிகழ்வனவற்றை ஒப்-புமைபற்றித் தலைவன் செய்த அடையாளங்களாகக் கொண்டு மயங்கிய நிலையிலும், தலைவன் மணந்து கொள்ள வரும் நாள் அணித்தாகிய நிலையிலும், களவொழுக்கம் பிறரால் அறியப்பட்ட நிலையிலும், பெற்றோர் தன்னைப் புறத்துப் போகாதவாறு இல்லின்கண் செறித்தல் காரணமாக அமைந்தபக்கத்தும், தலைவன்

செய்த அடையாளம் பிற இயற்கை நிகழ்ச்சிகளால் தப்பினமையால் இது தலைவன் செய்த அடையாளமோ பிறிதொன்றோ எனத் தெளியாத நிலைமைக்கண் குறியிடத்து வந்த தலைவன் தன்னைக் காணப்பெறாது வறிதே திரும்பினானாக அவன் வந்து சென்ற வெற்றிடத்தினை நோக்கி 'இத்தவறு என்னால் நேர்ந்ததே' எனத் தலைவனைக் குற்றமிலானாகத் தன் மனத்திற்கருதித் தெளிதலும், தலைவனைத் தோழி இயற்பழித்தவழி அவனைக் குற்றமில்லாத-வனாக நிறுவி இயற்பட மொழியும் பொருளின் கண்ணும், தலைவன் வரும் காலமும் வழியும் ஒத்ததல்லாமையால் துன்ப மீதூர்ந்த நெஞ்சத்தினளாய நிலையிலும், தலைமகன்பால் வேட்கை மிக்க நிலையிலும், தன்பால் அவன் வைத்துள்ள தலையளி மிக்க நிலையிலும், தம்மிருவர்பாலும் பாதுகாவலமைந்த மகிழ்ச்சி மீக்கூர்ந்த நிலையிலும் (இவைபோன்ற பிறவிடங்களிலும்) நிகழும் தலைமகள் கூற்றுகளில் தலைவி தான் அவனுக்கு உரியளாந்-திறத்தில் ஒழுகுவதாகவும் அவன் தன்னை அயன்மைசெய்து ஒழு-குவதாகவும் எண்ணும் உணர்வுகள் ஓரோரிடங்களில் தோன்று-வனவும் உள எ-று.

மறைந்தவற் காண்டல், தற்காட்டுறுதல், நிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல் என்னும் மூன்றும் தலைமகளது உள்ள நிகழ்ச்-சியினைப் புலப்படுத்துவனவாதலின் இம்மூன்றிடங்களிலும் கூற்று நிகழ்தல் இல்லை. வழிபாடு மறுத்தல் என்பது குறிப்பினாலும் கூற்றினாலும் நிகழும். மறுத்தெதிர் கோடல், முறுவல் சிறிதே தோற்றல் என்பன இரண்டும் தலைவனுடன் அளவளாவி மகிழ்தற்கு இசைவினைப் புலப்படுத்துவன. இங்குச் சொல்லப்பட்ட ஆறும் புணர்ச்சிக்கு முன் நிகழ்வன 'கைப்பட்டுக் கலங்கல்' முதல் 'கூறிய-வாயில் கொள்ளாக்காலை' முடியவுள்ள பன்னிரு நிலைகளும் தலைமகள் தோழிக்குத் தன் உள்ளக் கருத்தினை எடுத்துரைத்தற்-குரியன. இப்பன்னிரு நிலைகளும் தலைமகள் ஒருத்திபால் ஒருங்கே நிகழ்தல் வேண்டும் என்னும் வரையறையில்லை. தலைவி தன் உள்ளக் கருத்தினை வெளியிட்டுரைத்தற்குரிய இடங்கள் இவை என இலக்கணம் கூறும் அளவிலேயே இப்பன்னிரண்டும் இங்குக் குறிக்கப்-பெற்றன. தலைவி தன் உள்ளக் கருத்தினைத் தோழிக்கு உரைத்தல் என்பது தான் இற்செறிக்கப்பட்டுக் கலங்கித் தன் மேனி மெலிவுற்ற நிலையிலேயேயாம். தலைவி இற்செறிக்கப்பெறாத நிலையில் தலைவ-

னைக் கண்டு அளவளாவும் நிலையேற்படுதல் இயல்பாதலின் இது பற்றித் தோழிக்கு உரைக்க வேண்டிய இன்றியமையாமை நேராது.

இவ்வையெல்லாம் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின் நிகழ்வன எனவும், உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்த தலைவியரும் மனநிகழ்ச்சியால் தலைமகனைக் கூடி உள்ளம் ஒன்றியிருத்தலால் இவ்வாறு கூற்று நிகழ்த்தற்குரியர் எனவும் இளம்பூரணர் கூறும் கருத்து தொல்காப்பியனார்க்கு ஒத்ததேயாகும்.

உயிராக் காலம் — தலைமகள் தன் உள்ளக் கருத்தினை வெளியிட்டு உரைத்தற்கு ஏற்றதல்லாத காலம். உயிர்த்தல்—நெஞ்சத்தில் துன்பச் சுமையைத் தாங்கலாற்றாது நெட்டுயிர்ப்பெறிதல்; பெருமூச்சு விடுதல். 'உயிர்செல' என்புழிச் 'செல' என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம் ''வேற்றுவரைவு வரின்'' என்ற தொடரிலுள்ள 'வரின்' என்னும் பிறவினை முதல் வினைகொண்டு முடிந்தது. மாற்றுதல்-நிகழாதவாறு தவிர்த்தல். பொறி-நல்லூழ். 'பொறியின்மை யார்க்கும் பழியன்று' (திருக்குறள் 618) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காண்க.

அருமைசான்ற நாலிரண்டு வகையாவன, 'அழிவில் கூட்டம்' எனப்படும் கற்பிற் புணர்ச்சிக்கு உரியனவாக மெய்ப்பாட்டியல் 23 ஆம் நூற்பாவிற் கூறப்பட்ட 'முட்டுவயிற்கழறல்' முதலாகவுள்ள எண்வகை மெய்ப்பாடுகள் என்பர் இளம்பூரணர்.

உஉ. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
தானே கூறுங் காலமும் உளவே.

**இளம்பூரணம்**

இதுவும் தலைவிமாட்டுச் சொல் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான்; இன்னநாள் வரைந்து கொள்வல் எனக்கூறித் தோழியிற் கூட்டத்திற்கு முயலாது தணந்தவழி யதனைத் தோழி ஐயப்படுங் குறிப்புத் தோன்றாமை மறைத்தொழுகிய தலைவி அவன் வருந்-

துணையும் ஆற்றாது வருத்தமுறினும் வரையாத நாளின் கண் மறைந்தொழுகாநின்ற தலைவன் செவிலி முதலாயினாரை முட்டினவழியும்[1] இவ்வொழுக்கத்தினை நின் தோழிக்கு உரையெனத் தலைவன் கூறியவழியும் தலைவி தானே கூறுங் காலமும் உள எ-று.

உம்மை எதிர்மறையாதலாற் கூறாமை பெரும்பான்மை. காலமும் என்றது இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாங் காலம். அக்காலத்துத் தோழி மதியுடம்படாமல் அறிவிக்கும் என்றவாறு[2].

இன்னும், 'உரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணும்' என்பதற்குத் தலைவற்கு உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும் என்றுமாம்.

உதாரணம்—

*''என்னைகொல் தோழி அவர்கண்ணும் நன்கில்லை*
*அன்னை முகனும் அதுவாகும்—பொன்னலர்*
*புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ*
*நின்னல்ல தில்லென் றுரை''* (ஐந்திணையெழு.56)

என வரும்.

நச்சினார்க்கினியம் (22)

இதுவும் அதிகாரத்தால் தலைவிகூற்று இன்னவாறுமம் என்கிறது.

(இ - ள்.) வரைவிடைவைத்த காலத்து வருந்தினும்-வரைவுமாட்சிமைப் படாநிற்கவும் பொருள்காரணத்தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கி வைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருத்தமெய்தினும்:

ஆண்டுத் தோழி வினவாமலும் தானே கூறுமென்றான், ஆறறுவித்துப் பிரிதல் களவிற்குப் பெரும்பான்மை இன்மையின் வைத்தவென்றது நீக்கப்பொருட்டு. வருந்துதல் ஆற்றுவிப்பாரின்மையின் வருத்த மிகுதலாம்.

---

1. முட்டுதல்-எதிர்ப்படுதல். தானே கூறுதலாவது, தோழி தன்னை ஐயுற்று வினாதற்கு முன்னரே தலைவி முந்துற்றுத் தோழிக்கு உரைத்தல்.

2. பாங்கி மதியுடம்படுதற்கு முன்னரே தலைவி தோழிக்கு அறிவிக்கும என்பதாகும்.

வரையா நாளிடை வந்தோன் முட்டினும் - வரையாதொழுகுந் தலைவன் ஒருஞான்று தோழியையானும் ஆயத்தையானுஞ் செவிலி-யையானுங் கதுமென எதிர்ப்பினும்;

உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண்ணும் - நொதுமலர் வரைவிற்கு மணமுரசியம்பிய வழியானும் பிறாண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி அதனை நமரறியக் கூறல்வேண்டுமென்றுந் தலைவற்கு நம் வருத்தமறியக் கூறல் வேண்டுமென்றுங் கூறுதற்கண்ணும்; தானே கூறும் காலமும் உளவே-இம் மூன்று பகுதியினுந் தோழி வினாவாமல் தலைவி தானே கூறுங்[1]காலமும் உள (எ-று.)

உம்மையால் தோழி வினவிய இடத்துக் கூறலே வலியுடைத்து,

உ-ம்: *"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்தீது மொழியினுந்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
முத்துநிரை யொத்த முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனு மறியுமக் கொடியோ னையே."* (குறுந். 26)

*"யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே"* (குறுந். 25)

குறுந், 25,267 இவற்றுள் துறந்தான்போலவும் மறந்தான் போலவுங் கருதித் தான் தீதுமொழியினுமெனவும் யானெவன் செய்கோ னெனவுந் தோழி வினவாக்காலத்து அவன்தவற்றை வரைவிடை வைத்தலின் ஆற்றாமைக்கு அறிவித்தாள்.

நற்றிணை,128:இது தோழி வினாவியவழித் தலைவி கூறியது.

---

1. தானே கூறலாவது, தோழி வினவாத நிலையில் தானே வலிதிற்சென்று கூறுதல்.

'வரைவிடைவைத்த காலத்து வருந்தினும்' என்பதனைத் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்'[1] (தொல்-பொ-666) என்னுந் தந்திரவுத்தியாகக்கொண்டு அதன்கண் வேறுபட வருவன-வெல்லாங் கொள்க.

குறுந். 302: இது வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கூறியது.

*"சிறுபுன் மாலை சிறுபுன் மாலை*
*தீப்பனிப் பன்ன தண்வளி யசைஇச்*
*செக்கர் கொண்ட சிறுபுன் மாலை*
*வைகலும் வருதியா லெமக்கே*
*ஒன்றுஞ் சொல்லாயவர் குன்றுகெழு நாட்டே"*

இது மாலைப்பொழுது கண்டு வருந்திக் கூறியது.

இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

குறுந். 30: இது வரைதற்குப் பிரிய வருந்துகின்றது என்னென்றாட்குக் கனவு நலிவுரைத்தது.

*கழைவளர் அடுக்கத் தியலியா டும்மயில்*
*நனவுப்புகு விறலியில் தோன்று நாடன்*
*உருவ வல்விற் பற்றி யம்புதெரிந்து*
*செருச்செய் யானை சென்னெறி வினாஅய்ப்*
*புலர்குரல் ஏனற் புழையுடை யொருசிறை*
*மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்*
*பலர்தில் வாழி தோழி அவருள்*
*ஆரிருட் கங்குல் அணையொடு பொருந்தி*
*ஓரியா னாகுவ தெவன்கொல்*
*நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே."* (அகம். 82)

அவனை ஆயத்தார் பலருங் கண்டாரென வந்தோன் முட்டியவாறும் அவருள் நெகிழ்தோளேன் யானேயெனத் தானே கூறியவாறுங் காண்க.

கைந்நிலை, 59, அகம். 248 இவை வந்தோன் செவிலியை எதிர்ந்துழிக் கூறியன.

---

1. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடலாவது, தொகுத்துக்கூறிய சொல்லினானே பிறிதுமொரு பொருள் வகுத்துக் காட்டல் என்னும் தந்திரவுத்தியாகும்.

'கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளாய்
அடியுறை யருளாமை ஒத்ததோ நினக்கென்ன
நரந்தநா றிருங்கூந்தல் எஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரன்முறை சுற்றி மோக்கலு மோந்தனன்
நறாஅவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போதுகொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப
பறாஅக் குருகின் உயிர்த்தலு முயிர்த்தனன்
தொய்யி லிளமுலை இனிய தைவந்து
தொய்யலம் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன்''

அதனால்,

''அல்லல் களைந்தனன் தோழி நந்நகர்
அருங்கடி நீவாமை கூறி னன்றென
நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
மன்னா உலகத்து மன்னுவது புரைமே'' (கலி. 54)

எனக் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சி நிகழ்ந்தமை கூறி 'அருங்கடி நீவாமை கூறின் நன்' றெனத் தமர்க்குக் கூறுமாறு தோழிக்குத் தலைவி கூறினாள். சுரிதகத்து இருகாற் றோழி யென்றாள் நாணுத் தளையாக மறைகரந்தவாறு தீரத் தோழிக்கு முகமனாக.

''எரியகைந் தன்ன செந்தலை யன்றில்
பிரியின் வாழா தென்மோ தெய்ய
துறைமேய் வலம்புரி துணைசெத் தோடிக்
கருங்கால் வெண்குருகு பயிறரும்
பெருங்கடற் படப்பையெஞ் சிறுநல் லூரே'

இஃது, அன்றில் பிரியின் வாழாதெனக் கூறென்றது.

> ''ஐயோ வெனயாம் பையெனக் கூறிற்
> கேட்குவர் கொல்லோ தாமே மாக்கடற்
> பருஉத்திரை தொகுத்த நுண்கண் வெண்மணல்
> இன்னுந் தூரா காணவர்
> பொன்னி னெடுந்தேர் போகிய நெறியே.''

இஃது, அவர் இன்னும் போவதற்குமுன்னே நம் வருத்தத்தை வெளிப்படக் கூறென்றது.

> ''என்னைகொல் தோழி யவர்கண்ணு நன்கில்லை
> அன்னை முகனு மதுவாகும்—பொன்னலர்
> புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ
> நின்னல்ல தில்லென் றுரை.'' (ஐந். எழு. 58)

இதுவும் தலைவற்குக் கூறென்றது.

இவை தலைவி அறத்தொடு நிற்றற்பகுதி. தோழிக்கே உரைத்தற்குத் தோழிக்கென்றார்.[1] (22)

ஆய்வுரை

இது, தோழி தன்னை வினவாத நிலையில் தலைமகள்தானே முற்பட்டுத் தோழிக்குக் கூறுமிடங்கள் இவையெனத் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைவன் இன்ன நாளில் நின்னை மணந்து கொள்வேன் எனக் கூறித் தோழியிற் கூட்டத்திற்கு முயலாது வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்தானாக, தோழி தன்னைக் கண்டு ஐயுறுதற்கேற்ற குறிப்பு தன்கண் தோன்றாது மறைத்தொழுகிய தலைவி தலைவன் வருமளவும் ஆற்றியிராது வருத்தமுற்ற நிலையிலும், வரைந்துகொள்ளும் முயற்சியின்றிக் களவொழுக்கத்தில் வந்தொழுகும் தலைவன் செவிலி முதலியோரை எதிர்ப்பட்ட நிலையிலும், இவ்வொழுக்கத்தினை நின் உயிர்த் தோழிக்குச் சொல்லுக எனத் தலைவன் தனக்குச் சொல்லிய நிலையிலும் தலைமகள் தானே முற்பட்டுத் தோழிக்குக் கூறும் காலமும் உள எ-று.

---

1. இக்கூற்றெல்லாம் தோழிக்குக் கூறுதற்குரியன என்பார், 'உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண்ணும்' என்றார் ஆசிரியர்.

உரு. உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவன் உள்வழிப் படினும்
தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்
ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே.

**இளம்பூரணம்**

இதுவும் அது.[1]

(இ-ள்.) உயிரினும் நாண் சிறந்தது; அதனினும் குற்றந் தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்தது; என முன்னோர் கூற்றை யுட்கொண்டு தலைவனுள்ள விடத்துச் செல்லலும் வருத்த மில்லாச் சொல்லைத் தலைவி சொல்லுதலுமாகிய அவ்வகை பிறவுந்தோன்றும் அவை பொருளாம் என்றவாறு.

மன் ஆக்கத்தின்கண் வந்தது. எனவே இவ்வாறு செய்தல் பொருளல்ல என்று கூறற்க என்றவாறு. இதனுள் நாணத்தினும் கற்புச் சிறந்த தென்றவாறு.

**நச்சினார்க்கினியம்**

இது தலைவி கூற்றிற்குச் சிறப்பில்லன கூறி அவையும் அகப்-பொருளாம் என்கின்றது.

(இ-ள்.) உயிரினும் நாண் சிறந்தன்று-எல்லாவற்றினுஞ் சிறந்த உயிரினும் மகளிர்க்கு நாண் சிறந்தது; நாணினுஞ் செயிர்தீர் கற்புக் காட்சி சிறந்தன்று-அந் நாணினுங் குற்றந் தீர்ந்த கற்பினை நன் றென்று மனத்தாற் காணுதல் சிறந்தது; எனத் தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு - என்று முன்னுள்ளோர் கூறிய கூற்றினைப் பொருந்திய நெஞ்சுடனே; காமக்கிழவன் உள்வழிப்படினும்-தலைவன் இருந்தவிடத்தே தலைவிதானே செல்லினும்; தாவில் நன்மொழி கிழவி

1. இதுவும் அது-இதுவும் தலைவிமாட்டுச் சொல் நிகழுமிடம் உணர்த்து-தல் நுதலிற்று.

தன்னுயிரினும் சிறந்த நாணம் நீங்கத் தலைமகன் இருக்குமிடத்தைத் தலைவி சென்று அடைய எண்ணுதல் உயிரினும் சிறந்த நாணினும் சிறந்த கற்புப்பற்றியே என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.

கிளப்பினும்-மனவலியின்றிச் செல்வாமெனக் கூறும் நன்மொழியனைத தலைவி தானே கூறினும்; பொருள் தோன்றும்-அவை அகப்பொருளாய்த் தோன்றும்; ஆவகை பிறவும் மன் பொருள் தோன்றும் - அக்கூற்றின் கூறுபாட்டிலே பிற கூற்றுக்களும் மிகவும் அகப்பொருளாய்த் தோன்றும் ( எ - று. )

என்றது தலைவி கூற்று, சிறுபான்மை வேறுபட்டு வருவன வற்றைக் கற்புச்சிறப்ப நாண் துறந்தாலுங் குற்றம் இன்றென் றற்குச் 'செயிர் தீ'ரென்றார்; 'நன்மொழி' யென்றார் கற்பிற் றிரியாமையின்; அவை இன்னோரன்னவழி நெஞ்சொடு கிளத்தல் போல்வன. இவள் கூற்றுத் தோழிக்குந் தலைவற்குமே தோன்றுவதென்க[1]. மன் -ஆக்கம், இழிந்த பொருளும் உயரத் தோன்றலின்.[2]

*"மள்ளர் குழீஇய விழவி னானும்*
*மகளிர் தழீஇய துணங்கை யானும்*
*யாண்டுங் காணேன் மாண்தக் கோனை*
*யானுமோ ராடுகள மகளே யென்கை*
*கோடீர் இலங்குவளை ஞெகிழ்த்த*
*பீடுகெழு குரிசிலுமோ ராடுகள மகனே."* (குறுந். 31)

யாண்டுங் காணேனென அவனை வழிபட்டுக் கூறினமையிற் கற்பின்பாலதாய்த் தோழியுந் தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்குமதித்தவாறு காண்க.

நற்றிணை, 365, குறுந். 11: இவை தோழிக்கும் நெஞ்சிற்குங் கூறியன.

*"விழுந்தண் மாரிப் பெருந்தண் சாரற்*
*கூதிர்க் கூதளத் தலரி நாறு*
*மாதர் வண்டின நயவருந் தீங்குரன்"*

நற்றிணை, 244 : இஃது அறத்தொடு நிற்குமாறு தோழிக்குத் தலைவி கூறியது. இன்னும் அதனானே தோழியைத் தலைவி ஆற்றுவித்தலுங் கொள்க.

**ஆய்வுரை**

இது, தலைவி தன் களவொழுக்கத்தினைத் தோழிக்குத் தானே கூறுதற்குரிய இன்றியமையாமை கூறுகின்றது.

1. இங்ஙனம் தலைவி கூறும் கூற்று தோழி, தலைவன் என்னும் இருவர்க்கு மட்டும் புலனாகும்படி நிகழும் என்பதாகும்.

2. சிறப்பில்லனவாகிய இவையும் உயர்ச்சியையுடைய அகப்பொருளாம் என்பது பட வந்தமையின் 'மன்' என்னுஞ்சொல் இங்கு ஆக்கப் பொருளில் வந்தது என்பதாம்.

(இ-ள்.) 'எல்லாவற்றினும் சிறந்த உயிரைவிட மகளிர்க்கு நாணம் என்னும் பண்பே இன்றியமையாச் சிறப்பினது. அத்தகைய நாணத்தை விடக் குற்றமற்ற நல்லறிவின் வெளிப்பாடாகிய கற்புடைமையே இன்றியமையாச் சிறப்பினதாகும்' என முன்னோர் வாய்மொழியைப் பொருந்திய நெஞ்சத்துடனே தனது காதற்குரிய தலைவன் இருந்த விடத்தே தானே செல்லுதலை விரும்பிய நிலையிலும், தனது பிரிவுத் துயரத்தைப் பொறுக்கும் மனவன்மையின்றித் 'தலைவனுள்ளவிடத்தே செல்வாம்' என்னும் நன்மொழியினைத் தலைவி கூறுதற் கண்ணும் அவை போன்ற கூற்றுவகை பிறவற்றின்கண்ணும் தலைமகள்பால் காதல் மிகுதியாகியமிக்க பொருள்கள் தோன்றும் எ-று.

சிறந்தன்று - சிறந்தது; செயிர் - குற்றம்.

காட்சி என்பது ஈண்டு நல்லறிவின் வெளிப்பாடாகிய தோற்றத்தினைக் குறித்து நின்றது. கற்பு - உள்ளத் திண்மை; அஃதாவது தான் விரும்பிய ஒருவனையே தன்னுயிர்த் தலைவன் எனப் பேணிப் போற்றும் ஒருமையுள்ளமுடைமை. தொல்லோர் கிளவி—தொன்மைக் காலத்து வாழ்ந்த பெரியோர் கூறிய வாய்மொழி. புல்லிய நெஞ்சம்-உறுதியாகப் பற்றியவுள்ளம். காமக் கிழவன்-தன்னாற் காதலிக்கப் பெறும் உரிமை வாய்ந்த தலைவன். உள்வழி-உள்ள இடம். படுதல்-சென்று பொருந்தும். 'தா' என்னும் உரிச்சொல் ஈண்டு வன்மையென்னும் பொருளில் ஆளப்பெற்றது.

தா இல் மொழி, நன்மொழி எனத் தனித்தனி இயையும். தலைவி தனது பிரிவுத் துயரத்தைப் பொறுக்கும் மனவன்மையின்றித் தளர்வுற்ற நிலையிற் கூறப்படும் மொழி என்பார் தா இல் மொழி எனவும், கற்பென்னும் நற்பொருளைப் புலப்படுத்தும் மொழி என்பார் நன்மொழி எனவும் அடைபுணர்த்தோதினார் ஆசிரியர். ஆவகை பிறவும் - அவை போன்ற கூற்றுவகை பிறவற்றின் கண்ணும், மன்பொருள் தோன்றும் என்பதாம். மன்பொருள் - காதல் மிகுதியாகிய மிக்க பொருள்.

உச நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத் தொழிப்-
பினும்
அருமையின் அகற்சியும் அவளறி வுறுத்துப்
பின்வா வென்றலும் பேதைமை யூட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்
அஞ்சியச் சுறுத்தலும் உரைத்துழிக் கூட்டமொடு
எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்
வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணங் குறித்த காலையும்
புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணுங்
குறைந்தவட் படரினும் மறைந்தவ ளருகத்
தன்னோடும் அவளொடும் முன்னமுன் தளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னயம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்
எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தினும்
புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும்
ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்
செங்கடு மொழியால் சிதைவுடைத் தாயினும்
என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
அன்புதலை அடுத்த வன்புறைக் கண்ணும்
ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்
காப்பின் கடுமை கையற வரினும்

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பிறவும்
நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்புஞ் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ
அனைநில வகையான் வரைதல் வேண்டினும்
ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
அவள்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்
முன்னிலை அறனெனப் படுதலென் றிருவகைப
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டினும்
ஆங்கதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையினும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன.

**இளம்பூரணம்**

என்றது, களவொழுக்கத்தின்கண் தோழிக்குரிய கிளவியெல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நாற்றமு......நாட்டத்தானும்[1] என்பது - நாற்ற முதலாகச் சொல்லப்பட்ட ஏழினானும் புணர்ச்சிக்கு முந்துற்ற நிலைமையை உட்கொண்டு வரும் மனநிகழ்ச்சி யேழினும் புணர்ச்சி யுண்மை யறிந்த பின்றை மெய்யினானும் பொய்யினானுந் தலைவி குலத்தினுள்ளார் நிலைமையிற் பிழையாது பலவாகி வேறுபட்ட கவர்ந்த பொருண்மையையுடைய ஆராய்தற் கண்ணும் என்றவாறு.

நாற்றம் என்பது—பூவினானும் சாந்தினானும் தலைவன் மாட்டுளதாகிய கலவியால் தலைமாட்டுளதாய நாறுதல்.

தோற்றம் என்பது - புணர்ச்சியான் வரும் பொற்பு.

ஒழுக்கம் என்பது—ஆயத்தாரொடு வேண்டியவாறொழுகுதலன்றித் தன்னைப் பேணியொழுகுதல்.

1. நாட்டம் - நாடுதல்; ஆராய்தல்.

உண்டி என்பது—உண்ணும் அளவிற் குறைதல்.

செய்வினை மறைத்தல் ஆவது—பூக்கொய்தலும் புனலாடலும் போலும் வினைகளைத் தோழியை மறைத்துத், தனித்து நிகழ்த்துதல் அன்றியும் தலைவன் செய்த புணர்ச்சியாகிய கருமத்தினைப் புலப்பட விடாது தோழியை மறைத்தலும் என்றுமாம்.

செலவினும் என்பது—எத்திசையினும் சென்று விளையாடுவாள் ஒரு திசையை நோக்கிச் சேறல்.

பயில்வினும் என்பது—ஓரிடத்துப் பயிலுதல்.

புணர்ச்சி எதிர்ப்பாடு ஆவது— புணர்வதற்கு முந்துற்ற காலம்.

உள்ளுறுத்தல் ஆவது—உட்கோடல்.

உணர்ச்சி ஏழாவது—நாற்ற முதலாகச் சொல்லப்பட்டவற்றால் வரும் மன நிகழ்ச்சி ஏழும்.

பல்வேறு கவர்பொருள் நாட்டம் என்பது—ஒன்றோடொன்று ஒவ்வாத வேறுபட்டனவாகி இருபொருள் பயக்கும் சொற்களாலே யாராய்தல்.

குறையுறற் கெதிரிய கிழவனை மறையுற என்பது — களவொழுக்கத்தின் கண்ணே யுறுதற்காகத் தனது குறையைச் சொல்லவேண்டி எதிர்ப்பட்ட[1] தலைவனை யென்றவாறு.

மறையுற என்பதனை முன்னே கூட்டுக.[2]

பெருமையிற் பெயர்ப்பினும் என்பது—தலைவனது பெருமையான் நீக்கலும் என்றவாறு.[3]

உலகுரைத் தொழித்தல் என்பது—உலகத்தார் மகட்கொள்ளுமாறு கொள்ளெனக் கூறுதல்.

---

1. எதிரிய—எதிர்ப்பட்ட.

2. 'மறையுறக் குறையுறற்கெதிரிய கிழவனை' என இயையும். மறை—களவு

3. பெருமையிற் பெயர்த்தலாவது, தலைவனது பெருமையை எடுத்துக் கூறி அவன் அவ்விடத்தை விட்டுப் பெயரும்படி சேட்படுத்தல்.

வரைதல் - மணஞ்செய்து கொள்ளுதல்.

இன்னும் உலகுரைத் தொழித்தல் என்றதனாற் கையுறை-மறையுங் கொள்க.

அருமையின் அகற்சியும் என்பது—தலைவியைக் கிட்டுதற்கு அருமை கூறியகற்றுதல்

அவளறி வுறுத்துப் பின்வாவென்றலும் என்பது — நின்னாற் காதலிக்கப்பட்டாட்குச் சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டு வா என்றவாறு.

பேதைமை யூட்டல்[1] என்பது - நேரினும் அவள் அறிவாளொ-ருத்தியல்லள் என்று தலைவற்குக் கூறல்.

இன்னும், பேதைமை யூட்டல் என்பதனால் தோழி தான் அறியாள் போலக் கூறுதலுங் கொள்க.

முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும் என்பது — முன்னுறு புணர்ச்சி முறையே நிறுத்துக் கூறலும் என்றவாறு.

நிறுத்துக் கூறலாவது நீங்கவிடாது உடன்பட்டுக் கூறல். இன்னும், முன்புகூடினாற் போலக் கூட அமையுமென்று கூறுதல். உதாரணம் வந்தவழிக் காண்க.

அஞ்சி அச்சுறுத்தலும் எனபது—தான் அச்சமுற்று அஞ்சின தன்மையைத் தலைவற்கு அறிவித்தலும் என்றவாறு. அது யாய் வருவ ளென்றானும் தமையன்மார் வருவ ரென்றானும் காவலர் வருவ ரென்றானும் கூறுதல்.

உரைத்துழிக் கூட்டமொடு[2] என்பது—நின்னாற் காதலிக்கப்-பட்டாள் யாவள் என வினாயவழி இத்தன்மையாள் எனச் சொல்லக் கேட்ட தோழி அவளும் நின் தன்மையாள் என இவனோடு கூட்டி-யுரைத்தலும் என்றவாறு.

ஒடு எண்ணின்கண் வந்தது.

1. பேதமையூட்டல் என்பது, தலைமகள் மேற்சேறலுடன் தோழியாகிய தன் மேலும் பொருந்தப் பொதுப்பட அமைந்தமையின், ‘தோழிதான் அறியாள் போலக் கூறுதலுங் கொள்க’ என்றார்.

2. ‘உரைத்துழிக் கூட்டம்’ என்புழிக் ‘கூட்டம்’ என்றது, தலைவியும் நின் தன்மையள் எனத் தலைமகனது நிலைமையோடு தலைமகளது நிலையையும் ஒப் பிட்டுச் சேர்த்துரைத்தல் என்ற பொருளில் ஆளப்பெற்றது.

எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும் என்பது[1] — ஒழியாது கூறிய எட்டுக் கூற்றும் என்றவாறு. முன்னைப் புணர்ச்சி முறை-யறிந்தாளாதலின் அவன் இரந்து பின்னின்றுழி ஈண்டுக் கூறிய எல்லாம் அவன் உள்ளக் கருத்தறியுந்துணையும் தழீஇக்கொண்டு கூறினல்லது ஒழித்தல் பொருளாகக் கூறாள் என்பது கொள்ளப்-படும். இவை எட்டும் குறையுற வுணர்தலின் பகுதி.

வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணங் குறித்த காலையும் என்பது — மாயம்[2] சொல்லிவந்த கிழவனைத் தலைவி பொறுத்த காரணம் குறித்த காலையும் தோழி கூற்று நிகழும் என்ற வாறு.

அவ்வழித் தலைவன் குறிப்பும் தலைவி குறிப்பும் உணர்தலும் தலைவன் கேட்டதற்கு மாற்றம் கூறுதலும் உளவாம். மாயம் செப்பிவந்த கிழவன் என மாற்றுக. மாயம் செப்புதலாவது யானை போந்ததோ மான் போந்ததோ எனக் கூறல்.

*''இரந்து குறையுறாது கிழவியுந் தோழியும்*
*ஒருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கிப்*
*பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்*
*புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து*
*மதியுடம் படுத்தற்கும் உரியன் என்ப''* (இறையனாரகப். 6)

என்பதனாற் குறையுற வுணர்தல் நிகழ்ந்துழி இது நிகழாதென்று கொள்க.

---

1. தலைமகனை அவ்விடத்தைவிட்டு நீக்குதல் என்னும் எண்ணம் இன்றி அவனது உள்ளக்கருத்தினை அறியுமளவும் அவனை விலக்காமல் ஏற்றுக் கொண்டு கூறியன இக்கூற்றுக்களாதலின், 'எஞ்சாது கூறிய இருநான்கு கிளவியும்' என்றார். எஞ்சுதல் — ஒழிதல்; நீங்கல்.

2. மாயம் - பொய்; நிகழாதன கூறுதல் என்ற பொருளில் இங்கு ஆளப் பெற்றது.

தலைவியும் தோழியும் ஒருங்கிருந்தபோது பதியும் பெயரும் பிறவும் வினவிய நிலைமைக்கண், 'பொறுத்த காரணம் குறித்த' தோழி கூற்று நிகழாது என்பதாம்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும் என்பது — மேற்சொல்லப்பட்ட மூவகையானும் புணர்ச்சியுண்மை பொருந்திய பின் தலைவன்கண் தாழநிற்றற் கண்ணும் என்றவாறு.[1]

அது நீ கருதியது முடிக்கற்பாலை எனவும் நீ இவளைப் பாதுகாத்தல் வேண்டுமெனவும் இவ்வகை கூறுதல்.

குறைந்து அவட்படரினும் என்பது—மேல் தலைவன் புணர்ச்சி யுண்மை யறிந்து தாழநின்ற தோழி தானுங் குறையுற்றுத் தலைவி மாட்டுச் செல்லுதற் கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.[2]

இக் கிளவி இரந்து பின்னின்ற தலைவன் உள்ளப்புணர்ச்சி யுள்வழியும் குறையுற்று மெய்யுறு புணர்ச்சிவேண்டித் தலைவிமாட்டுச் செல்லுங் காலத்தும் ஒக்கும்.

மறைந்து அவள் அருகத் தன்னொடும் அவளொடும் முன்னம் முன்தளைஇப் பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும் என்பது — மேல் தலைவன்மாட்டுத் தோழி குறைநயப்பிக்கச் சென்றவழித் தோழி சொல்லும் குறிப்பு மொழிக்கு அவள் மறைந்து அரியளாகத் தன்னொடும் அவளொடும் குறிப்பினை முன்னர்த் தடுத்துக்கொண்டு வழிபட்டு முயலும் பலவேறு பக்கத்தின் கண்ணும் தோழி கூற்று நிகழும் என்றவாறு.

மறைத்தலாவது—தன் மனத்து நிகழ்ச்சியை ஒளித்தல். அருகு-தலாவது—இசைவிலாதாரைப் போல நிற்றல். முன்னமுன் தளை-தலாவது - கூற்றினானன்றிக் குறிப்பினானுணர்தல். முதன்மூன் றளைஇ என்று பாடமாயின், மனத்தினானும் மொழியினானும் உடம்பினானும் ஒருங்கே அளவி என்றுமாம். பின்னிலை நிகழும் பல்வேறு மருங்காவது வழிபாடு கொடுவருங் கூற்றுவேறுபாடு. எனவே தலைவிக்குத் தழையும் கண்ணியும் கொண்டு ஒருவன் நம் புனத்தயல் வாராநின்றான் எனவும், அவன் என்மாட்டு ஒருகுறை-

---

1. 'புணர்ந்தபின்' என்றது, தலைவியுடன் தலைவனுக்கு முன்னமே கூட்டம் உண்டு என்பதனைத் தோழி தெளிவாகத் தெரிந்து கொண்டபின் என்பது கருத்து.

2. குறைதல் — குறையுறுதல்; தனது குறையினை முடித்துதவும்படி வேண்டுதல். 'குறைந்த திருநேரிசை' என்ற தொடரில் அமைந்த குறைதல் என்பது குறையுறுதல் என்ற பொருளிற் பயின்றுள்ளமை காண்க.

யுடையன் போலும் எனவும், அருளுவார்க்கு இஃது இடமெனவும், அவன் குறைமறுப்பின் மடலேறுவல் எனக் கூறிப் போந்தான் பின்பு வரக்கண்டிலேன் எனவும், இந் நிகரன கூறுதல்.

நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினும் என்பது—தலைவி குறை நயந்தமை பெற்றவழி அத் தலைவி நயம்பொருந்தும் இடத்தினுங் கூற்று நிகழும் என்றவாறு.

இன்னும் நயம்புரி யிடத்தும் என்றதனால் களவொழுக்கம் நிகழா நின்றுழிக் கூறுங் கூற்றும் ஈண்டே கொள்க. அது தலைவன் வருமெனவும் வந்தா னெனவுங் கூறுதலும் தலைமகன் பகற்குறிக்கண் நீங்கிய வழிக் கூறுதலும் எனப் பலவாம்.

எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும் என்பது—எண்ணு தற்கு அரிய பல நகையாட்டுக்களைத் தலைவனிடம் குறித்த வகையுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃது அலராகுமென்று கூறுதல். இவ்வொழுக்கம் புறத்-தார்க்குப் புலனாயினால் அவர் தூற்றி நகைப்பராகலின் நகை-யாயிற்று.

புணர்ச்சி வேண்டினும் என்பது—மேற்சொல்லப்பட்ட பல்லாற்-றானும் தலைவற்கறிவுறுத்தவழிப் பின்னும் புணர்ச்சி வேண்டினும் ஆண்டுத் தோழி கூற்று நிகழும் என்றவாறு.

இது பின்னும் புணர்ச்சி வேண்டிய தலைவற்கு இடமுணர்த்-தியது. இரவு வருவானைப் பகல் வாவென்றலும் பகல் வருவானை இரவு வாவென்றலுங் குறிபெயர்த்தலும் எல்லாம் ஈண்டே கொள்க.

இது பகற்குறி நேர்ந்தது. ஆண்டுத் தலைவிக்குக் கூறுமாறு:—

*''ஒலிவெள் ளருவி ஓங்குமலை நாடன்*
*சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்*
*தொல்முரண் சோருந் துன்னருஞ் சோலை*
*நடுநாள் வருதலும் வரூஉம்*
*வடுநா ணலமே தோழி நாமே''* (குறுந். 88)

என வரும்.

வேண்டாப் பிரிவினும் என்பது[1]. புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டினும் என்றவாறு

இது தலைவன் நெஞ்சினாற் பிரியானென்பதனான் வேண்டாப் பிரிவென்றார். அது தாளா...வென்பது அலராகுமென்று அஞ்சி ஒரு வழித் தணத்தலும் ஒன்று அவ்வழித் தலைவிக்கு உரைத்தனவும் தலைவற் குரைத்தனவும் உளவாம்.

வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தினும் என்பது—வேளாண்மையாவது உபகாரம். பெருநெறியாவது உபகாரமாகிய பெரு நெறி என்க. அதனைத் தோழி தலைவனை வேண்டிக் கோடற் கண்ணும் என்றவாறு.

இதனாற் பயன் இல்லறம் நடத்தல்வேண்டும் என்பது.

புணர்ந்துழி யுணர்ந்த அறிமடச் சிறப்பினும் என்பது—தலைவனொடு தலைவி புணர்ந்தவழி ஆண்டுப் பொருந்திய அறிவுமடம்பட்ட சிறப்பின் கண்ணும் என்றவாறு.

அஃதாவது அல்லகுறிப்படுதல். அவ்வழியும் தோழி கூற்று நிகழும்.

ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் என்பது—ஓம்படுத்துதற் பொருட் பகுதிக்கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃதாவது ஒருவழித்தணக்கும் வழி ஓம்படை கூறுதல்.

இதனுள் கிளிகடிய யாம் வாரேம் நீமறவா தொழிதல்வேண்டு மென்றவாறு.

செங்கடு மொழியாற் சிதைவுடைத்தாயினு மென்பு நெகப் பிரிந்-தோன் வழிச்சென்று கடைஇ அன்புதலை யடுத்த வன்புறைக் கண்ணும் என்பது—செவ்விய கடிய சொல்லினானே தலைவன் அன்பு சிதை வுடைத்தாயினும் என்புருகுமாறு பிரியப்பட்டவளிடத்துச் சென்று

---

1. வேண்டாப் பிரிவு என்றது, களவொழுக்கம் அலாரம் என்று கருதிப் பிரிதலை வேண்டுதல். இஃது ஒருவழித் தணத்தல் எனப்படும்.

தலைவன் அன்புடைமையின் அளிப்பன் என ஆற்றுவித்த வற்புறுத்த ற்கண்ணுந் தோழிகூற்று நிகழும் என்றவாறு.

செங்கடுமொழி[1] என்றது—கொடிய கடுமொழியேயன்றி மனத்தினான் இனியளாகிக் கூறும் கடுமொழி. அஃதாவது இயற்பழித்தல். அவ்வாறு இயற்பழித்தவழித் தலைவன் அன்பு சிதைவுடைத்தாயினும் என்றவாறு. அன்புதலையடுத்த வன்புறையாவது தலைவன் இன்றியமையான் என ஆற்றுவித்தல்.

ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்...வரைதல் வேண்டியும் என்பது—தலைவன் வருநெறியினது தீமையைத் தாங்கள் அறிவுற்றதனால் எய்திய கலக்கத்தானும் காவற் கடுமை வரையிறந்ததனானும் குறியிடமும் காலமுமாகத் தாங்கள் வரைந்த நிலைமையை விலக்கித் தலைவி காதல் மிகுதல் உட்படப் பிறவுந் தலைவனது நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் மிகுதியும் நோக்கித் தலைவன் மாட்டுக் கிளக்குங் கிளவியோடே கூட அத்தன்மைத்தாகிய நிலவகையினானே வரைதல் வேண்டியும் தோழி கூறும் என்றவாறு.

இன்னும் பிறவும் என்றதனால் தலைமகள் தன்னை யழிந்தமை கூறுதலுந் தலைவன்மாட்டு வருமிடையூறு அஞ்சுதலுங் கொள்க. அது வருமாறு:-

> *''தன்எவ்வங் கூரினும் நீ செய்த அருளின்மை*
> *என்னையு மறைத்தாள் என்தோழி அதுகேட்டு*
> *நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தான்நாணி''*
> (கலி. 44)

இது, தலைமகள் தன்னை அழிந்ததற்கண் வந்தது.

> *''கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதிராயின்*
> *அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக*
> *நரையுருமே றுங்கைவேல் அஞ்சுக நும்மை*
> *வரையர மங்கையர் வவ்வுத லஞ்சுதும் வாரலையோ.''*

இஃது அவனூறு அஞ்சுதற்கண் வந்தது.

---

1. செம்மொழி ... தாயிற்று.

நாடு முதலாயின சுட்டித் தலைவன்மாட்டுத் தோன்றுங் கிளவி யாவன—நீ இத்தன்மையாகிய நாட்டையுடையை; இத்தன்மையாகிய நகரையுடையை; இத்தன்மைத்தாகிய இல்லையுடையை; இத்தன் மைத்தாகிய குடிப்பிறப்பை யுடையை; இத்தன்மைத்தாகிய சிறப் புடையை; என அவற்றின் மிகுதிபடக் கூறுதல். அவை வருமாறு :

''கோழிலை வாழை'' என்னும் நெடுந்தொகைப் பாட்டினுள்

*''குறியா வின்பம் எளிதின் நின்மலைப்*
*பல்வேறு விலங்கும் எய்து நாட*
*குறித்த இன்பம் நினக்கெவன் அரிய''*

என நாடு சுட்டி வந்தது.

*''காமங் கடப்ப உள்ளம் இனைப்ப*
*யாம்வந்து காண்பதோர் பருவ மாயின்*
*ஓங்கித் தோன்றும் உயர்வரைக்கு*
*யாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.''* (ஐங்குறு.237)

இஃது ஊர் பற்றி வந்தது.

''துணைபுணர்ந் தெழுதரும்'' என்னும் கலித்தொகைப் பாட்டினுள்,

*''கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்*
*தொடிநெகிழ்ந்த தோளளாத் துறப்பாயால் மற்றுநின்*
*குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ.''*

இது, குடிமை பற்றி வந்தது.

*''ஆய்மலர்ப் புன்னைக்கீழ் அணிநலந் தோற்றாளை*
*நோய்மலி நிலையளாத் துறப்பாயால் மற்றுநின்*
*வாய்மைக்கண் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ.''*

*''திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை*
*துவழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயால் மற்றுநின்*
*புகழ்மைக்கட் பெரியதோர் புகராகிக் கிடவாதோ.''*

(கலித். 135)

''... ... ... ... ... ... ... ... ... ... ...
*தாமரைக் கண்ணியைத் தண்ணறுஞ் சாந்தினை*
*நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்*
*மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்*
*அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே''* (கலித். 52 )

பிறவு மன்ன.

ஐயச் செய்கை தாய்க் கெதிர்மறுததுப் பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும் என்பது - தலைவிக்குப் பிறரோடு கூட்டமுண்டெனச் சொல்லி ஐயுற்றவழி, அதனை மறுத்துத் தலைவி செய்த செய்கையைப் பொய்யென நீக்கிப் பிறிதோர் ஆற்றான் மெய்வழிக்கட்படுத்தினும் என்றவாறு.

அஃதாமாறு தலைவி குறிவழிச் செல்கின்றதனைக் காண்டல்.

அவள் விலங்குறினும் ...... தாயிடைப்புகுப்பினும் என்பது — தலைவி காப்பு மிகுதியானுங் காதன் மிகுதியானும் நொதுமலர் வரைவினானும் தமர் வரைவு மறுத்ததினானும் வேறுபட்டவழி இஃது எற்றினான் ஆயிற்று எனச் செவிலி அறிவரை வினாஅய்க் குறிபார்க்கும் இடத்தினும், அஃதன்றி வெறியாட்டிடத்தினும், பிறர் வரைவு வந்துழியும் அவர் வரைவு மறுத்தவழியும், முன்னிலை வகையானாதல் அறத்தொடுநிலை வகையானாதல் இவ்விருவகையானுந் தலைவற்கும் தலைவிக்கும் தனக்குங் குலத்திற்கும் குற்றந் தீர்ந்த கிளவியைத் தாய்மாட்டுப் புகுதவிடுத்தலும் என்றவாறு.

புகுதவிடுத்தலாவது நிரம்பச் சொல்லாது தோற்றுவாய் செய்தல்.

*''கடவுட் கற்சுனை அடைவிறந் தவிழ்ந்த*
*பறியாக் குவளை மலரொடு காந்தள்*
*குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப்*
*பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்*
*அருவி இன்னியத் தாடு நாடன்*
*மார்புதர வந்த படர்மலி யருநோய்*
*நின்னணங் கன்மை யறிந்தும் அண்ணாந்து*
*கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி*
*வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்*
*கடவு ளாயினும் ஆக*
*மடவை மன்ற வாழிய முருகே.''* (நற்றிணை. 34)

இது, முருகனை முன்னிலையாகக் கூறியது. பிறவுமன்ன.

*"அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடல்*
*திரைதரு முத்தம் வெண்மணல் இமைக்குந்*
*தண்ணந் துறைவன் வந்தெனப்*
*பொன்னினுஞ் சிறந்தன்று கண்டிசின் நுதலே".*
(ஐங்குறு. 105)

இது, முன்னிலைப் பகுதி: நொதுமலர் வரைவுபற்றி வந்தது.

*"குன்றக் குறவன் காதல் மடமகள்*
*அணிமயி லன்ன அசைநடைக் கொடிச்சியைப்*
*பெருவரை நாடன் வரையு மாகில்*
*தொடுத்தனம் ஆயினா நன்றே*
*இன்னும் ஆனாது நன்னுறு துயரே."* (ஐங்குறு. 258)

இஃது அவன் வரைவு மறுத்துழிக் கூறியது.

இனி, அறத்தொடுநிலைப் பகுதி எழுவகைப்படும். அவையா மாறு:

*"எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்*
*கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு*
*உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ*
*அவ்வெழு வகைய என்மனார் புலவர்"* (பொருளியல், 102)

எனப் பொருளியலுட் கூறிய சூத்திரத்தானே கொள்க.

எளித்தல் என்பது—தலைவன் நம்மாட்டு எளிய னென்று கூறுதல். அதனது பயம் மகளுடைத்தாயர் தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவ ராதலான், எளியனென்பது கூறி அறத் தொடுநிற்கப் பெறு மென்றவாறு.

*"அன்னை அறியினும் அறிக அலர்வாய்*
*அம்மென் சேரி கேட்பினுங் கேட்க*
*பிறிதொன் றின்மை அறியக் கூறிக்*
*கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக்*
*கடுஞ்சூள் தருகுவல் நினக்கே கானல்*
*தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியுஞ்*

*சிற்றில் இழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்*
*வருந்திய வருத்தந் தீர யாம் சிறிது*
*இருந்தன மாக எய்த வந்து*
*தடமென் பணைத்தோள் மடநல் லீரே*
*எல்லும் எல்லின் றசைவுமிக உடையேன்*
*மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்*
*கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ*
*எனமொழிந் தனனே ஒருவன் அவற்கண்டு*
*இறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி*
*இவைநுமக் குரிய அல்ல இழிந்த*
*கொழுமீன் வல்சி என்றனம் இழுமென*
*நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ*
*காணா மோவெனக் காலிற் சிதையா*
*நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்*
*என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்*
*ஒழிகோ யானென அழிதகக் கூறி*
*யான்பெயர் கென்ன நோக்கித் தான்தன்*
*நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி*
*நின்றோன் போலும் இன்றும்என் கட்கே''* (அகம். 110)

என வரும். அன்னை என்றது நற்றாயை.

ஏத்தல் என்பது — தலைவனை உயர்த்துக் கூறுதல். அது, மகளுடைத் தாயர் 'தலைவன் உயர்ந்தான்' என்றவழி மனமகிழ்வராகலின், அவ்வாறு கூறப்பட்டது. உயர்த்துக் கூறி அறத்தொடு நிற்கப்பெறும் என்றவாறு.

*''அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்*
*பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு*
*நனிபசந் தனளென வினவுதி அதன்திறம்*
*யானுந் தெற்றென உணரேன் மேனாள்*
*மலிபூஞ் சாரலென் தோழி மாரோடு*
*ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்*
*புலிபுலி என்னும் பூசல் தோன்ற*
*ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ்*
*ஊசி போகிய சூழ்செய் மாலையன்*

*பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்*
*குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி*
*வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு*
*யாதோ மற்றம் மாதிறம் படரென*
*வினவி நிற்றந் தோனே அவற்கண்டு*
*எம்முள் எம்முள் மெய்ம்மறை பொடுங்கி*
*நாணி நின்றனெ மாகப் பேணி*
*ஐவகை வகுத்த கூந்தல் ஆய்நுதல்*
*மையீர் ஓதி மடவீர் நும்வாய்ப்*
*பொய்யும் உளவோ என்றனன் பையெனப்*
*பரிமுடுகு தவிர்த்த தேரன் எதிர்மறுத்து*
*நின்மகள் உண்கண் பன்மா ணோக்கிச்*
*சென்றோன் மன்றஅக் குன்றுகிழ வோனே*
*பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்து*
*அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்*
*மகனே தோழி என்றனள்*
*அதனள வுண்டுகோள் மதிவல் லோர்க்கே.''*

(அகம். 48)

இதனுள் கழுநீர் மாலையன், வெட்சிக் கண்ணியன் எனக் கூறினமையால், அவன் நாட்டிற்கும் மலைக்குந் தலைவன் என்பது படவும், ஒருகணை தெரிந்துகொண்டு புலி யாதென்ற அவனது வீரியமுங் கூறி உயர்த்தவாறுங் காண்க.

வேட்கையுரைத்தலாவது — தலைவன்மாட்டுத் தலைவி வேட்கையும் தலைவிமாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல். வேட்கைகூறி அறத்தொடு நிற்கும் என்றவாறு.

''நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச் சென்றோன்'' என்பது தலைவன் வேட்கை கூறியவாறாம்.

*''அன்னாய் வாழிவேண் டன்னை என்தோழி*
*நனிநா ணுடையள் எனினும் அஞ்சும்*
*ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்*
*மலர்ந்த மார்பிற் பாயல்*
*தவநனி வெய்ய நோகோ யானே''.* (ஐங்குறு. 215)

இது, தலைவி வேட்கை கூறியது.

கூறுதலாவது—தலைவியைத் தலைவற்குக் கொடுக்கவேண்டு மென்பதுபடக் கூறுதல்.

உதாரணம்:—

"வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர் கொடுப்பின் அல்லது—வாடா
எழிலும் முலையும் இரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து" (திணைமாலை. 15)

என வரும்.

"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்
அதுமனங் கொள்குவை அன்னையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே"
(ஐங்குறு. 243)

எனவும் வரும்.

உசாவுதல் என்பது—வெறியாட்டுங் கழங்கும் இட்டுரைத்துழி வேலனோடாதல் பிறரோடாதல் தோழி உசாவுதல்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவல் ஓம்புமதி வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி தோன்றிய வன்றுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
விண்டோர் மாமலைச் சிலம்பன்
தண்டா ரகலமும் உண்ணுமோ பலியே." (குறுந். 362)

இது, வேலனொடு உசாவுதல்.

"இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினோடு
உண்ணமை மதுத்துளி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
எம்மில் வருகுவை நீயெனப்
பொம்மல் ஓதி நீவி யோனே." (குறுந். 137)

இது செவிலி கேட்பத் தலைவியொடு தோழி உசாவியது. பிறவுமன்ன.

ஏதீடு தலைப்பாடு என்பது—யாதானுமோர் ஏதுவை இடையிட்டுக் கொண்டு தலைப்பட்டமை கூறுதல்.

உதாரணம்:—

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
... ... ... ... ... ... ... ... ... ... ...
அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே."
(கலித். 32)

இது, புனலிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

'சுள்ளி சுனை நீலஞ் சோபா லிகைசெயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து—தெள்ளி
இதணாற் கடியொடுங்கா ஈர்ங்கடா யானை
உதணாற் கடிந்தான் உளன்." (திணைமாலைநூற், 2)

இது, களிற்றிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

"அன்னாய் வாழிவேண் டன்னை என்னை
தானு மலைந்தான் எமக்குந்தழை யாயின
பொன்வீ மணிஅரும் பினவே
என்ன மரங்கொலவர் சார லவ்வே."
(ஐங்குறு. 201)

இது, தழையுங் கண்ணியுந் தந்தானென்பதுபடக் கூறியது.

உண்மை செப்பும் கிளவி யாவது—பட்டாங்கு கூறுதல்.

"அல்கன் மழை பொழிந்த அகன்கண் அருவி
ஆடுகழை அடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை அன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவள்
மயங்கிதழ் மழைக்கண் கலிழும் அன்னாய்." (ஐங்குறு.220)

இவ்வகை யெல்லாம் தத்தங் குடிமைகேற்றவழிக் கொள்க.

வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டியும் என்பது—தமர் வரைவுடன்பட்டமையைத் தலைவற்கு உரைக்க வேண்டியும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க.

ஆங்கதன் றன்மையின் வன்புறை என்பது — அவ்வாறு வரைவுடம்பட்ட தன்மையினால் தலைவியை வற்புறுத்தற் கண்ணும் என்றவாறு.

*''கூர்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்*
*நூலற முத்திற் காலொடு பாறித்*
*துறைதொறும் பரக்குந் தூமணற் சேர்ப்பனை*
*யானுங் காதலென் யாயும்நனி வெய்யள்*
*எந்தையுங் கொடீஇயர் வேண்டும்*
*அம்பல் ஊரும் அவனொடு மொழிமே.''*		(குறுந். 51)

*''அம்ம வாழி தோழி நம்மொடு*
*சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்*
*மென்தோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறற்கவின் தொலைத்த*
*குன்ற நாடற் கயர்ந்தனர் மணனே.''*		(ஐங்குறு. 230)

என வரும்.

பாங்குற வந்த நாலெட்டு வகையும் என்பது—பகுதிப்பட வந்த முப்பத்திரண்டு வகைப்பட்ட பொருண்மையும் என்றவாறு.

அவையாவன மேற்சொல்லப்பட்ட முன்னுறவுணர்தல் வகை குறையுற வுணர்தற்கண் பெருமையிற் பெயர்த்தல், உலகுரைத் தொழித்தல், அருமையினகற்றல், பின் வாவென்றல், பேதைமை யூட்டல், முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தல், அஞ்சி யச்சுறுத்தல், உரைத்துழிக் கூட்டம் எனச் சொல்லப்பட்ட எண்வகை மாயஞ் செப்பி வந்த கிழவனைப் பொறுத்த காரணம் குறித்தலாகிய இருவருமுள்வழி அவன் வர வுணர்தல், புணர்ந்தபின் அவன்வயின் வணங்கல், குறைநயப்பச் சேறல், குறைநயப்புவகை, நயந்தமை கூறல், அலராமென்றல், புணர்ச்சி வேண்டியவழிக் கூறல், பிரிவு

வேண்டியவழிக் கூறல், வேளாண் பெருநெறி வேண்டிக் கூறல், அல்லகுறிப்பட்டவழிக் கூறல், ஓம்படை கூறல், இயற்பழித்து வற்புறுத்தல், ஆறின்னாமை கூறல், காப்பு மிகுதி கூறல், காதல் மிகுதிகூறல், அவன்வயிற் றோன்றிய கிளவி, ஐயச்செய்கை, தாய்க் கெதிர் மறுத்தல், குறிபார்த்தல் விலக்கல், வெறிவிலக்கல், பிறன் வரைவு மறுப்பித்தல், அவன் வரைவுடம்படுத்தல், வரைவுடம் பட்டமை தலைவற்குக் கூறல், உடம்பட்டமை தலைவிக்குக் கூறி வற்புறுத்தல் என இவை.

தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன என்பது — இவை முப்பத் திரண்டு பொருண்மையும் தலைவிக்கு இன்றியமையாத தோழி மேலன என்றவாறு. (உ௪)

நச்சினார்க்கினியம்

இது முறையானே தோழி கூற்று நிகழும் இடம் பலவுந் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்.) நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும் செய் வினை மறைப்பும் செலவும் பயில்வும் - தலைவன் பெட்ட வாயில் பெற்று இரவுவலியுற்று முன்னுறு புணர்ச்சியை உரைப்பின் இன்னது நிகழுமென்று அறியாது அஞ்சிக் கரந்து மதியுடம் படுப்பத் தோழி மதியுடம்படுங்கால் அவள் ஆராயும் ஆராய்ச்சியெல்லாம் நாட்டமாம்; அஃது எட்டாம். அவற்றுள் முன்னுறு புணர்ச்சியை உணர்தற்குக் காரணம் எழுவகைய. இவை நாற்ற முதலிய ஏழும்:

நாற்றமாவது, ஓதியும் நுதலும் பேதைப் பருவத்துத் தக நாறாது தலைவன் கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியனவும் பல பூக்களும் விரவி நாறுதல்.

தோற்றமாவது, நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளை நோக்கின்றி உள்ளொன்று கொள்ள நோக்குங் கண்ணுந், தந்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பணைத்துக் காட்டுந் தோளும் முலையுமென்று இன்னோரன்ன.

ஒழுக்கமாவது, பண்ணையாயத்தோடு முற்றிலான் மணற் கொழித்துச் சோறமைத்தல் முதலியன முனிந்த குறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கு ஏற்ப ஒழுகுதல்.

உண்டியாவது, பண்டு பான் முதலிய கொண்டு ஒறுத்து ஊட்ட உண்டு வருகின்றாள், இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலும் மீதூர அதன்மேல் உவப்பு ஆண்டு இன்றி மிக ஒறுத்த உள்ளத்தளாதல்.

செய்வினை மறைத்தலாவது, முன்பு போலாது இக் காலத்து நினைவுஞ் செயலுந் தலைவனொடு பட்டனவே யாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல்; அஃது ஆயத்தோடு கூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலாம்.

செலவாவது, பண்டுபோல் வேண்டியவாறு நடவாது சீர்பெற நடந்து ஓரிடத்துச் சேறல்.

பயில்வாவது, செவிலி முலையிடத்துத் துயில் வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல். இன் : சாரியை.

புணர்ச்சி எதிர்ப்பாடு-எதிர்ப்பாட்டுப் புணர்ச்சியென மாற்றுக. அது கொடுப்பாரும் அடுப்பாருமின்றி இருவருந் தமியராய் எதிர்ப் பட்டுப் புணரும் புணர்ச்சி. இவ் வொழுக்கம் பாங்கற் கூட்டத்திற்கு ஏதுவாகா.

உள்ளுறுத்து வரூஉம் உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை-அப் புணர்ச்சி யெதிர்ப்பாடு நிகழ்ந்ததனைத் தோழி தன்னுள்ளத் துள்ளே வினாவி வருகின்ற ஐயவுணர்வினை அவ்வேழனானுந் தெளிந்து புணர்ச்சி உண்டென்பதனை உணர்ந்தபின்றை :

இன்னதும் இன்னதுமாகிய ஏழென்க. அங்ஙனந் துணிந்த பின்னல்லது, தலைவிமாட்டுத் தோழி சொன்னிகழ்த்தாளென்றற்குப் 'பின்றை' யென்றார்.

உ.ம்: ''*காம்பிவர் தோளுங் கருமதர் மழைக்கணும்*
*வீங்கிள முலையும் வேறுபட் டனவே*
*தாங்கரு நாற்றந் தலைத்தலை சிறந்து*
*பூங்கொடிக் கிவர்ந்த புகற்சியென வாங்கிற்*
*பகலும் கங்குலு மகலா தொழுகுமே*
*நன்றி யளவைத் தன்றிது*
*எவன்கொன் மற்றிவட் கெய்திய வாறே.*''

இதனுள் நாற்றமுந் தோற்றமுஞ் செலவும் வந்தன.

"கண்ணுஞ் சேயரி பரந்தன்று நுதலும்
நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே
வாங்கமை மென்றோண் மடந்தை
யாங்கா யினன்கொ லென்னுமென் னெஞ்சே."
(சிற்றெட்டகம்)

"தெய்வத்தி னாயதுகொல் தெண்ணீர் புடையுடுத்த
வையத்து மக்களின் ஆயதுகொல் — நைவுற்று
வண்டார்பூங் கோதை வரிவளைக்கை வாணுதலாள்
பண்டைய ளல்லள் படி."

இவையும் அவை.

"ஏனல் காவ லிவளும் அல்லள்
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்
நரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே
எம்முன் நாணுநர் போலத் தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லு மாடுப கண்ணி னானே."

இது புணர்ச்சி உணர்ந்தது.

"இவள்வயிற் செலினே யிவற்குடம்பு வறிதே
இவன்வயிற் செலினே யிவட்கு மற்றே
காக்கை யிருகணி னொருமணி போலக்
குன்றுகெழு நாடற்குங் கொடிச்சிக்கும்
ஒன்றுபோல் மன்னிய சென்றுவாழ் உயிரே."

இதுவும் அது.

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர்பொருள் நாட்டத்தானும் - அங்ஙனம் உணர்ந்தபின் தோழி தலைவியுடன் ஆராயுங்காற் றன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக் கூறவேண்டுதலில் உண்மைப் பொருளானும் பொய்ப்பொருளானும் விராவிவரினும் அவட்குக் குற்றேவல் செய்யுந் தன்மையில் தப்பாதவாற்றான் வேறுபல் கவர்பொருள் படக்கூறி ஆராயும் ஆராய்ச்சிக்கண்ணும் :

நாணால் இறந்துபடாமற் கூறுதற்கு 'வழிநிலை பிழையாது' என்றார்.

பிறைதொழுவா மெனவுங் கணைகுளித்த புண்கூர் யானை கண்டனெனெனவும், தன் பெருமைக்கு ஏலாத சிறுசொற் கூறிக் குறைவுற்று நிற்கின்றான் ஒருவனுளன்; அவனை நீயுங் காண்டல் வேண்டுமெனவும், அவன் என்னைத் தழுவிக்கொண்டு குறை கூறவும் நான் மறுத்து நின்றேனென்றாற் போலவும் மெய்யும் பொய்யும் விராயும் பிறவாறாகவுங் கூறுவன பல்வேறு கவர் பொருளாம்.

உ.ம்: *"முன்னுந் தொழுந்தோன்றி முள்ளெயிற்றா யத்திசையே*
*இன்னுந் தொழத்தோன்றிற் றீதேகாண்—மன்னும்*
*பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்போற்*
*பெருகொளியான் மிக்க பிறை."*

இது பண்டு கூறியவாறு கூறலின் மெய்யும், பிறை தொழாமை அறிந்து கூறலிற் பொய்யுமாய் வழிநிலை பிழையாத கவர் பொருளாயிற்று.

*"பண்டிப் புனத்துப் பகலிடத் தேனலுட்*
*கண்டிக் களிற்றை யறிவன்மன்— திண்டிக்*
*கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய்*
*உதிர முடைத்ததன் கோடு."* (சிற்றெட்டகம்)

இது நடுங்க நாட்டம்; இஃது இறந்துபாடு பயத்தலிற் கந்தருவத்திற்கு அமையாது.

*"தொய்யில் வனமுலையுந் தோளுங் கவினெய்தித்*
*தெய்வங் கமழுமால் ஐம்பாலும் — ஐயுறுவல்*
*பொன்னங் கொடிமருங்குற் பூங்கயற் கண்ணினாய்க்*
*கென்னை இதுவந்த வாறு"*

என வழிநிலை பிழையாமற்[1] கவர்பொருளாக நெறிபடுநாட்டம் நிகழ்ந்தவழித் தலைவி சுனையாடினேற்கு இங்ஙனம் ஆயிற்றென்னும். அதுகேட்டுத் தோழியும் யானும் ஆடிக் காண்பல் என்னும்.

1. வழிநிலைபிழையாமை - குற்றேவல் மகளாய் வழிபட்டொழுகும் பணிவுடைமையில் தப்பாமை.

*"எழாஅ யாகலின் எழினலந் தொலைய*
*வழாஅ தீமோ நொதுமலர் தலையே*
*யேனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த*
*பகழி யன்ன சேயரி மழைக்கண்*
*நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்*
*எறிபொற் பிதிரிற் சிறுபல் காய*
*வேங்கை வீயகு மோங்குமலைக் கட்சி*
*மயிலறி பறியா மன்னோ*
*பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே."* (நற்றிணை,13)

இது தலைவி வேறுபாடு கண்டு ஆராயும் தோழி தனது ஆராய்ச்சியை மறைத்துக் கூறியது. நாட்டத்தானும் என்னும் உம்மை முற்று, 'நாட்டமெல்லாந்' தழீஇயினமையின் ஆனுருபு இடப்பொருட்டாம். அஃது இடமாக வருகின்ற எட்டனையும் இடத்தியல் பொருளாக உரைக்கவே அவளை நாடுகின்ற காலமும் மேல் வருகின்ற எட்டனையுந் தலைவற்கு உரைக்குங் காலமும் ஒருங்கு நிகழுமென்பதாம். இங்ஙனம் நாடி மதியுடம்படுக்குந் துணையுந் தலைவற்கு இக்குறை முடிப்பல் என்னாது ஒழுகும்.

குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்ப்பினும் - இரவுவலியுற்றுக் குறைகூறத் தொடங்கிய தலைவனைத் தோழி தான் இவ்வொழுகலாறு அறிந்தும் அறிந்திலள் போலத் தலைவன் பெருமைகூறி அவன் குறிப்பினை மாற்றினும்:

தான் அறிந்ததனை மறைத்துக் கூறுதலன்றி அன்பின்மை ஒருதலையாக உடையளல்லள்.

உலகு உரைத்து ஒழிப்பினும் - அவ்வொழுக்கம் அறியாள் போற் கரந்த தோழி உலகத்தாரைப்போல் வரைந்து கொள்ளெனக் கூறித் தலைவனை நீக்கினும்:

அருமையின் அகற்சியும் - அவை கேட்டுப் பிற்றை ஞான்றும் வந்தவன்மாட்டுச் சிறிது நெஞ்சு நெகிழ்ந்த தோழி அங்ஙனங் கூறாது இவள் அரியளெனக் கூறுதலும்:

இருவருமுள்வழி யவன்வர வுணர்தலின் இருவருள்ளமும் உணர்ந்து அங்ஙனங் கூறினாள்.

அவள் அறிவுறுத்துப் பின் வா என்றலும் - தலைவனை நோக்கி நீ காதலித்தவட்கு நீயே சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டு வருகவென்றலும் :

உ-ம்: *"தன்னையுந் தானாணுஞ் சாயலாட் கிஃதுரைப்பின்*
*என்னையும் நாணப் படுங்கண்டாய் —மன்னிய*
*வேயேர்மென் றோளிக்கு வேறாய் இனியொருநாள்*
*நீயே யுரைத்து நிறு."*

இது நீயே யுரையென்றது.

*"நாள்வேங்கை பொன்சொரியும் நன்மலை நன்னாட*
*கோள்வேங்கை போற்கொடியர் என்னைமார்-கோள்-*
*வேங்கை*
*'அன்னையால் நீயும் அருந்தழையாம் ஏலாமைக்*
*கென்னையோ நாளை எளிது."* (திணை. நூற். 20)

இது கையுறை மறுத்துப் பின் வருக என்றது.

இவை[1] ஒரு கூற்றாக வருவன வுளவேற் காண்க.

பேதைமை ஊட்டலும் - அங்ஙனம் பின் வருகவென்றுழி முன்வந்தானை அறியாமை ஏற்றிக் கூறலுந், தலைவியையும் அங்ஙனம் அறியாமை யேற்றிக் கூறலும்:

உ-ம்: *"நெடுந்தேர் கடைஇத் தமியராய் நின்று*
*கடுங்களிறு காணிரோ வென்றீர் — கொடுங்குழையார்*
*யானை யதருள்ளி நிற்பரோ தம்புனத்*
*தேனற் கிளிகடிகு வார்"*

*"வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பில்*
*வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்*
*சோர்ந்த குருதி யொழுகமற் றிப்புறம்*
*போந்ததில் ஐய களிறு."* (திணை. ஐம்.8)

இவை தலைவனைப் பேதைமை ஊட்டின.

1. இவை - அவளறிவுறுத்தல், பின்வாவென்றல்.

"நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி — எறிந்துழுது
செந்திணை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு." (திணை. நூற். 24)

இது தலைவியைப் பேதைமை யூட்டியது.

"இளையள் விளைவிலள்" என்பதூஉம் இதன்கண் அடங்கும்.

முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்து உரைத்தலும் - அங்ஙனம் பேதைமை யூட்டியவழி இவள் இக்குறை முடிப்ப ளென்று இரந்து ஒழுகினேற்கு இவள் புணர்ச்சி யறிந்திலள் போற் கூறினாளென ஆற்றானாயவனை யான் அப்புணர்ச்சி நிகழ்ந்தமை அறிவலென்று கூறி வருத்தந் தீர்த்தலும் :

உ-ம்: "நறுந்தண் கூந்தற் குறுந்தொடி மடந்தை
சிறுமுதுக் குறைவி யாயினள் பெரிதென
நின்னெதிர் கிளத்தலு மஞ்சுவல் எனக்கே
இன்னுயிர் அன்னள் ஆயினுந்
தன்னுறு விழுமங் காத்த லானே."

நின்னெதிர் கிளத்தல் அஞ்சுவல் நீ அவட்கு உரைத்தி யெனக் கருதியென்றலிற் புணர்ச்சி யுணர்ந்தமை கூறினாள்.

அஞ்சி அச்சு உறுத்தலும் - அங்ஙனம் ஆற்றுவித்துங் கடிது குறைமுடியாமையைக் கருதுந் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக் கூறலும்:

அஞ்சுதல் அச்சென்றாயிற்று. இவ்வச்சங் கூறவே அவன் ஆற்றும்.

உ-ம்: "யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்பு மருண்முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு
கரிக்குறட் டிறைஞ்சிய செறிதாட் பெருங்குரற்
படுகிளி கடிகஞ் சேறு மடுபோ
ரெஃகுவிளங்கு தடக்கை மலயன் கானத்து
ஆரம் நாறு மார்பினை
வாரன்மற் றைய வருகுவள் யாயே." (குறுந். 198)

இது யாயை அஞ்சியது.

*"யானை யுழலும் அணிகிளர் நீள்வரைக்*
*கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம்*
*ஏனலுள் ஐய வருதன்மற் றென்னைகொல்*
*காணினுங் காய்வர் எமர்."* (திணை. ஐம். 6)

இது தமரை அஞ்சிக் கூறியது.

உரைத்துழிக் கூட்டமோடு எஞ்சாது கிளந்த இரு நான்கு கிளவியும்-ஆயத்தினீங்கித் தன்னோடுநின்ற தலைவியை அவனோடு கூட்டவேண்டி அவளினீங்கித் தலைவர்க்கு இன்னுழி எதிர்ப்படுதி யென உரைத்தவிடத்துக் கூடுங் கூட்டத்தோடே ஒழியாமற் கிளந்த எண்வகைக் கிளவியும் :

உ-ம்: "*நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி*
*நின்குறி வந்தனென் இயல்தேர்க் கொண்க*
*செல்கஞ் செலவியங் கொண்மோ அல்கலும்*
*ஆரல் அருந்தும் வயிற்ற*
*நாரை மிதிக்கும் என்மகள் நுதலே."* (குறுந் 114)

'வந்தனென்' என்றும், 'என் மகள்' என்றும் ஒருமை கூறிச் 'செல்கம்' என்ற உளப்பாட்டுப் பன்மையால் தலைவி வரவுங்கூறி இடத்துய்த்தவாறு முணர்த்தினாள். 'செலவியங் கொண்மோ' என்றது நீயே அவளைப் போகவிடுவாய் என்றதாம். நாட்டந் தன்மனத்து நிகழாநிற்றலும் அவன்மனத்துக்குறையுணர்த்து தல் நிகழாநிற்றலுமென்னும் இரண்டினையும் எஞ்சாமற் றழீஇநிற்-கும் இவ்வெட்டு மென்றற்கு 'எஞ்சாது' என்றார்.[1]

வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணங் குறித்த காலையும் - தன் முன்னர் வந்து நின்ற தலைவனைத் தோழி எதிர்ப்பட்டு நின்றேயும் வாராதான்போல மாயமேற்றி அதனைப் பொறுத்த காரணங் குறிப்பினாற் கொள்ளக் கூறுங் காலைக்கண்ணும் :

---

1. கூற்று நிகழ்த்தும் தோழியின் உள்ளத்திலே ஆராய்ச்சி நிகழ்தலும் தலைவன் மனத்திலே குறையுணர்த்துதல் நிகழ்தலும் என இருவர் மன நிகழ்ச்சியினையும் ஒருங்கு தழீஇ நிற்பன இவ்வெட்டும் என்பது புலப்படுத்தற்கு 'எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்' என்றார்.

காரணமாவது நீ அறியையாதலின் இவள் ஆற்றாளா மென்று எதிர்கொள்கின்றேமென்றல்; கூட்டம் நிகழ்ந்தபின் தோழி இவ்வாறு கூறுதற்கு உரியளென்று அதன் பின் வைத்தார். இஃது அவன் வரவை விரும்பியது, வரைவு கடாயதன்று.

உ-ம்: ''நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலைக்
கடல்பா டழிய இனமீன் முகந்து
துணைபுணர் உவகையர் பரத மாக்கள்
இளையரு முதியருங் கிளையுடன் துவன்றி
உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பக டொப்பக் குழீஇ
அயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த வுழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்
பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணல் துஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ வொருநாள்
மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்
தண்ணறுங் கானல் வந்துநும்
வண்ணம் எவனோ வென்றனிர் செலினே.'' (அகம்.30)

இதனால் தம்மான் இடையூறெய்தி வருந்துகின்றானை ஒரு நாள் வந்திலிரென மாயஞ் செப்பியவாறும், நீர் வாராமையின் வண்ணம் வேறுபடுமென ஏற்றுக்கோடுமெனக் காரணங் கூறிய வாறுங் காண்க. தம்மேல் தவறின்றாகக் கூறுங்காலத்து இது கூறுவரென்றற்குக் 'குறித்தகாலை' யென்றார்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற்கண்ணும்—அக்கூட்டத் தின்பின் முற்காலத்துப் பணிந்து பின்னின்றோனைத் தோழி தானே பணிந்தொழுகுமிடத்தும்:

உ-ம்: ''இவளே, நின்சொற் கொண்ட வென்சொல் தேறிப்
பசுநனை ஞாழல் பல்கிளை யொருசிறைப்
புதுநல னிழந்த புலம்புமா ருடையள்
உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்

நிலவு மிருளும் போலப் புலவுத்திரைக்
கடலுங் கானலும் தோன்றும்
மடல்தாழ் பெண்ணையெஞ் சிறுநல் லூரே'' (குறுந்.81)

''வாங்கு கோனெல்'' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

''அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
உரவுவில் மேலசைத்த கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர லேனல்
கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டும்...'' கலி.50)

எனவும்,

''கடுமா கடவுறூஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்தும் அடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
யுழையிற் பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் றோழியது கவினே'' (கலி.50)

எனவும் வரும்.

இத்துணையும் ஒரு கூட்டங் கூறினார்.[1]

குறைந்து அவட் படரினும் - தலைவன் இரந்து பின்னின்றமை கண்டு தோழி மனம் நெகிழ்ந்து தான் குறைநேர்ந்து தலைவியிடத்தே சென்று குறைகூறினும்:

உ-ம்: ''வளையணி முன்கை வாலெயிற் றின்னகை
யிளைய ராடுந் தளையவிழ் கானல்
விருந்தென வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே'' (ஐங்குறு.198)

என வரும்.

மறைந்தவள் அருக - நாண் மிகுதியால் தனது வேட்கை மறைந்த தலைவி அக்கூற்றிற்கு உடம்படாது நிற்றலால்; தன்னொடும்

1. இத்துணையும் ஓர் கூட்டம் என்றது, பாங்கியின் கூட்டத்தினை.

அவளொடும் முதன்மூன்று அளைஇ[1] தலைவனோடுந் தலைவியோடும் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சி முதலிய மூன்றனையும் தான் அறிந்தமை குறிப்பான் உணர்த்தி; பின்னிலை பல்வேறு நிகழும் மருங்கினும்- இரந்து பின்னிற்றல் பலவாய் வேறுபட்டு நடக்குமிடத்தும் : [2]

அவை பெருந்தன்மையானொருவன் யானை முதலியன வினாயுந் தழையுங் கண்ணியுங் கொண்டும் இப்புனத்து வாரா நின்றானெனவும், அவன் என்மாட்டுப் பெரிதுங் குறையுடைய னெனவும், அவன் குறைமுடியாமையின் வருந்தாநின்றானெனவும், அத்தழை நீ ஏற்றல்வேண்டுமெனவும், அக்குறை முடித்தற்கு இஃதிடமெனவும், யான் கூறியது கொள்ளாயாயின் நினக்குச் செறிந்தாருடன் உசாவிக் குறைமுடிப்பா யெனவும், மறுப்பின் மடலேறுவனெனவும், வரைபாய்வனெனவும், பிறவாற்றானுங் கூறிக் குறைநயப்பித்தலாம்.

இன்னும் வேறுபட வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக் கொள்க.

நன்னயம் பெற்றுழி நயம்புரியிடத்தினும் - அங்ஙனந் தோழி கூறிய குறையினை அவள் அருளப்பெற்றவழி அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்புமிடத்தும் :

அவை தலைவனாற்றாமை கண்டு தோழி கையுறை யெதிர் தலும், இரவுக்குறியும் பகற்குறியும் நேர்தலுங், குறியிடங் காட்டலும், பிறவுமாம்.

உ-ம்: ''பொன் மெலியும் மேனியாள் பூஞ்சுணங்கின் மென்முலைகள்
என்மெலிய வீங்கினவே பாவமென் — றென்மெலிவிற்
கண்கண்ணி வாடாமை யானல்ல வென்றுரைத்தால்
உண்கண்ணி வாடா ளுடன்று.'' (திணை. நூற் 21)

இதன்கட் கண்கண்ணி, குறுங்கண்ணி.

இன்னும் 'நயம்புரியிடத்தும்' என்றதனால் அவன் வரவினைத் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க.

---

1, 'முன்னமுன் றளைஇ' என்பது இளம்பூரணர் பாடம்.

2, 'தன்' என்றது தலைவனை. அருகுதல்-உடன்படாமைக் குறிப்பினால் ஒளித்தல். முதல் மூன்று - முதற்கண் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சி, இடந் தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற மூன்று. அளைதல்—குறிப்பான் வுணர்த்தல், பின்னிலை—இரந்து பின்னிற்றல்,

"இவர்பரி நெடுந்தேர் மணியும் இசைக்கும்
பெயர்பட வியங்கிய விளையரு மொலிப்பர்
கடலாடு வியலணிப் பொலிந்த நறுந்தழைத்
திதலை யல்குல் நலம்பா ராட்டிய
வருமே தோழி வார்மணற் சேர்ப்பன்
நிறைபட வோங்கிய முழவுமுதற் புன்னை
மரவரை மறைகம் வம்மதி பானாட்
பூவிரி கானற் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணா
அல்ல லரும்படர் காண்கநாஞ் சிறிதே." (நற்றிணை, 307)

இது, தோழி தலைவிக்குப் பகற்குறிக்கண் தலைவன் வருகின்றமை காட்டி அவன் வருத்தங் காண யாம் மறைந்து நிற்பாம் வம்மோவெனக் கூறியது.

எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும் - தலைவன் இளிவந் தொழுகுதற்குப் பொறாத தோழி அவன் இளிவரவு உணர்த்துங் கருத்தினளாய்ச் செயற்கையாக ஆராய்தற்கு அரிய-வாய் வரும் ஒன்றல்லாப் பலநகை குறித்த பகுதிக்கண்ணும் :

அவை 'என்னை மறைத்த லெவனாகியர்' என்றலும், அறியாள் போறலுங், குறியாள் கூறலும், படைத்துமொழி கிளவி-யுங், குறிப்புவேறு கொளலும், பிறவுமாம்.

"தன்னெவ்வங் கூறினும் நீசெய்த வருளின்மை
என்னையு மறைத்தாளென் தோழி யதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தானாணி."
(கலி.44)

இது, பழிகூறுவேனென்று தலைவி குறியாததொன்றைத் தோழி கூறியது.

"விருந்தின ராதலின் வினவுதிர் அதனெதிர்
திருந்துமொழி மாற்றந் தருதலும் இயல்பெனக்
கூறுவ தம்மயான் ஊறுபல வருமென
அஞ்சுவன் வாழி யறைய வெஞ்சா

தெண்ணில ரெண்ணியது முடிப்பர்
கண்ணிலர் கொடியரிவ டன்னை மாரே.''

இது, நிகழாது நிகழ்வதாகப் படைத்து மொழிந்தது.

''நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்
பொறிமாண் வரியலவ னாட்டலு மாட்டாள்
சிறுநுதல் வேரரும்பச் சிந்தியா நின்றாட்
கெறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் செல்கோ.''

இது குறிப்பு வேறு கொண்டாளென்றது.

புணர்ச்சி வேண்டினும் - தலைவன் பகற்குறியையும் இரவுக் குறியையும் விரும்பிக் கூறுமிடத்தும் :

தோழிமேன கிளவி. அவை பலவகைய.

குறுந். 353: இஃது இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாகப் பகற்குறி நேர்வாள்போல் இரவுக் காப்புமிகுதி கூறியது.

'பாடின்னருவி ஆட' என்றாள் அதன்கண் உதவினானென்பதுபற்றி அல்லது களவிற்கு உடன் ஆடுதலின்று.[1]

குறுந். 336.:
இது. தலைவன் இரவுக்குறி நயந்தவனைத் தோழி மறுத்தது.

குறுந், 346: இது, தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பித்தது.

''தண்ணந் துறைவன் கடும்பரி மான்தேர்
காலை வந்து மாலை பெயரினும்
பெரிது புலம்பின்றே கானல்
சிறிது புலம்பினமால் தோழி நாமே.''

---

1. தலைவனும் தலைவியும் இருவரும் சேர்ந்து அருவியாடுதல் கற்பின்கண் அல்லது களவின்கண் இன்மையின், குறுந்தொகை 354-ஆம் பாடலிற் 'பாடின்னருவி யாடல்' என்றது, தலைவி அருவியில் ஆடி வழுக்குற்று வீழ்ந்த இடர் நிலையில் தலைவன் அங்கு விரைந்துவந்து தலைவியை உய்வித்த உதவியைக் குறித்தது என்பதாம்.

இது, தலைவியது ஆற்றாமைகண்டு நம் வருத்தந் தீர்தற்கு இரவுக்குறியும் வேண்டுமென்றது.

நற்றிணை, 67: இஃது இரவுக்குறி வேண்டிய தலைவற்குத் தோழி உடன்பட்டுக் கூறியது.

திணை. ஐம். 40: இஃது இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வருங்கால் இன்னபெற்றியான் வருவாயாக வென்றது.

திணை. நூற். 56. இஃது இரவுக்குறியிடங் காட்டித் தோழி கூறியது.

நற்றிணை, 83: இஃது இரவுக்குறி வந்த தலைவன் சிறைப் புறமாகக் கூகைக்கு உரைப்பாளாய்த் தோழி கூறியது.

நற்றிணை, 182: இது தலைவனைக் கண்டு முயங்குகம் வம்மோ என்றது.

வேண்டாப் பிரிவினும் - தலைவன்றான் புணர்ச்சியை விரும் பாது பிரிவை விரும்பிய இடத்தும் :

அப்பிரிவு தண்டாதிரத்தலை முனிந்த மற்றையவழி 'இட்டுப் பிரிவும் அருமைசெய் தயர்த்தலு' (111) மாம்; ஆண்டுத் தலைவற்குந் தலைவிக்குங் கூறுவன கொள்க.

வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும் - தலைவற்குத் தாஞ் சில கொடுத்தலைத் தலைவி வேண்டியவிடத்தும் :

அது தலைவி 'வேளா ணெதிரும் விருந்தின்கண்' தோழி கூறுவதாம்.

உ-ம்: ''பன்னாள் எவ்வந் தீரப் பகல்வந்து
*புன்னையம் பொதும்பின் இன்னிழற் கழிப்பி*
*மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து*
*வலவன் வண்டேர் இயக்க நீயுஞ்*
*செலவுவிருப் புறுதல் ஒழிகதில் அம்ம*
*செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்*

*பல்பூங் கானற் பவத்திரி யனவிவள்*
*நல்லெழில் இளநலந் தொலைய வொல்லெனக்*
*கழியே யோத மல்கின்று வழியே*
*வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்குஞ்*
*சென்றோன் மன்ற மான்றின்று பொழுதென*
*நின்றிறத் தவலம் வீட இன்றிவண்*
*சேப்பின் எவனோ பூக்கேழ் புலம்ப*
*பசுமீன் நொடுத்த வெண்ணென்மாத் தயிர்மிதி*
*மிதவை மாவார் குநவே நினக்கே*
*வடவர் தந்த வான்கேழ் வட்டம்*
*குடபுல வுறுப்பிற் கூட்டுபு நிகழ்த்தி*
*வண்டிமிர் நறுஞ்சாந் தணிகுவந் திண்டிமில்*
*எல்லுத் தொழின்மடுத்த வல்வினைப் பரதவர்*
*கூர்வளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன்*
*கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை*
*தண்கட லசைவளி யெறிதொறும் வினைவிட்டு*
*முன்றிற் றாழைத் தூங்குந்*
*தெண்டிரைப் பரப்பினெம் உறைவின்ஊர்க்கே''* (அகம்.340)

இதனுள் தனக்கும் புரவிக்குங் கொடுப்பன கூறித் தடுத்த வாறு காண்க.

''நாள்வலை முகந்த'' (அகம். 300) என்பதும் அது.

புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும் - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தகாலத்து அவன் தீங்கு உணராதவனை[1] நன்றாக உணர்ந்த அறிவினது மடப்பங்கூறித் தங் காதற்சிறப்பு உரைத்த இடத்தும் :

உ-ம: *''சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்*
*தெற்றென இறீஇயரோ வைய மற்றியாம்*
*நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே*
*பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல்*
*எமக்கும் பெரும்புல வாகி*
*நும்மும் பெறேஎம் இறீஇயரெம் முயிரே.''* (குறுந்.169)

1. 'உணராதவனை' என்பதனை 'உணராது அவனை' என இருசொல்லாகப் பிரித்துரைக்க. உணர்தல் — நற்பண்பினனாகத் தெளிதல்.

இஃது அவனோடு நகுதற்குத் தோன்றிய உணர்வு இன்றி-யமையாமை[1] கூறிக் காதற்சிறப்பு உரைத்தது.

ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் - தலைவற்குத் தலைவியைப் பாதுகாத்துக்கொள்ளெனக் கூறுங் கிளவியது பகுதிக் கண்ணும் : தோழிமேன கிளவி.

பகுதியாவன வரைவிடைப் பிரிவு முதலிய பிரிவிடத்தும் புனத்திடைப் புணர்ச்சியின்றி நீங்குமிடத்தும் பிறவிடத்தும் கூறு-வனவாம்.

> *''அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி*
> *குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கால்*
> *இருவி நீள்புனங் கண்டும்*
> *பிரிதல் தேற்றாப் பேரன் பினவே.''* (ஐங்குறு. 284)

இது, தினை அரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள் போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது. இன்னும் ஓம்படைக் கிளவி-யென்றதற்கு இவளை நீ பாதுகாத்துக்கொள்ளென்று தலைவன் கூறுங்கிளவியது பகுதிக்கண்ணுமென்றும் பொருள் கூறுக.

நற்.37 : இது, வரைவிடைப் பிரிகின்றான் ஆற்றுவித்துக்-கொண்டிரு என்றாற்குத் தோழி கூறியது.

செங்கடுமொழியாற் சிதைவுடைத்தாயினும் - தோழி செவ்-வனங் கூறுங் கடுஞ்சொற்களால் தலைவி நெஞ்சு சிதைவுடைத் தாயினும் : ஆண்டுந் தோழிமேன கிளவி.

அவை தலைவனை இயற்பழித்தலுந் தலைவியைக் கழறலு மாம்.

உ-ம்: *''கௌவையம் பெரும்பழி தூற்ற னலனழிந்து*
*பைதலஞ் சிறுநுதல் பசலை பாய*
*நம்மிகற் படுத்த அவரினும் அவர்நாட்டுக்*

1. 'உணர்வினறியாமை' என்றிருத்தல் வேண்டும்.

குன்றங் கொடியகொல் தோழி
ஒன்றுந் தோன்றா மழைமறைந் தனவே.''

இது வரைவிடைப் பருவங்கண்டு அழிந்த தோழி இயற்பழித்தது.

''கேழல் உழுத கரிப்புனக் கொல்லையுள்
வாழை முதுகாய் கடுவன் புதைத்தயருந்
தாழருவி நாடன் தெளிகொடுத்தான்[1] என்தோழி
நேர்வளை நெஞ்சூன்று கோல்.'' (ஐந்திணை எழு 11)

இஃது அவன் சூளுறவு பொய்த்ததென இயற்பழித்தது.

என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று[2] கடைஇ[3] அன்பு தலையடுத்த வன்புறைக்கண்ணும்-என்பு உருகுமாறு தலைவனாற் பிரியப்பட்ட தலைவிக்கு வழிபாடாற்றிச் சென்று தான் கூறும் மொழியை அவள்மனத்தே செலுத்தித் தலைவன் அன்பை அவளிடத்தே சேர்த்துக்கூறிய வற்புறுத்துதற் கண்ணும் :

அப்பிரிவு வரைந்துகோடற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிதலுங், காவற்குப் பிரிதலுமாம்.[4] ஆண்டு வற்புறுத்துங்கால் இயற்பழித்தும் இயற்படமொழிந்தும் பிறவாறும் வற்புறுத்தும். முன் 'செங்கடு மொழியா' லென்புழி இயற்பழித்தனவும் வற்புறுத்துதல் பயனாகக் கூறியன வென்றுணர்க.

''மறுகுபு புகலு நெஞ்ச நோயின்
றிறுகப் புல்லி முயங்குகஞ்
சிறுபுன் மாலை செயிர்ப்ப நாமே''.

இது, பிரிவிடையாற்றாத தலைவியைத் தோழி நன்னிமித்தங் கூறி வற்புறுத்தது.

---

1. தெளிகொடுத்தல் — முன்னேற்று.

2. வழிச்சென்று — வழிபட்டுச்சென்று.

3. கடைஇ—செலுத்தி

4. தலைவியின் என்பும் நெகிழும்படி தலைவன் களவிற்பிரியும் பிரிவாவன் தலைமகளை வரைந்து கொள்ளுதல் வேண்டிப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தற் குற்றுழிப்பிரிதலும், காவற்குப் பிரிதலும் ஆகும்.

ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்-தலைவன் வருகின்ற நெறியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றதனானே எய்திய கலக்கத்தின் கண்ணும்: தோழிமேன கிளவி.

இவை இரவுக்குறிவரவால் தலைவி வருந்துவளென்றது.

''கரைபொரு கான்யாற்றங் கல்லதர்'' என்பதும் அது. ''கூருகி ரெண்கின்'' என்னும் (112) அகப்பாட்டுங் காண்க.

'கலக்கம்' எனப் பொதுப்படக் கூறியவதனால் ஆற்றிடை ஏதமின்றிச் சென்றமை தோன்ற ஆண்டு ஒரு குறி செய் எனக் கூறுவனவுங் கொள்க.

''*கான மானதர் யானையும் வழங்கும்*
*வான மீமிசை யுருமுநனி உரறும்*
*அரவும் புலியும் அஞ்சுதக வுடைய*
*இரவுச் சிறுநெறி தமியை வருதி*
*வரையிழி யருவிப் பாடொடு பிரசம்*
*முழவுச்சேர் நரம்பி னிம்மென விமிரும்*
*பழவிற னனந்தலைப் பயமலை நாட*
*மன்றல் வேண்டினும் பெறுகுவை யொன்றோ*
*இன்றுதலை யாக வாரல் வரினே*
*ஏமுறு துயர நாமிவ ணொழிய*
*எற்கண்டு பெயருங் காலை யாழநின்*
*கற்கெழு சிறுகுடி யெய்திய பின்றை*
*ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு*
*வேய்பயி லழுவத்துப் பிரிந்தநின்*
*நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே''* (அகம்.318)

என்னும் நித்திலக்கோவையுள், 'வரினே ஏமுறு துயரம் நாமிவ- ணொழிய, நின்னாய்பயிர் குறிநிலை கொண்ட கோட்டை ஊதல் வேண்டுமாற் சிறிது' என்றவாறு காண்க.

காப்பின் கடுமை கையற[1] வரினும் - காத்தற்றொழிலால் உண்டாங் கடுஞ்சொற்கள் களவொழுக்கத்திடத்தே எல்லையற வருமிடத்தும் : தோழிமேன கிளவி; அவை பலவகைய.

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன் மிகுதி உளப்பட- (காதன் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கி)[2] அவளிடத்துக் காதன் மிகுதி மனத்து நிகழாநிற்க இருவகையிடத்தையும் இருவகைக் காலத்தையுந்தாம் வரைந்து கூறும் நிலைமையைத் தவிர்த்து அவன் வயின் தோன்றிய கிளவி-யையும்; பிறவும் - கூறியவாறன்றிப் பிறவாறாக அவன் வயின் தோன்றிய கிளவியையும்; நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி[3] அவன் வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ-அவன் பிறந்த நாடும் அதன் பகுதியாகிய குடியிருப்பும் அவ்வூர்க்கு இருப்பாகிய மனையும் பார்ப்பார் முதலிய நால்வகை வருணமும் அவ் வருணத்துள் இன்னவழி இவனென்றலும், ஒரு வயிற்றுப் பிறந்தோர் பலருள்ளுஞ் சிறப்பித்துக் கூறலும் பிறரின் ஒவ்வாதிறந்தனவாதல் நோக்கித் தலைவனிடத்தே தோழி கூறிய கிளவியோடே கூடி; அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்- அத் தன்மைத்தாகிய நிலைமையின் கூறுபாட்டானே வரைந்து கோடலை விரும்பியவழியும் தோழிமேன கிளவி.

'பகற்புணர் களனே' (தொல்-பொ-132), 'இரவுக்குறியே யில்' (தொல்-பொ-131), 'குறியெனப் படுவது' (தொல்-பொ-130) என்னுஞ் சூத்திரங்களாற் களனும் பொழுதும் உணர்க.

> "கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
> யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த
> சாரற் பலவின் சுளையொடு டூழ்படு
> பாறை நெடுஞ்சினை விளைந்த தேறல்
> அறியா துண்ட கடுவ னயலது
> கறிவளர் சாந்த மேறல் செல்லாது

1. கை - எல்லை; அற - கடக்க.

2, 'காதல் மிகுதியுளப்படக் களனும் பொழுதும்வரை நிலைவிலக்கி என இயைத்து உரைவரைவர்.

காதல் மிகுதி உளப்பட — அவரிடத்துக் காதல் மிகுதி மனத்து நிகழாநிற்க

3. இறப்பநோக்கி — பிறரில் ஒவ்வாது இறந்தன (மேற்பட்டன) ஆதல் நோக்கி.

*நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்*
*குறியா வின்ப மெளிதி னின்மலைப்*
*பல்வேறு விலங்கு மெய்து நாட*
*குறித்த வின்ப நினக்கெவ னரிய*
*வெறுத்த வேஎர் வேய்மருள் பணைத்தோ*
*ணிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு*
*இவளு மினைய ளாயிற் றந்தை*
*யருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்*
*கங்குல் வருதலு முரியை பைம்புதல்*
*வேங்கையு மொள்ளிணர் விரிந்தன*
*நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே.''* (அகம்.2)

'விலங்கும் எய்து நாட' வென்று அந் நாட்டினை இறப்பக் கூறி இந் நாடுடைமையிற் 'குறித்த இன்பம் நினக்கெவ னரிய' வென வரைதல் வேண்டியவாறும், வேங்கை விரிந்ததனால் தினை யறுத்தலின் இற்செறிப்புக் கூறியவாறுங் 'கங்குல் வருதலும் உரியை' யெனப் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்வாள்போற் கூறி 'நெடுவெண்டிங்களுமூர்கொண்டன்றே' யென்று அதனையும் மறுத்து வரைதற்கு நல்லநா ளெனக் கூறி வரைவுகடாயவாறுங் காண்க.

''துணை புணர்ந்தெழுதரும்'[2] என்னும் நெய்தற்கலியுட்,

*''கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்*
*தொடிநெகிழ் தோளளாத் துறப்பாயான் மற்றுநின்*
*குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ;*
*ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை*
*நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்*
*வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ;*
*திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை*
*யிகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்*
*புகழ்மைக்கட் பெரியதோர்புகராகிக் கிடவாதோ''*
(கலி.135)

என இவை ஒழுக்கமும் வாய்மையும் புகழும் இறப்பக் கூறியன. குடிப்பிறந்தார்க்கு இம் மூன்றுஞ் சிறப்பக் கூறல் வேண்டும். ஏனைய வந்துழிக் காண்க.

இன்னும் 'அனைநிலைவகை' என தனாலே தலைவி யாற்றாமை கண்டு வரைவுகடாவவோவென்று தலைவியைக் கேட்டலுஞ் சிறைப்புறமாகவுஞ் சிறைப்புறமன்றாகவும் தலைவி யாற்றாமை கூறி வரைவுகடாவுவனவும் பிறவும் வேறுபட வருவனவும் இதனான் அமைக்க.

ஐயச் செய்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக் கொடுப்பினும் - தலைவிக்குக் கூட்டம் உண்டு கொலென்று தாய் ஐயுற்றவழி அவ் வையப்பட்ட செய்கையைத் தாய்க்கு எதிரேநின்று மறுத்து அதனைப் பொய்யெனவே கருதும் படி அவள் மனத்தினின்றும் போக்கிப் பொய்யல்லன சில சொற்களை மெய்வழிப்படுத்து அறிவுகொள்ளக் கொடுப்பினும் ;

உ-ம்: ''உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
*பெயலான் றவிந்த தூங்கிருள் நடுநாள்*
*மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்*
*பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்*
*வரையிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி*
*மிடையூர் பிழியக் கண்டனென் இவளென*
*அலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்*
*சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து*
*தாம்வேண் டுருவின் அணங்குமார் வருமே*
*நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்*
*கனவாண்டு மருட்டலும் உண்டே இவள்தான்*
*சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர*
*மன்ற மராஅத்த கூகை குழறினும்*
*நெஞ்சமிழ்ந் தரணஞ் சேரும் அதன்றலைப்*
*புலிக்கணத் தன்ன நாய்த்தொடர் விட்டும்*
*முருக னன்ன சீற்றத்துக் கடுந்திறல்*
*எந்தையும் இல்ல னாக*
*அஞ்சுவள் அல்லளோ இவளிது செயலே.''* (அகம். 158)

இது மிடையே ஏறி இழிந்தாளென்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவுமருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய்யென மாற்றி அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது.

இது சிறைப்புறமாகக் கூறி வரைவு கடாதலின் அதன்பின் வைத்தார்.

அவன் விலங்குறினும்[1]-தன்னானுந் தலைவியானும் இடையீடு படுதலன்றித் தலைவனாற் கூட்டத்திற்கு இடையூறு தோன்றினும்; அது வரைவிடைப் பொருட்பிரிவும், வேந்தற்குற்றுழியும், காவற் பிரிவுமாம்.

களம்பெறக் காட்டினும்[2] - காப்பு மிகுதியானுங் காதன் மிகுதியானுந் தமர் வரைவு மறுத்ததினானுந் தலைவி ஆற்றாளாய வழி இஃதெற்றினா னாயிற்றெனச் செவிலி அறிவரைக் கூஉய் அவர் களத்தைப்பெறாநிற்கத் தலைவியை அவர்க்கு வெளிப்படக் காட்டினும்.

களமாவது கட்டுங் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமுமாம்.

பிறன்வரைவு ஆயினும்[3] - நொதுமலர் வரையக் கருதிய வழித் தலைவி சுற்றத்தார் அவ் வரைவினை ஆராயினும்; தோழி தலைவற்குந் தலைவிக்குங் கூறும்.

உ-ம்: *''கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை*
*முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்*
*கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென*
*நெடுந்தேர் பண்ணி வரலா னாதே*
*குன்றத் தன்ன குவவுமண னீந்தி*
*வந்தனர் பெயர்வர்கொல் தாமே யல்கல்*
*இளையரு முதியருங் கிளையுடன் குழீஇக்*
*கோட்சுறா வெறிந்தெனச் சுருங்கிய நரம்பின்*

---

1. அவன் விலங்குறுதல் — தலைவனால் தடையுண்டாதல்.

2. களம்பெறக்காட்டுதலாவது, செவிலியின் வேண்டுகோளால் கட்டும் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமும் ஆகிய களத்தை அறிவர் முதலியோர் பெறாநிற்கத் தலைவியை அவர்க்கு வெளிப்படக் கொணர்ந்து நிறுத்தல்.

3. பிறன் வரைவு ஆயினும் — நொதுமலர் வரையக் கருதிய வரைவினை ஆராயுமிடத்தும்.

*முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்*
*வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்*
*திரையெழு பௌவ முன்னிய*
*கொலைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே.''*
(நற்றிணை, 207)

இது நொதுமலர் வரைவு மலிந்தமை தோழி சிறைப்புறமாகக் கூறியது. 'பாற்பட்டனள்' எனத் தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள்.

*''இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்*
*பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு*
*கண்ணகன் தூமணி பெறூஉ நாடன்*
*அறிவுகாழ்க் கொள்ளு மளவைச் செறிதொடி*
*எம்மில் வருகுவை நீயெனப்*
*பொம்ம லோதி நீவி யோனே.''* (குறுந். 379)

இது தாய் கேட்பத் தோழி தலைவிக்குக் கூறியது.

அவன் வரைவு மறுப்பினும்-தலைவி சுற்றத்தார் தலைவற்கு வரைவு மறுத்தவழியும் : தோழி அறத்தொடு நிலையாற் கூறும்.

தலைவிக்குக் கூறுவனங் கொள்க.

*''அம்ம வாழி தோழி நம்மூர்ப்*
*பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனர் கொல்லோ*
*தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்''* (குறுந். 146)

இது தமர் வரைவு மறுப்பரோவெனக் கவன்றாட்குத் தோழி கூறியது.

*''நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்*
*மயிர்வார் முன்கை வளையுஞ் செற்றும்*
*களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி*
*யெழுதரு மழையிற் குழுமும்*
*பெருங்க னாடன் வருங்கொ லன்னாய்.''* (ஐங்குறு. 218

இது, தமர் வரைவு மறுத்துழி ஆற்றாத தலைவிக்குத் தோழி, தீயகுறி நீங்கி நற்குறி தனக்குச்செய்யக்கண்டு கடிதின் வரைவரெனக் கூறியது.

முன்னிலை அறன் எனப்படுதல் என்று இருவகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்[1] (அறனெனப்படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப்பினும்) - அறனென்று சொல்லப்படுந் தன்மை இருவர் கண்ணுங்குற்றந்தீர்ந்த எதிர்ப்பாடென்று செவிலியிடத்தே கூறி அக் கிளவியை நற்றாயிடத் துஞ் செலுத்தினும்;

என்றது, புனறருபுணர்ச்சியும், பூத்தரு புணர்ச்சியுங், களிறு தரு புணர்ச்சியும் போல்வன செவிலிக்குக் கூறி அவள் நற்றாய்க்குக் கூறுதலை நிகழ்த்துவித்தலாம். எனவே, அவள் தந்தைக்கு தன்னையர்க்கும் உணர்த்துதலும் அதனை மீண்டு வந்து தலைவிக்கு உணர்த்துதலும் பெற்றாம். அவ்வறத்தொடு நிலை எழுவகைய(207) எனப் பொருளியலுட் கூறுப.

உதாரணம் : ''காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்'' (கலி.39) என்னுங் குறிஞ்சிக்கலியுள், ''தெருமந்துசாய்த்தார் தலை'' எனப் புனறருபுணர்ச்சியால் தோழி செவிலிக்கு அறத்தொடுநிற்பச் செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்ப அவள் ஏனையோர்க்கு அறத்தொடு நின்றவாறு காண்க.

வரைவு உடன்பட்டோற் கடாவல் வேண்டினும் - தலைவி தமர்வரைவுடன்படத் தானும் வரைவுடன் பட்ட தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி இனி நீட்டிக்கற்பாலை யல்லையெனக் கடுஞ்சொற் கூறி வரைவுகடாவல் வேண்டிய இடத்தும்.

---

1. 'முன்னிலை அறனெனப்படுதல் என்றுஇருவகை' என்பதற்கு, 'முன்னிலை வகையானாதல் அறத்தொடு நிலைவகையானாதல் இவ்விருவகையானும்' எனவும், 'புரைதீர் கிளவி' என்பதற்கு, 'தலைவற்கும் தலைவிக்கும் தனக்கும் குலத்திற்கும் குற்றந்தீர்ந்த கிளவி' எனவும் பொருள் வரைந்தார் இளம்பூரணர்.

'அறனெனப்படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலை என்று தாயிடைப் புகுப்பினும்' என்று சொற்களை மாற்றி 'அறனென்று சொல்லப்படுந்தன்மை இருவர் கண்ணுங் குற்றந்தீர்ந்த எதிர்ப்பாடு என்று செவிலியிடத்தே கூறி அக்கிளவியை நற்றாயிடத்துஞ் செலுத்தினும்' எனப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர்.

ஆங்கு அதன் தன்மையின் வன்புறை உளப்பட - அங்ஙனங் கடாவியவழி அவ் வரைந்துகோடன் மெய்யாயினமையின் வதுவை முடியுமளவும் ஆற்றுவதற்கு வற்புறுத்துக் கூறுதல் உளப்பட;

தன்மை, மெய்ம்மை. எனவே, முன் பொய்ம்மையான வற்புறுத்தலும் பெற்றாம்.

உ-ம்: *''நெய்கனி குறும்பூழ் காய மாக*
*ஆர்பதம் பெறுக தோழி யத்தை*
*பெருங்கன் னாடன் வரைந்தென வவனெதிர்*
*நன்றோ மகனே யென்றனெ*
*னன்றே போலு மென்றுரைத் தோனே.''* (குறுந்.389)

இது, தலைவன் குற்றேவன்மகனான் வரைவுமலிந்த தோழி தலைவிக்குரைத்தது.

*''கொடுச்சி காக்கு மடுக்கற் பைந்தினை*
*முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி*
*கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி*
*அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்*
*திரையணற் கொடுங்கவு ணிறைய முக்கி*
*வான்பெய னனைந்த புறத்த நோன்பியர்*
*தையூ ணிருக்கையிற் றோன்று நாடன்*
*வந்தனன் வாழி தோழி யுலகங்*
*கயங்க ணற்ற பைதரு காலைப்*
*பீளொடு திரங்கிய நெல்லிற்கு*
*நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே.''*

நற்றிணை, 22.

இதனுள், தினைவிளைகாலம் வதுவைக் காலமாயினும் வம்பமாரி இடையிடுதலின்றி யான் கூறிய வரைவு பொய்த்தனரே னும் இன்று மெய்யாகவே வந்தனரென்றாள்.

'குன்றிற் றோன்றுங் குவவுமணலேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
தண்டாரகலம் வண்டிமிர் பூதப்
படுமணிக் கலிமா கடைஇ
நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉ மாறே.'' நற்றிணை, 235

இது, தலைவன் வரைவொடு வருகின்றமை காண்கம் வம்மோ வென்றது.

பாங்குற வந்த நாலெட்டும் - பாங்கியர் பலருள்ளும் பாங்காந்தன்மை சிறப்பக் கூறிய முப்பத்திரண்டும்; நாலெட்டுமென உம்மை விரிக்க; வகையும்[1] இக்கூற்றுக்களிலே வேறுபட வருவனவும்; தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன - பொறுத்தற்கரிய சிறப்பினையுடைய தோழியிடத்தன (எ - று).

எனவே, ஒன்றிய தோழிக்கன்றி ஏனையோர்க்கு இக்கூற்று இன்றென்றான், தாய்த்தாய்க் கொண்டுவருஞ் சிறப்பும்,[2] இருவர் துன்பமுந் தான் உற்றாளாகக் கருதுஞ் சிறப்பும் உடைமையின் 'தாங்கருஞ் சிறப்பு' என்றான். உரைத்துழிக் கூட்டத்தோடே அகற்சியும் என்றலும் ஊட்டலும் உரைத்தலும் அச்சுறுத்தலும் எஞ்சாமற் கிளந்த இருநான்கு கிளவியும் பாங்குற வந்த என்க. நாட்டத்தின் கண்ணும் எஞ்சாமற் கிளந்த என்க. என்றது, ஆராய்ச்சியுடனே இவ்வெட்டுங் கூறுமென்றான். பெயர்ப்பினும் ஒழிப்பினும் உரைத்துழிக் கூட்டத்தோடு எஞ்சாமற் கிளந்த என்க. ஏனைப்பொருள்கள் ஏழனுருபும் வினையெச்சமுமாய் நின்றவற்றைப் பாங்குற வந்த என்பதனோடு முடித்து அப்பெயரெச்சத்தினை நாலெட்டென்னும் பெயரோடு முடித்து அனைத் தோழிமேனவென முடிக்க.

இனி 'வகை' யாற் கொள்வன வருவாறு:

''அன்னை வாழிவேண் டன்னை நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்
எந்தோள் துறந்த காலை யெவன்கொல்
பன்னாள் வருமவ னளித்த பொழுதே.'' (ஐங்குறு. 109)

1. நாலெட்டுவகையும் என்புழி, நாலெட்டும் வகையும்என உம்மை விரித்தாராகலின் 'வகை' என்பதனாற் கொள்வன வருமாறு என அவற்றுக்கு உதாரணங் காட்டுகின்றார்.

2. தாய்த்தாய்க் கொண்டுவரும் சிறப்பாவது தன் தாய்க்கு அவள் தாயும், அவள் தாய்க்கு அவள் தாயும் ஆக இவ்வாறு பல தலைமுறையாகத் தலைவியி குடியொடு தொடர்ந்துவரும் தோழியின் நட்புரிமைச்சிறப்பாகும்.

இஃது அறத்தொடு நின்றபின் வரைவான் பிரிந்து நீட்டித்துழி ஐயுற்ற செவிலி அவன் நும்மைத் துறந்தான் போலும் நுங்கட்கு அவன் கூறியதிறம் யாதென்றாட்குத் தோழி கூறியது.

*"அன்னை வாழிவேண் டன்னை கழனிய*
*முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்*
*எந்தோள் துறந்தன னாயின்*
*எவன்கொன் மற்றவ னயந்த தோளே."* (ஐங்குறு. 108)

இஃது அறத்தொடு நின்றபின் வரைவுநீட மற்றொரு குல மகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குக் கூறியது.

*"அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு*
*ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்*
*இவட்கமைந் தனனாற் றானே*
*தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே."*

(ஐங்குறு. 103)

இது. வதுவைநிகழாநின்றுழித் தாய்க்குக் காட்டித் தோழி கூறியது.

*"கன்னவி றோளான் கடிநாள் விலக்குதற்*
*கென்னை பொருணினைந்தா ரேந்திழாய் — பின்னர்*
*எமரேற்றுக் கொள்ளுமென் றஞ்சினே னஞ்சார்*
*நமரேற்றுக் கொள்ளாத ஞான்று."*

இது, சுற்றத்தார் பொருள்வேண்டி மறுத்தாரென்றது.

*"நொதுமலாளர் கொள்ளா ரிவையே*
*யெம்மொடு வந்து கடலாடு மகளிரும்*
*நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்*
*உடலகங் கொள்வோ ரின்மையிற்*
*றொடலைக் குற்ற சிலபூ வினரே."* (ஐங்குறு. 187)

இது, கையுறை மறுத்தது.

*''அம்ம வாழி தோழி நம்மலை*
*வரையா மிழியக் கோட னீடக்*
*காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந்*
*தண்பனி வடந்தை யச்சிரம்*
*முந்துவந் தனர்நங் காத லோரே.''* (ஐங்குறு 223)

இது, வரைவிடைப் பிரிந்தோன் குறித்த பருவத்திற்குமுன் வருகின்றமை யறிந்த தோழி தலைவிக்குக் கூறியது (உ௪)

**ஆய்வுரை**

களவொழுக்கத்தில் தோழி உரையாடுதற்குரிய பொருள் வகை யெல்லாவற்றையும் தொகுத்துக் கூறுவது இந்நூற்பாவாகும்.

(இ-ள்) நறுமணம், தோற்றப்பொலிவு, ஒழுக்கம். உணவு, செய்வினை மறைத்தல், செலவு, பயில்வு எனத் தலைவி தலைவனை எதிர்ப்படுதற்கு முந்துற்ற நிலைமையை மனத்துள் கொண்டுவரும் எழுவகையுணர்வுகளாலும் தலைவிக்குக் கூட்டமுண்மை யறிந்த பின்னர், மெய்ம்மையாகவும் பொய்ம்மையாகவும் வழிபாட்டு நிலையிற்பிழையாது பலவாகி வேறுபடும் பொருள்களையுடைய சொற்களைக் கூறி ஆராய்தற்கண்ணும், தன்பாற்குறையிரத்தற் பொருட்டு எதிர்ப்பட்ட தலைமகனைப் பிறரறியாவாறு அவனது பெருமையினை எடுத்துரைத்து அவ்விடத்தைவிட்டு நீங்குமாறு செய்தற்கண்ணும், உலகத்தார் மணஞ்செய்துகொள்ளுமாறு வரைந்துகொள் எனக் கூறுமிடத்தும், தலைவியை அணுகுதற்கு இயலாமையைக் கூறி அகற்றுமிடத்தும், நின்னாற் காதலிக்கப்பட்டாளுக்கு நின் குறையினை நீயே யறிவுறுத்தி அதன்பின் என்னிடம் வருக எனக் கூறுதலும், நின்னால் விரும்பப்பட்ட அவள் நின் காதலையுணரும் முதுக்குறைவு பெறாத பேதைப் பருவத்தினள் எனக் கூறுதலும், முன்னர் அவளைக் கூடியவாறே அவளையடைக எனக் கூறி முறைமைப்பட ஒழுகுமாறு அறிவுறுத்தி நிறுத்தலும், இக்களவொழுக்கம் தந்தை தன்னையர்க்குப் புலனாயின் யாதாய் விளையுமோ என அஞ்சியவளாய் அவ்வச்சத்தினைத் தலைவனுக்கு அறிவுறுத்தலும், தன்னாற் காதலிக்கப்பட்டாள் இன்ன தன்மையள் எனத் தலைவன் கூறியவழி அவளும் நின் தன்மையளே என அவளோடு அவனை ஒப்புமை தோன்றச் சேர்த்துரைத்தலும் என ஒழியாது கூறப்பட்ட எண்வகைக் கூற்றுக்களும், பொய்யான நிகழ்ச்சிகளைப் புனைந்து கூறிக்கொண்டு தன்பாற் குறையிரந்து நின்ற தலைமகனை(த் தலைமகள் இகழாது) பொறுத்தகாரணமாகிய இருவரது பேரன்பினை எண்ணியகாலத்தும்,

மேற்சொல்லப்பட்ட மூவகையானும் தலைமகளொடு தலைவனுக்குக் கூட்ட முண்மையுணர்ந்தபின் தலைவன்பாற் பணிவுடன் ஒழுகு-மிடத்தும், தலைமகன்பாற் குறைநேர்ந்தாள் அவனது குறைநயப்-பித்தல் வேண்டித் தலைமகள்பாற் செல்லுதற்கண்ணும், தான் குறிப்பால் உணர்த்தும் குறைநயப்பிற்குத் தலைமகள் நாண்மிகுதியாற் கரந்தவுள்ளத்தினளாய் உடம்படாதாள் போன்று ஒதுங்கிய நிலையில் தன்னோடும் அவளோடும் குறிப்பினாற் பொருந்திய செய்திகளைக் கட்டிக் கூறி வழிபட்டுமுயலும் பலவேறு பகுதிக்கண்ணும், தலைவி குறைநயந்தமை பெற்றவழி அதனைத் தலைமகனுக்கு உணர்த்து மிடத்தும், எண்ணுதற்கு அரிய பலவாகிய நகைக்குறிப்புடைய உரையாடல்களைக் கருதிய பகுதியிலும், தலைவன் தலைவியுடன் அளவளாவுதலை விரும்பியவிடத்தும், தன்னுள்ளம் விரும்பாத பிரி-வினை வேண்டிய காலத்தும், தலைவனை விருந்தாக ஏற்றுப் போற்றுவதனைத் தலைவி விரும்பியகாலத்தும், தலைவனொடு தலைவி கூடியவழி அதனையறியாதாள் போன்று பழகும் அறிவு-மடம்பட்ட சிறப்பின் கண்ணும், தலைவியைத் தலைவன்பாற் பாது-காப்புக் கூறிக்கொடுக்கும் நட்பின் பகுதியிலும், தலைவியின்பாற் பேரன்புடைய தலைவனைக் குறித்து(த் தன் மனத்தகத்தே நன்றாற்-றலாகிய) செம்மையும் (அவன் தலைவியை விரைவில் மணந்து கொள்ளாமை குறித்துப் புறத்தே) கடுமையும் வாய்ந்த சொற்களால் இயற்பழித்தவழித் தலைவியின் நெஞ்சம் சிதைவுற்று வருந்திய நிலையிலும், என்பும் உருகுமாறு தலைவனது பிரிவினால் வருந்-தும் தலைவியின் பாற்சென்று தான் கூறுவதனை அவளது உள்ளம் ஏற்றுக் கொள்ளும்படி செலுத்தித் தலைவனது அன்பு தலை-மகளிடத்ததாக வற்புறுத்துமிடத்தும், தலைவன் வரும் வழியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றமையால் நேர்ந்த கலக்கத்தின் கண்-ணும், தலைமகளை இற்செறித்துக் காத்தலின்கடுமை எல்லைகடந்த-மையாலும், பகற்குறி இரவுக்குறி என்னும் இடமும் பகலும் இரவுமா-கிய பொழுதும் ஆகத்தாங்கள் வரைந்து கூறும் நிலைமையை விலக்கி, தலைவன் தலைவியிருவரிடையே யமைந்த காதல் மிகுதியுட்படத் தலைமகனுக்குரிய நாடு, ஊர், மனை, குடியுயர்வு, பிறந்தயாண்டு, பெற்றுள்ள சிறப்பு என்பன பிறரின் ஒவ்வாது மேம்பட்டனவாதல் நோக்கித் தலைவனைக் குறித்துத் தோன்றிய கூற்றுக்களோடு கூட்டி அத்தன்மைத்தாகிய நிலைமையின்கூறுபாட்டினாலே மணஞ்செய்தலை வேண்டியும், தலைவனொருவனோடு தலைவிக்குக் கூட்டம் நேர்ந்-திருக்குமோ என ஐயுறுதற்குக் காரணமாகிய நிகழ்ச்சியைக்

கண்ணுற்று வினவிய செவிலியாகிய தாய்க்கு எதிர் நின்று அச்செய்தியைப்பொய்யென மறுத்து மெய்ம்மையான நெறியில் நிகழ்தற்குரிய வேறோர் நிகழ்ச்சியாக அவள் நம்பும்படி படைத்துக் காட்டியும், தலைவி மெலிந்து வேறுபட்ட காலத்து அவளது மெலிவுதீர அறிவரை வினாவிக்கட்டும்கழங்கும் இட்டுக் குறி பார்க்குமிடத்தும், வெறியாட்டு நிகழ்த்துமிடத்தும் அயலானொருவனுக்குத் தலைவியை மணஞ்செய்து கொடுத்தலைச் சுற்றத்தார் ஆராயுமிடத்தும், தலைவனுக்கு மணஞ் செய்து கொடுத்தலைச் சுற்றத்தார் மறுத்தநிலையிலும், முன்னிலையாக்கி மொழிதல் அறத்தொடு நிற்றல் என்னும் இருவகையினாலும் குற்றந்தீர்ந்த சொற்களைச் செவிலிக்குக் கூறி அதனை நற்றாய் செவியிற் புகும்படி செய்தற்கண்ணும், தலைவியின் சுற்றத்தார் மகட் கொடுப்பதாக உடன்பட்ட தலைவனை விரைந்து மணந்து கொள்க எனத் தூண்டுதற் கண்ணும், இவ்வாறு வரைவுடம்பட்ட தன்மையினை எடுத்துக் கூறித் தலைவியை ஆற்றியிருக்கும் வண்ணம் வற்புறுத்தற் கண்ணும் எனத் தலைவியுடன் தனக்குற்றதாகிய பாங்காந்தன்மை சிறப்புற வந்த முப்பத்திரண்டு வகைப் பொருண்மையும் பிறரெவராலும் மேற்கொள்ளுதற்கரிய பெருஞ்சிறப்பினையுடைய தோழியிடத்தன எ—று.

இந்நூற்பாவிற் குறிக்கப்பட்ட முப்பத்திரண்டு பொருண்மைகளாவன :

1. நாற்ற முதலிய உணர்ச்சியேழினும் உணர்ந்தபின் மெய்யினும் பொய்யினும் வழிநிலைபிறழாது பல்வேறு கவர்பொருள் நாட்டம், இது பாங்கி மதியுடன்பாட்டில் முன்னுறவுணர்தலின் பாற்படும்.

2. குறையுறற்கு எதிர்ப்பட்ட தலைவனைப் பெருமையிற்பெயர்த்தல்.

3 உலகுரைத்து ஒழித்தல்.

4. அருமையின் அகற்றல்.

5. அலர் அறிவுறுத்துப் பின்வா என்றல்.

6. பேதைமையூட்டல்.

7. முன்னுறு புணர்ச்சி முறை நிறுத்து உரைத்தல்.

8· அஞ்சி அச்சுறுத்தல்,

9. உரைத்துழிக் கூட்டம். இவை எட்டும் குறையுறவுணர்தலின் பாற்படும்.

10. வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணம் குறித்தல்: இஃது இருவரும் உள்வழி அவன் வரவுணர்தலின் பாற்படும்

11. புணர்ந்தபின் அவன்வயின் வணங்கல்.

12. குறைந்து அவட்படர்தல்: அஃதாவது குறைநயப்பச் சேறல்.

13. தன்னொடும் அவளொடும் முன்னம் முன்தனைஇப் பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கு: அஃதாவது குறைநயப்புவகை.

14. நன்னயம்பெற்றுழி நயம்புரி இடம்: அஃதாவது தலைமகள் குறை நயந்தமை தலைவனுக்குக் கூறல்.

15. எண்ணரும் பல்நகை கண்ணிய வகை: அஃதாவது அலராகு மென்று கூறுதல்.

16. தலைவன் புணர்ச்சி வேண்டிய நிலை.

17. புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டிய நிலை.

18. வேளாண்பெருநெறி வேண்டிய நிலை.

19. புணர்ந்துழியுணர்ந்த அறிமடச் சிறப்பு: அஃதாவது அல்லகுறிப்படுதல்.

20. ஓம்படைக் கிளவி.

21. செங்கடுமொழியால் அன்பு தலையடுத்த வன்புறை: அஃதாவது தலைவனை இயற்பழித்துத் தலைமகளை வற்புறுத்தல்.

22. ஆறின்னாமை அறிவுறுகலக்கம்: அதாவது தலைவன் வரும் வழி பல்வேறு தீமைகளையுடையது என்றல்.

23. காப்பின்மிகுதி கையறவுரைத்தல்: அஃதாவது தலைமகளைப் பெற்றோர் இற்செறித்துக் காக்கும் காவல்மிகுதியினைக் கூறுதல்.

24. களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதல் மிகுதி கூறல்

25. நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி அவன் வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ அனைநிலை வகையான் வரைதல் வேண்டுதல்.

26. ஐயச்செய்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக்கொடுத்தல்.

27. அவன் விலங்குறுதல்: அஃதாவது தலைவி மெலிந்து வேறுபட்டு வருந்தும் நிலையில் அம்மெலிவுக்குரிய காரணம் யாது என ஆராய்ந்து அறியும் பொருட்டுக் கட்டும் கழங்கும் இட்டுக் குறிபார்க்கும் நிலையில் அவள் பொருட்டுக் குறிபார்த்தலை விலக்குதல்.

28. களம்பெறக் காட்டுதல்: தலைமகளது நோய் தணித்தல் வேண்டி வேலனைக் கொண்டு வெறியாடப் புக்குழி அவ்வெறியினை விலக்கல்.

29. பிறன் வரைவு ஆய்தல்: அஃதாவது தலைமகளைப் பிறனொருவனுக்கு மணம் செய்து கொடுத்தலைப் பெற்றோர் ஆராயுமிடத்துப் பிறன் வரைவு மறுப்பித்தல்.

30. அவன் வரைவு மறுத்தல்: அஃதாவது தலைவனுக்கு மணஞ்செய்து கொடுத்தலைச் சுற்றத்தார் மறுத்த நிலையில் தலைமகனுக்குத் தலைமகளை மணஞ்செய்து கொடுத்தற்குப் பெற்றோரை உடன்படச் செய்தல். மேற்குறித்த நான்கிடங்களிலும் முன்னிலை, அறனெனப்படுதல் என்று இருவகைக் குற்றந் தீர்ந்த மொழிகளாற் செவிலியாகிய தாய் வழியாக நற்றாய் செவியிற் புகுமாறு தோழி அறத்தொடு நிற்பாள்.

31. வரைவுடம்பட்டோற் கடாவல் வேண்டுதல்: அஃதாவது தம் சுற்றத்தார் வரைவுக்கு உடன்பட்ட செய்தியைத் தலைவனுக்கு உணர்த்தல்.

32. ஆங்கு அதன் தன்மையின் வன்புறை: அவ்வாறு தான் விரும்பிய தலைவனுக்குச் சுற்றத்தார் வரைவுடம்பட்டமை கூறித் தலைவியை வருத்தம் தணிக என வற்புறுத்தி ஆற்றுவித்தல்.

மேற்குறித்த முப்பத்திரண்டு பொருள் வகைபற்றியும் தோழி கூற்று நிகழ்த்தற்கு உரியள் என்பதாம்.

உ௫. களவல ராயினுங் காமமேற் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்
ஆடிய சென்றுழி அழிவுதலை வரினும்
காதல் கைம்மிகக் கனவின் அரற்றலுந்
தோழியை வினாதலுந் தெய்வம் வாழ்த்தலும்
போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவின் எச்சத்து மகணெஞ்சு வலிப்பினும்
இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்
இன்ன வகையிற் பதின்மூன்று கிளவியொடு
அன்னவை பிறவுஞ் செவிலி மேன.

**இளம்பூரணம்**

என்றது மேற் றலைவற்குந் தலைவிக்குந் தோழிக்குமுரிய கிளவி-யெல்லாங் கூறி இனிச் செவிலிக்குரிய கிளவி யுணர்த்துதல் நுதலிற்று.

களவலராதல் முதலாகச் சொல்லப்பட்ட பதின்மூன்று கிள-வியும் அத்தன்மைய பிற கிளவியும் களவுக்காலத்துச் செவிலியின் மேலன என்றவாறு. இவற்றுள் தோழியை வினாதலென வேறொரு கிளவியாக ஓதினாராயினும் அதன் முன்பு நிகழும் கிளவியெல்லாம் அவளை வினாதற்குக் காரணமாதலின் அவை யீண்டுப் பதின்-மூன்றென வெண்ணப்பட்டன வென்க.

(இ- ள்.) களவல ராயினும் என்பது - தலைவன் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகி அலர் தூற்றப்பட்ட விடத்துத் தோழியை வினாவும் என்றவாறு.

காம மேற் படுப்பினும் என்பது — தலைவிமாட்டுள்ளதாகிய வேட்கை அளவிறப்பினும் தோழியை வினாவும் என்றவாறு.

"மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு." (குறள். 1273)

அளவு மிகத் தோன்றினும் என்பது — பெதும்பைப் பருவத்-தளாகிய தலைவி புணர்ச்சியாற் கதிர்த்து வீங்குகின்ற முலையும் புதிதுற்ற கவினுங் கண்டவிடத்துந் தோழியை வினாவும் என்றவாறு.

"கண் நிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண் நிறைந்த நீர்மை பெரிது" (குறள். 1272)

தலைப்பெய்து காணினுமென்பது தலைவனொடு தலைவி-
வியைத் தலைப்பெய்து காணினும் வினாவும் என்றவாறு.

பெய்தென்பதனைப் பெயவெனத் திரிக்க.

"...........................................
மிடையூர் பிழியக் கண்டனென்"

என வரும்.

கட்டினும் என்பது — கட்டு வைப்பித்தவழியும் அவர்சொற்-
கேட்டுத் தோழியை வினாவும் என்றவாறு.

கழங்கினும் என்பது — கழங்கு வைத்துழியும் அவர்சொற்-
கேட்டுத் தோழியை வினாவும் என்றவாறு.

வெறியென விருவரு மொட்டிய திறத்தாற் செய்திக்கண்ணும்
என்பது-செவிலியும் நற்றாயும் பொருந்தியபக்கத்துக் கண்டு வெறி-
யாடுவா மென்றவழித் தலைவி செய்திக்கண்ணுந் தோழியை வினாவும்
என்றவாறு.

ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும் என்பது — வெறியாடிய
சென்றவழி அதற்கழிவுறுமிடத்து வரினும் என்றவாறு.

அஃதாவது: "கடவுட் கற்சுனை" எனத் தொடங்கும் நற்-
றிணைப் பாட்டில்,

"நின்னணங் கன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே" (நற்றிணை, 34

எனத் தோழி கூறுதல். அவ்வாறுகூறியவழியுங் காரண மென்னை
யென வினாவும்.

காதல் கைம்மிகக் கனவி னரற்றலும் என்பது — காதன்
மிகுதியால் தலைவனை யுள்ளிக் கனவின்கண் அரற்றுதற்கண்ணும்
வினாவும்

தோழியை வினாதலும் என்பது—இவை நிமித்தமாகத் தோழியை வினாதலும் என்றவாறு. எனவே களவலராதல். முதற் கனவினரற்ற லீறாக ஓத்ய வொன்பது கிளவியும் தோழியை வினாதற்பகுதி. அவை நிகழாதவழி வினாதலில்லை. அதனால் தோழியை வினாத-லென ஒரு கிளவியாக எண்ணற்க.

தெய்வம் வாழ்த்தலும் என்பது — இவ்வாறு பட்டதெனத் தோழி யுரைத்தவழி யிதனை நற்றாய்க்கும் தந்தைக்கும் கூறலாற்றா-தாள் தெய்வத்தை வேண்டிக்கோடல்.

போக்குடன் அறிந்தபின்...நிற்றற் கண்ணும் என்பது — தலைவனுடன் போயினாள் என்று அறிந்தவழித் தானுந் தோழியோடு கெழுமி இல்லத்தின்க ணிறுத்தற் கண்ணும் என்றவாறு.

*"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு*
*தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய*
*நாலூர்க் கோசர் நன்மொழி போல*
*வாயா கின்றே தோழி ஆய்கழற்*
*சேயிலை வெள்வேல் விடலையொடு*
*தொகுவளை முன்கை மடந்தை நட்பே."* (குறுந். 15)

பிரிவி னெச்சத்து மகணெஞ்சு வலிப்பினும் என்பது — தலைவன் வரையாது பிரிந்தவழி யொழிந்த தலைமகள் அலராகுதலு மின்றி வேறுபாடுமின்றி ஒருமனைப்பட்டிருந்த வுள்ளக்கருத்தை யறிந்த வழியும் என்றவாறு. வலித்தல் என்பது தெளிதல்.

இருபாற் குடிப்பொருளியல்பின்கண்ணும் என்பது — தலைவன் குடிமை தன் குடிமையோ டொக்குமென வாராய்தற்கண்ணும் என்றவாறு.

குடியென்னாது பொருள் என்றதனால் பொருளுங் குணமும் ஆயப்பெறு மென்றவாறு.

அன்னவை பிறவும் என்றதனான்,

*"நாற்றம் பெற்று நிலைப்புக் காண்டல்*
*உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்*
*கண்துயில் மறுத்தல் கோலஞ்செய் யாமை"*

முதலாயின கொள்க. இவையும் வினாதற்கேதுவாம். இவற்றிற் கெல்லாஞ் செய்யுள் வந்தவழிக் காண்க. (25)

நச்சினார்க்கினியம்

இது, செவிலிகூற்று[1] நிகழுமாறு கூறுகின்றது. அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவுந், தலைவியுந் தோழியுங் கொண்டு கூற்றாகக் கூறப்படுவனவுமென இருவகையவாம்; இக்கூறப்பட்ட பதின்மூன்று கிளவியும் அவைபோல்வன பிறவுஞ் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியும் அவள் கூற்றாய்க் கொண்டெடுத்து மொழியப்படுவனவுமாய்ச் செவிலிக் குரியவாமென்றவாறு. 'இன்னவகை' யென்றார், தன் கூற்றுங் கொண்டு கூற்றுமாய் நிகழுமென்றற்கு.

(இ-ள்.) களவு அலர் ஆயினும்-களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய் அலர் தூற்றப்படினும்:

உ-ம்: ''பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்க ணுவறலு நுவல்ப
அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னவென்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.'' (குறுந்.89)

இது செவிலி தானே கூறியது.

''அம்ம வாழி தோழி நென்னல்
ஓங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென மொழிய வென்னை
யதுகேட் டன்னா யென்றன ளன்னை
பைபைய வெம்மை யென்றனென் யானே.'' (ஐங்குறு.113)

இதனுள், பெண்டென்றதனைக் கேட்டு அன்னாயென்றனள் அன்னையென அலர் தூற்றினமை கண்டு செவிலி கூறிய கூற்றினைத் தலைவி கொண்டுகூறியவாறு காண்க.

காமம் மெய்ப்படுப்பினும்-தலைவி கரந்தொழுகுங் காமந்தானே அக் களவினை நன்றாயுந் தீதாயும் மெய்க்கண் வெளிப்படுப்பினும்:

1. செவிலி கூற்று, அவள்தானே கூறும் கூற்றும், தலைவியும் தோழியும் கொண்டெடுத்து மொழியும் கொண்டு கூற்றும் என இருவகைப்படும்.

உ-ம்: "மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு." (குறள், 1273)

இது, காமத்தால் திகழ்ந்த பொலிவினைச் செவிலி தானே கூறியது.

அளவு மிகத் தோன்றினும்-கண்ணுந் தோளும் முலையும் பிறவும் புணர்ச்சியாற் கதிர்த்துக் காரிகை நீரவாய் அவளிடத்து அளவை மிகக்காட்டினும் :

உ-ம்: "கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது." (குறள், 1272)

இது, கதிர்ப்புக்கண்டு செவிலி தானே கூறியது.

"பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
ஆகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி
யெல்லிவள் பெரிதெனப் பன்மாண் கூறிப்
பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள்.....................
..................................................
தாரரார் மார்பநீ தணந்த ஞான்றே." (அகம். 150)

இது, தோழி கொண்டு கூறியது.

தலைப்பெய்து காணினும் - இருவர்க்குங் கூட்டம் நிகழ்தலானே தலைவனை இவ்விடத்தே வரக் காணினுந் தலைவியைப் புறத்துப்போகக் காணினும் :

பெய்தென்பது காரணகாரியப் பொருட்டாய்ப் பிறவினை கொண்டது.

உ-ம்: "இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்
அருவி தந்த வணங்குடை நெடுங்கோட்டு

*அஞ்சுவரு விடர்முகை யாரிரு ளகற்றி*
*மின்னொளி ரெஃகஞ் செஃனெறி விளக்கத்*
*தனியன் வந்து பணியலை முனியான்*
*நீரிழி மருங்கி னாரிடத் தமன்ற*
*குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி*
*அசையா நாற்ற மசைவளி பகரத்*
*துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்*
*குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரு*
*மெய்ம்மலி யுவகைய னந்நிலை கண்டு*
*முருகென வுணர்ந்து முகமன் கூறி*
*யுருவச் செந்தினை நீரொடு தூஉய்*
*நெடுவேட் பரவு மன்னை யன்னோ*
*என்னா வதுகொ றானே பொன்னென*
*மலர்ந்த வேங்கை யலங்குசினை பொலிய*
*மணிநிற மஞ்ஞை யகவும்*
*அணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே."*

(அகம். 272)

இம் மணிமிடைபவளத்துத் தலைவனை செவிலி கண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டுகூறினாள்.

"உருமுரறு கருவிய" (அகம். 158) என்பதனுள்,

*"மிடையூர் பிழியக் கண்டனென் இவளென*
*அலையல் வாழிவேண் டன்னை"*

என்றது, தலைவி புறத்துப்போகக் கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டுகூறினாள். தானே கூறுவன வந்துழிக் காண்க.

கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் ஒட்டிய திறத் செய்திக்கண்ணும்[1] கட்டுவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டி-

1. ஒட்டிய திறத்தாற் செய்த—கட்டுவிச்சியும் வேலனும் தாம்பார்த்த கட்டினானும் கழங்கினானும் அவ்விருவரும் தம்மின் ஒத்த திறம்பற்றி அதனையே செய்யும் செய்தி.

னானுங் கழங்கினானுந் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம் மையல் தீராதென்று கூறுதலின், அவ்விருவருந் தம்மினொத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும் :

'திறம்' என்றதனான் அவர் வேறு வேறாகவுங் கூறப்படும்.

உ-ம்: *''பெய்ம்மணன் முற்றங் கவின்பெற இயற்றி*
*மலைவான் கோட்ட சினைஇய வேலன்*
*கழங்கினா னறிகுவ தென்றால்*
*நன்றா லம்ம நின்றவிவ ளலனே.''* (ஐங்குறு. 248)

இது வேலன் கழங்கு பார்த்தமை கூறிற்று.

*''அறியா மையின் வெறியென மயங்கி*
*அன்னையு மருந்துய ருழந்தனள் அதனால்*
*எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்*
*ஆய்மல ருண்கண் பசப்பச்*
*சேய்மலை நாடன் செய்த நோயே.''* (ஐங்குறு. 242)

இது வெறியென அன்னை மயங்கினமை கூறிற்று.

''அணங்குடை நெடுவரை'' என்னும் (22) அகப்பாட்டி னுட் கட்டுக்கண்டு வெறியெடுத்தமை கூறிற்று. ''பனிவரை நிவந்த'' என்னும் (98) அகப்பாட்டினுட் ''பிரப்புளர் பிரீஇ'' எனக் கட்டு விச்சியைக் கேட்டவாறும். ''என் மகட்கு'' எனச் செவிலி கூற்று நிகழ்ந்தவாறுங் காண்க. இதனுள் ''நெடுவே ளல்குவ னெனினே'' எனத் தலைவி அஞ்சவேண்டியது, இருவரும் ஒட்டிக் கூறாமல் தெய்வந்தான் அருளுமென்று கோடலின்.

*''இகுளை கேட்டிசின் காதலந் தோழி*
*குவளை யுண்கண் டேன்பனி மல்க*
*வறிதியான் வருந்திய செல்லற் கன்னை*
*பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்*
*வெறிகொள் பாசிலை நிலமொடு சூடி*
*யுடலுநர்க் கடந்த கடலந் தானைத்*
*திருந்திலை நெடுவேற் றென்னவன் பொதியில்*
*அருஞ்சிமை யிழிதரு மார்த்துவர லருவியிற்*
*றதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழு*

*துருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇக்*
*கடம்புங் களிறும் பாடி நுடங்குபு*
*தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலும்*
*ஆடின ராதல் நன்றோ நீடு*
*நின்னொடு தெளித்த நன்மலை நாடன்*
*குறிவர லரைநாட் குன்றத் துச்சி*
*நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருள்*
*திருமணி யுமிழ்ந்த நாகங் காந்தள்*
*கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி*
*நன்னிற மருளு மருவிடர்*
*இன்னா நீளிடை நினையுமெ னெஞ்சே''* (அகம்.138)

என்னும் மணிமிடைபவளம் விதந்து கூறாமையின் இரண்டும்[1] ஒருங்கு வந்தது.

ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும் - அங்ஙனம் வெறி-யாடுதல் வேண்டிய தொழின் முடிந்த பின்னுந் தலைவிக்கு வருத்தம் மிகினும் :

உ-ம்: ''*வேங்கை யிரும்புனத்து வீழுங் கிளிகடியாள்*
*காந்தண் முகிழ்விரலாற் கண்ணியுங் கைதொடாள்*
*ஏந்தெழி லல்குற் றழைபுனையா ளெல்லேயென்*
*பூந்தொடி யிட்ட புலம்பு மறிதிரோ''*

எனவும்

''*புனையிருங் குவளைப் போதுவிரி நாற்றஞ்*
*சுனையர மகளி ரவ்வே சினைய*
*வேங்கை யொள்வீ வெறிகமழ் நாற்றமொடு*
*காந்த ணாறுப கல்லர மகளிர்*
*அகிலு மாரமு நாஅ றுபவன்*
*திறலரு மரபிற் றெய்வ மென்ப*
*வெறிபுனங் காவ லிருந்ததற் றொட்டுத்*
*தீவிய நாறு மென்மகள்*
*அறியேன் யானிஃ தஞ்சுதக வுடைத்தே''*

எனவும் வரும்.

---

1. இரண்டும்—கட்டும் கழங்கும்.

இவை ஆற்றாமை கண்டு அஞ்சிச் செவிலி பிறரை வினாயின.

*“அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்*
*பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு*
*நனிபசந் தனளென வினவுதி அதன்றிறம்*
*யானுந் தெற்றென வுணரேன் மேனாண்*
*மலிபூஞ் சாரலென் றோழி மாரோ*
*டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்*
*புலிபுலி யென்னும் பூச றோன்ற*
*ஒண்செங் கழுநீர்க் கண்போ லாயிதழ்*
*ஊசி போகிய சூழ்செய் மாலையன்*
*பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்*
*குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி*
*வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்*
*டியாதோ மற்றம் மாதிறம் படரென*
*வினவி நிற்றந் தோனே அவற்கண்*
*டெம்முளெம் முண் மெய்ம்மறை பொடுங்கி*
*நாணி நின்றன மாகப் பேணி*
*ஐவகை வகுத்த கூந்த லாய்நுதன்*
*மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்*
*பொய்யு முளவோ வென்றனன் பையெனப்*
*பரிமுடுகு தவிர்த்த தேர னெதிர்மறுத்து*
*நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்*
*சென்றோ னன்றவக் குன்றுகிழ வோனே*
*பகன்மாய் அந்திப் படுசுட ரமயத்*
*தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்*
*மகனே தோழி யென்றனள்*
*அதனள வுண்டுகோள் மதிவல் லோர்க்கே.”* (அகம். 48)

இது, செவிலிகூற்றினைத் தோழி கொண்டு கூறியது.

காதல் கைமிகக் கனவின் அரற்றலும் - தலைவியிடத்துக் காதல் கையிகந்து பெருகுதலால் துயிலா நின்றுழியும் ஒன்று கூறி அரற்றுதலும் :

கனவு - துயில், துயிலிற் காண்டலைக் கனவிற் காண்ட லென்ப.

உதாரணம் : "பொழுது மெல்லின்று" (குறுந். 161) என்பதனுட் "புதல்வற் புல்லி அன்னா" என்று தலைவியை விளித்தது களவின் அரற்றலாயிற்று.

அரற்றல், இன்னதோர் இன்னாக்காலத்து என் செய்கின்றா யெனக் காதல்பற்றி இரங்குதல்.

தோழியை வினவலும் - நின்றோழிக்கு இவ் வேறுபாடு எற்றினா னாயிற் றென்றாற்போலத் தோழியை வினாவுதலும்:

உ-ம்: "*நெடுவே லேந்தி நீயெமக் கியாஅர்*
*தொடுத லோம்பென வரற்றலு மரற்றும்*
*கடவுள் வேங்கையுங் காந்தளு மலைந்த*
*தொடலைக் கண்ணி பரியலு மென்னும்*
*பாம்புபட நிவந்த பயமழைத் தடக்கைப்*
*பூம்பொறிக் கழற்கா லாஅய் குன்றத்துக்*
*குறுஞ்சுனை மலர்ந்த குவளை நாறிச்*
*சிறுதேன் கமழ்ந்த வம்மெல் லாகம்*
*வாழியெம் மகளை யுரைமதி இம்மலைத்*
*தேம்பொதி கிளவியென் பேதை*
*யாங்கா டினளோ நின்னொடு பகலே*"

எனவரும்.

இது செவிலி தோழியை வினாயது.

"*ஓங்குமலை நாட வொழிகநின் வாய்மை*
*காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி*
*உறுபகை பேணா திரவின் வந்திவள்*
*பொறிகிள ராகம் புல்லத் தோள்சேர்*
*பறுகாற் பறவை யளவில மொய்த்தலின்*
*கண்கோ ளாக நோக்கிப் பண்டு*
*மினையை யோவென வினவினள் யாயே*
*யதனெதிர் சொல்லா ளாகி அல்லாந்*
*தென்முக நோக்கி யோளே யன்னா*

*யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மடுத்த*
*சாந்த ஞெகிழி காட்டி*
*யீங்கா யினவா லென்றிசின் யானே.''* (நற்றிணை.55)

இது, செவிலி வினாயினமையைத் தோழி கொண்டு கூறினாள்.

தெய்வம் வாழ்த்தலும் - இன்னதொன்று நிகழ்ந்ததெனத் துணிந்த பின்னர்த் தன் மகளோடு தலைமகனிடை நிகழ்ந்த ஒழுக்கம் நன்னர்த்தாகவெனத் தெய்வத்திற்குப் பராவுதலும்:

*''நாடற்கின்றீம் பலவி னேர்கெழு செல்வத்*
*தெந்தையு மெதிர்ந்தனன் கொடையே யலர்வாய்*
*அம்ப லூரு மவனொடு மொழியும்*
*சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி*
*யாயு மவனே யென்னும் யாமும்*
*வல்லே வருக வரைந்த நாளென*
*நல்லிறை மெல்விரல் கூப்பி*
*இல்லுறை கடவுட் கோக்குதும் பலியே.''* (அகம்.282)

இதனுள் 'தோள்பாராட்டி யாயுமவனே என்னும்' என் யாய் தெய்வம் பராயினாளென்பதுபடக் கூறி, யாம் அத் தெய்வத்திற்குப் பலிகொடுத்து மென்றவாறு காண்க:

போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண்ணும் - உடன்போக்கு அறிந்த பின்னர்ச் செவிலி தோழியொடு மதியுடம்பட்டு நின்று தலைவியது கற்புமிகுதியே கருதி உவந்த உவகைக்கண்ணும்:

அது,

*''எம்மனை முந்துறத் தருமோ*
*தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே''* (அகம்.195)

என்றாற்போலக் கற்பினாக்கத்துக் கருத்து நிகழ்தல்.

உ-ம்: *''முயங்குகம் வாராய் தோழி தயங்குபு*
*கடல்பெயர்ந் தன்ன கானலங் கல்லெனப்*
*பெயல்கடைக் கொண்ட பெருந்தண் வாடை*

*வருமுலை வெப்பங் கொழுநற் போற்றிய*
*சென்றனள் அம்மநின் தோழி யவனோ*
*டென்றினி வருஉம் என்றனள்*
*வலந்துரை தவிர்ந்தன் றலர்ந்த வூரே."*

இது, செவிலி கற்பினாக்கத்து நின்றமை தோழி கூறியது.

பிரிவின் எச்சத்தும் - தலைவி உடன்போயவழித் தான் பின் செல்லாதே எஞ்சுதலும் உளவாதலின் ஆண்டுக் கூறுவனவும்:

உ-ம்: *"தெறுவ தம்ம நும்மகள் விருப்பே*
*உறுதுயர் அவலமொ டுயிர்செலச் சாஅய்ப்*
*பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க*
*நாடிடை விலங்கிய வெற்பிற்*
*காடிறந் தனள்நம் காத லோளே."* (ஐங்குறு.313)

இது, பின்செல்லாது வருந்தியிருந்த செவிலியைக் கண்ட நற்றாய் கூறியது.

இது, நற்றாய் கூற்றாய்ச் 'செவிலி மேன' ஆயிற்று.

மகள் நெஞ்சு வலிப்பினும் - உடன்போக்கிற்கு மகள் நெஞ்சு துணியினும்:

தன்மேல் அன்பு நீங்கியது உணர்ந்து செவிலி கூறும்.

உ-ம்: *"பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றனள்*
*இனியறிந் தேனது துனியா குதலே*
*கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்*
*வேங்கையுங் காந்தளும் நாறி*
*யாம்பன் மலரினுந் தான்றண் ணியளே."* (குறுந்.84)

என வரும்.

இருபாற் குடிப்பொருள்[1] இயல்பின்கண்ணும் - தலைவனுந் தலைவியுந் தோன்றிய இருவகைக் குடியும் நிரம்பி வருதல் இயல்பாகப் பெற்ற வழியும்:

---

1. இருபாற் குடிப்பொருள் என்றது, பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருபு, உருவுநிறுத்த காமவாயில், நிறை, அருள், உணர்வு, திரு எனத் தலைவன் தலைவி இருவர்க்கும் உரியவாகச் சொல்லப்பட்ட ஒப்புப் பத்தினையும்,

'பொருள்' என்றார் பிறப்பு முதலிய பத்தையுங் (273) கருதி.

''காமர் கடும்புனல்'' என்னும் (39) கலியுள்,

*''அவனுந்தா, னேன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்*
*வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்*
*தேனி னிறாவென வேணி யிழைத்திருக்கும்*
*கானக நாடன் மகன்;.............. .........*
*எனவாங் கறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
*வென்னையர்க் குய்த் துரைத்தாள் யாய்''*

எனத் தோழி தான் கூறிய இருபாற் குடிப்பொருளைக் கூறிச், செவிலி அறத்தொடு நின்றாளெனக் கொண்டெடுத்து மொழிந்தவாறு காண்க.

இன்னவகையிற் பதின்மூன்று கிளவியோடு அன்னவை பிறவும்- இத்தன்மைத்தாகிய கூறுபாட்டையுடைய பதின்மூன்று கிளவியோடே அவைபோல்வன பிறவாய் வருவனவும்; செவிலி மேன - தன் கூற்றாயும் பிறர்கொண்டு கூறுங் கூற்றாயும் கூறும் கூற்றுச் செவிலிக்கு உரியவாம் (எ - று).

'அன்னபிற' என்றதனால்,

*''பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு*
*தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய*
*நாலூர்க் கோசர் நன்மொழி போல*
*வாயா கின்றே தோழி ஆய்கழற்*
*செயலை வெள்வேல் விடலையொடு*
*தொகுவளை முன்கை மடந்தை நட்பே.''* (குறுந் 15)

இஃது உடன்போயபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

இன்னும் அதனானே,

*''வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்'' (அகம். 121)*

என்றலுஞ்,

*"சிறுகிளி கடித றேற்றா ளிவள்"* (அகம்.28)

என்றலுங்,

*"கண்கோ ளாகநோக்கிப் பண்டு மினையையோ"*

(நற்றிணை, 55)

என்றலும் போல்வன பிறவுங் கொள்க. (24)

**ஆய்வுரை**

இது செவிலிக்குரிய கூற்றுவகையினை உணர்த்துகின்றது.

(இ-ள்.) தலைவனது களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகிய நிலையில் ஊரார் அலர் கூறிய காலத்தும், தலைவியின் வேட்கை அளவிறந்த நிலையிலும், அவனது வனப்பு அளவு மிக்குத் தோன்றிய காலத்தும், தலைவனொடு தலைவியை உடன்கண்ட காலத்தும், தலைவியின் மெலிவுக்குரிய காரணங்களைக் கட்டுவைப்பித்தும் கழங்கு பார்த்தும் கண்டறிந்த அவளது மெலிவு தீர வேலனைக் கொண்டு வெறியாடுவித்தல் வேண்டும் என இருவரும் பொருந்திய பக்கத்துச் செய்திக் கண்ணும், அங்ஙனம் வெறியாட்டு நிகழ்த்தத் தொடங்கிய நிலையில் தோழி தடுத்து நிறுத்திய நிலையிலும், காதல் மிகுதியால் தலைவனை நினைந்து தலைவி கனவில் அரற்றிய பொழுதும் இவைபற்றித் தோழியை வினவுதலும் (இன்னவாறு நிகழ்ந்ததெனத் தோழி கூறியவழி இவ்விருவரது ஒழுகலாற்றினால் குடிக்குப் பழி விளைதலாகாது எனத்) தெய்வத்தை வேண்டுதலும், தலைவி தலைவனொடு உடன்போயினாள் என்று அறிந்த நிலையில் தோழி-யொடு ஆராய்ந்து அவ்விருவரையும் மனையறத்தின்கண் நிறுத்தற்-கண்ணும், தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த காலததுத் தலைவி கற்பு வழிப்பட்டு மனைக்கண் அமைதியாக அடங்கியிருக்கும் அவளது நெஞ்சத் திண்மையை எண்ணிய நிலை-யிலும், தலைவனது குடிப்பிறப்பு தலைமகளது குடிப்பிறப்பினொடு ஒக்கும் என ஆராய்தற் கண்ணும் இத்தன்மையவாய பதின்மூன்று வகைக் கூற்றுக்களுடன் அவை போல்வன பிறவும் செவிலிக்குரி-யனவாம் எ-று.

இவை செவிலிதானே கூறும் தன் கூற்றாகவும் தலைவியும் தோழியும் செவிலிகூற்றாகக் கொண்டெடுத்து மொழியப்படுவனவாக-வும் செவிலிக்கு உரியவாம் என்பார் 'செவிலிமேன' என்றார்.

## உகூ. தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே

**இளம்பூரணம்**

இது நற்றாய்க்கு உரியதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) செவிலியுணர்வோடு உடம்பட்ட வுள்ளத்தளாயின், நற்றாய்க்கும் மேற்சொல்லப்பட்டவை யெல்லாம் வரையப் படா வென்றவாறு.

உணர்வுடம் படுதலாவது—தலைவியை யுற்று நோக்கம் நிகழ்ந்தவழி யன்றித் தானும் செவிலியைப்போல உற்று நோக்கா-ளென்று கொள்க. இப்பொருள்மேற் கிளவி வருவன உளவேனுஞ் செவிலியைப்போல வொருப்பட்ட வுள்ளத்தளாயின் அவள்கண்ணும் இக்கிளவியெல்லாம் நிகழும் என்றவாறு. உடம்படாதவாறு என்னை யெனின், யாரிடத்தும் மக்களை வளர்ப்பார் செவிலியராகலானும் தமக்குத் தம் இல்லறநிலைக்குக் கடவ பகுதியான அறனும் பொருளும் இன்பமும் வேண்டுதலானும் கூற்றொடு வேறுபாடு தோன்றாது. (உகூ)

**நச்சினார்க்கினியம்**

இது, செவிலிக்கு உரியன கூறி நற்றாய்க்கு உரிய கூற்றுக் கூறுகின்றது.

(இ-ள்.) உணர்வு உடம்படின் - அங்ஙனஞ் செவிலி உணர்ந்-தாங்கே நற்றாயும் மதியுடம்படில்; தாய்க்கும் வரையார்-நற்றாய்க்கும் முற்கூறிய பதின்மூன்று கிளவியும் பிறவுமாகக் கொண்டு எடுத்து மொழிதல் வரையார் (எ - று).

'தாய்க்கும்' என்றார், இவட்கு அத்துணை பயின்றுவாரா என்றற்கு. அது நற்றாய் இல்லறம் நிகழ்த்துங் கருத்து வேறு உடைமையின் உற்றுநோக்காள்; செவிலியே தலைவியை உற்று நோக்கி ஒழுகுவாளாதலின். இலக்கணமுண்மையின் இலக்கியம் வந்துழிக் காண்க[1]. (உகூ)

---

1. செவிலிக்குரிய கூற்றுக்கள் நற்றாய்க்கும் உரிய எனத் தொல்காப்பியர் கூறுதலால் நற்றாய் கூற்றாக வந்த இலக்கியங்கள் இருந்திருத்தல் வேண்டும் எனவும், அங்ஙனம் வரும்வழி அவற்றை இலக்கியமாகக் கொள்க எனவும் கூறியவாறு.

### ஆய்வுரை

நற்றாய்க்குரியதோர் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்.) செவிலியுணர்வுடன் ஒத்த உணர்வினளாயின் நற்றாய்க்கும் மேற்சொல்லப்பட்ட பதின்மூன்று கிளவிகளும் அவைபோல்வன பிறவும் நீக்காது கொள்ளத் தக்கன என்பர் ஆசிரியர்.

உணர்வுடம்படுதலாவது தலைவியின் ஒழுகலாற்றைச் செவிலியுணர்ந்தவாறே நற்றாயும் உணர்ந்து மதியுடம்படுதல்.

உஎ. கிழவோன் அறியா அறிவினள் இருளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே.

இது நற்றாயும் துணியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) கிழவோன் அறியா அறிவினள் என்பது—தலைமகன் அறியா அறிவினையுடையவள் என்றவாறு. எனவே ஒரு பக்கம் எதிர்காலம் நோக்கிக் கூறினார் போலத் தோன்றும்; ஒரு பக்கம் இறந்தகாலம் தோன்றும். அவன் அறியாத அறிவுரிமை பூண்டு மயங்குதல், அவள் எத்துணையும் மயக்கமிலள் எனவும், அவன் பொருட்டு மயங்கினாள் எனவும்படக் கூறுதல், தலைவன் அறியாத அறிவினையுடையவள் எனக் குற்றமற்ற சிறப்பினையுடைய உயர்ந்தோர்மாட்டு உளதாகிய ஐயக்கிளவியால் புணர்ப்பறிதலும் உரித்து, செவிலிக்கும் நற்றாய்க்கும் என்றவாறு.

இஃது எற்றினான் ஆயிற்று எனக் குற்றமற்ற தவரை வினாயவழி அவர் இவ்வாறு பட்டதென மெய்கூறுதலுந் தகுதியன்றாம்: பொய் கூறுதலும் தகுதியன்றாம். ஆதலால் ஐயப்படுமாறு கூறியவழி, அதனானே யுணர்ப என்றவாறு. கிழவோனறியா வறிவினளென்றவாறு கூறியவழிக் கிழவோனெதிர்ப்பட ...இறந்த காலத்துள் தலைவன் உளன் என்றவாறாம். (உஎ)

### நச்சினார்க்கினியம்

இஃது அங்ஙனங் களவு வெளிப்பட்ட பின்னர் நற்றாய்க்குஞ் செவிலிக்கும் உரியதோர் இலக்கணம் கூறுகின்றது.

(இ - ள்.) கிழவோன் அறியா அறிவினள் இவளென[1] ஐயக் கிளவி - நங்குலத்திற்கு ஒத்த தலைவனை அறிந்து கூடாத அறிவினையுடையள் இவளென்று தம் மனத்தை ஐயமுற்றும் பிறரோடு உசாவுங் கிளவியை; மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின் அறிதலும் உரித்தே - குற்றமற்ற சிறப்பினையுடைய அந்தணர் முதலியோரிடத்தே கூறி அதுவும் முறைமையென்று அவர் கூற அறிதலும் உரித்து (எ - று).

என்றது, 'மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே' என முற்கூறினமையின் தலைவன் தன் குலத்தின் உயர்ந்தமை அறிந்தவிடத்து, இங்ஙனம் கூடுதல் முறையன்றென்று ஐயுற்ற செவிலியும் நற்றாயும், உயர்ந்தோரைக் கேட்டு இதுவுங் கூடுமுறைமை என்றுணர்வர் என்பதாம். இலக்கணமுன்மையின் இலக்கியமும் அக்காலத்து உளவென்றுணர்க.[2] (உகூ)

**ஆய்வுரை**

இது, நற்றாயும் செவிலியும் தலைமகளது ஒழுகலாற்றை ஐயுற்றுத் துணியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) தலைமகன் அறியா அறிவினையுடையாள் இவள்' என்று குற்றம் அறுத்த சிறப்பினையுடைய உணர்ந்தோர் பக்கத்து உளதாகிய ஐயக் கிளவியால் தலைவனோடு தலைவிக்குளதாகிய புணர்ப்பினை யறிந்துகொள்ளுதல் செவிலிக்கும் நற்றாய்க்கும் உரியது எ-று.

தலைவியின் மெலிவினைக் கண்டு வருந்திய செவிலியும் நற்றாயும் குற்றமற்ற சிறப்பினையுடைய உயர்ந்தோராகிய அறிவரைப் பணிந்து தம் மகளது மெலிவு எதனாலாயிற்று என வினவி நிற்பர். அந்நிலையில் முக்கால நிகழ்ச்சிகளையும் ஒருங்குணரும் நுண்ணுணர்வுடைய அப்பெரியோர்கள் 'இவள் இத்தன்மையான்

---

1. "கிளவோன் அறியா அறிவினள் இவள்" என உயர்ந்தோர் கூறும் கூற்று, இருபொருள்படக் கவர்த்து நிற்றலின் ஐயக்கிளவியாயிற்று.

2. இனி, இதனைச் செவிலியும் நற்றாயும் தம் உள்ளத்து ஐயுற்று உயர்ந்தோரை வினவிய கிளவியாகக் கொண்டார் நச்சினார்க்கினியர். இவ்வாறு ஐயுற்று வினவுவதாக இலக்கியம் காணப்படவில்லை. ஆயினும் 'இலக்கண முன்மையின் இலக்கியமும் அக்காலத்து உளவென்று உணர்க' என்றார்.

ஒருவனைக் காதலிக்கின்றாள்' எனத் தலைவியொடு தலைவனுக்குண்டாகிய தொடர்பினை வெளிப்படச் சொல்லுதல் மரபன்மையானும், நிகழ்ந்ததனை மறைத்தல் தமது வாய்மைக்கு மாறாதலானும் 'நும் மகள் தலைமகன் அறியா அறிவினையுடையாள்' என்றாற் போன்று ஐயுறுதற்குரிய கவர்த்த பொருளுடைய தொடரால் மறுமொழி கூறுவர். 'எதிர்காலத்தில் தன்னை மணந்து கொள்ளும் உரிமையுடைய கணவனாலும் அறியப்படாத பேரறிவினையுடையாள் நும் மகளாகிய இவள்' என வெளிப்படையாக ஒரு பொருளும், 'தன் காதற் கிழமையுடையவனாக ஒழுகும் தலைமகனாலும் அறியப்படாத அறிவுரிமை பூண்டு அவன் பொருட்டு மயங்குகின்றாள் இவள்' எனக் குறிப்பாக மற்றொரு பொருளும் தரும் நிலையில் அறிவர் கூறிய ஐயக்கிளவியை உய்த்துணர்ந்து தலைவனொருவனுடன் தம்மகளுக்கு உளதாகிய தொடர்பினைச் செவிலியும் நற்றாயும் அறிந்து கொள்ளுதற்கும் உரியர் என்பது இந்நூற்பாவினால் அறிவுறுத்தப்படும் நுண்பொருளாகும்.

உஅ. தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்[1]
பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப.

**இளம்பூரணம்**

இது தலைவிக்கு உரியதோர் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தலைவி தனது வேட்கையைக் கிழவன் முன்பு சொல்லுதல் நினைக்குங் காலத்துக் கிழத்திக்கு இல்லை. அங்ஙனம் சொல்லாத விடத்தும் புதுக்கலத்தின்கட் பெய்த நீர்போலப் புறம் பொசிந்து காட்டும் உணர்வினையு முடைத்து அவ்வேட்கை என்றவாறு.

எனவே, குறிப்பின் உணர நிற்கும் என்றவாறு. தலைவன்மாட்டுக் கூற்றினானும் நிகழப்படுமென்று கொள்ளப்படும்.[2] (உஅ)

---

1. இளம்பூரணர் உரையின் சிதைவினைக் கூர்ந்து நோக்கின் இந் நூற்பாவின் மூன்றாமடி 'புதுநீர்மட்கலனறிய வாயிடை' எனப்பாடம் இருந்திருக்குமோ என ஐயுற வேண்டியுள்ளது.

2. தலைவிமாட்டு வேட்கை குறிப்பின் உணர நிற்கும். எனவே தலைவன் பால் குறிப்பினாலன்றிக் கூற்றினாலும் நிகழப்பெறும் என்பதாம்.

**நச்சினார்க்கினியம்**

இது தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) பிறநீர் மாக்களின் - வேறுவேறாகத் தம்மில் தாம் காதல்செய்து ஒழுகும் அறிவில்லாதாரைப் போல; கிழவன் அறியத் தன்னுறு வேட்கை முற்கிளத்தல் கிழத்திக்கு இல்லை - தலைவன் அறியும்படியாகத் தனக்குற்ற வேட்கையை அவன் முன்னர்க் கூறுதல் தலைவிக்கு இல்லை; ஆயிடை - அங்ஙனங் கூற்றில்லாதவிடத்து; எண்ணுங் காலையும்-அவள் வேட்கையை அவன் ஆராயுங்காலையும்; பெய்ந்நீர் போலும் உணர்விற்று என்ப - அவ்வேட்கை புதுக்கலத்து பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறுபோலும் உணர்வினை யுடைத்தென்று கூறுவர் ஆசிரியர் (எ - று).

'கிழத்திக்கில்லை' யெனவே தோழிக்குத் தலைவி தனது வேட்கையை எதிர்நின்று கூறுதலுளதென்பது பெற்றாம்.[1] தலைவிக்குக் குறிப்பானன்றித் தலைவன்முன்னின்று கூறும் வேட்கைக் கூற்றின்மை முற்கூறிய செய்யுட்களுட் காண்க. எனவே, தோழி முன்னர்த் தலைவிக்கு வேட்கைக்கூற்று நிகழ்தல் பெற்றாம்.

உதாரணம் :

*"சேணோன் மாட்டிய நறும்புகை"* (குறுந்.150)
*"ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த"* (அகம்.8)

எனபனவும்,

*"இவளே நின்சொற்கொண்ட"* (குறுந்.81)

என்றாற்போல் வருவனவும் முன்னர்க் காட்டினாம்.

*"கடும்புனன் மலிந்த காவிரிப் பேரியாற்று*
*நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல*
*நடுங்களுர் தீர முயங்கி நெருநல்*
*ஆகம் அடைதந் தோளே........"* (அகம்.62,9-12)

என்றாற்போல்வன தலைவி வேட்கையைத் தலைவன் குறிப்பான் உணர்ந்தன. (உ௭)

---

1. கிழத்தி 'கிழவன் முற்கிளத்தல் இல்லை' எனவே தோழிக்குத் தனது வேட்கையைக் கிளத்தல் உண்டென்பது பெற்றாம்.

**ஆய்வுரை**

இது, தலைவிக்கு உரியதோர் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்.) வேறுவேறாகக் காதல் செய்தொழுகும் அறிவில்லாதாரைப் போன்று பலர்க்கும் புலனாகத் தனது மிக்க வேட்கையைத் தலைவன் முன்னர்ச் சொல்லுஞ்சொல், நினைக்குங்காலத்துத் தலைவியிடத்து நிகழ்தல் இல்லை. அவ்விடத்துத் தலைவியது வேட்கை, புதுக் கலத்துப் பெய்த நீர் புறம்பொசிந்து காட்டுமாறு போலும் உணர்வினையுடைத்தென்று கூறுவர் புலவர் எ-று.

பிறநீர் மாக்களின் அறியத் தன் உறு வேட்கை கிழவன் முன் கிளத்தல் கிழத்திக்கு இல்லை என இயையும். பிறநீர் மாக்கள் என்றது, ஒத்த கிழவனும் கிழத்தியுமாய் எக்காலத்தும் ஒன்றுபட்டு வாழும் அன்பின்றித் தாம் கூடியிருக்கும் காலத்தும் தம்மை வேறுவேறாகக் கருதி வேட்கை வயப்பட்டு மனம் சென்ற வழியொழுகும் தன்மையினராய மடவோரை. மாக்களின் என்புழி இன் உவமவுருபு. அறிய-பலர்க்கும் புலனாக. பெய்ந்நீர் என்பதற்கேற்பப் புதுவதாக நீர் பெய்தற்குரிய புதுக்கலம் என்பது வருவித்துரைக்கப்பட்டது.

உகூ. காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலின்[1]
தாமே தூதுவ ராகலும் உரித்தே.

**இளம்பூரணம்**

என்றது, களவிற்புணர்ச்சிக் குரியதொரு வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற் சொன்னவாற்றால் பாங்கனுந் தோழியு நிமித்தமாகக் கூடுதலேயன்றித் தாமே தூதுவராகிய கூட்டங்கள் நிகழப்பெறும். அது சிறப்புடைத்தாதலான் என்றவாறு.

எனவே, பாங்கற் கூட்டம் தோழியிற் கூட்டம் என்பன நியமமில்லை; யார்மாட்டும் என்றவாறாம். தனிமையிற் பொலிதலின் என்றமையான் இது மிகவும் நன்று. (உகூ)

---

1. தனிமையிற் பொலிதலாவது, பிறர் நியாவாறு ஒத்த அன்பினராகிய இருவரும் தனித்துள்ள தனிமை நிலையில் நிகழ்தலால் பொலிவுடையது காமக் கூட்டமாகிய களவாதலின், தலைவன் தலைவியாகிய இருவரும் பிறரை வாயிலாகக் கொள்ளாது தாமே ஒருவர்க்கொருவர் தமது வேட்கையைப் புலப்படுத்தற்கும் உரியர் என்பதாம்.

**நச்சினார்க்கினியம்**

இஃது எய்தாதது எய்துவித்தது, பாங்கனுந் தோழியும் நிமித்தமாக வன்றித் தாமே தூதாகும் இடமும் உண்டென்றலின்.

(இ-ள்.) காமக்கூட்டந் தனிமையிற் பொலிதலின் - இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடுங் கூட்டுவாரையின்றித் தனிமையாற் பொலிவுபெறுதலின்; தாமே தூதுவராகி ஒருவர் ஒருவரைக் கூடுதலும் ஆண்டுரித்து (எ - று).

அது மெய்ப்பாட்டினுட் 'புகுமுகம் புரிதல்' (261) முதலிய பன்னிரண்டானும் அறிக. இதன் பயன் இக் இட்டத்தின் பின்னர் வரைதலும் உண்டென்பதால்.[1] (உஅ)

**ஆய்வுரை**

இது, களவிற்புணர்ச்சிக்கு உரியதோர் திறம் உணர்த்துகின்றது

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சியாகிய கூட்டம் கூட்டிவைப்பார் பிறரின்றித் தலைவன் தலைவியாகிய இருவரும் பிறரறியாதவாறு நிகழும் தனிமையுடையதாய்ப் பொலிவுறுவதாதலின், தலைவன் தலைவி இருவரும தத்தமது உளக்கருத்தைப் புலப்படுத்தும் தூதுவராகத் தனிமையில் முயன்று கூடுதலும் உண்டு எ—று.

தாம் என்றது, தலைவன் தலைவி இருவரையும். தாமே என்புழி ஏகாரம் தோழி முதலிய வாயில்களைப் பிரித்தலின் பிரிநிலை. தலைவன் தலைவியிருவரும் சேர்ந்து தாமே தூதுவராய்நின்று கூடும் நிலை, மெய்ப்பாட்டியலுள் 'புகுமுகம் புரிதல்' முதலிய மெய்ப்பாடு பன்னிரண்டானும். நன்கறியப்படும். எனவே தலைவன் பாங்கனது

---

1. ஈண்டுக் காமக்கூட்டம் என்பன இயற்கைப் புணர்ச்சியும், இடந்தலைப்பாடும். தனிமையிற் பொலிதலாவது, தாம் கூடுதற்குத் துணையாயினார் இன்னார் எனக் கருதும் வகையில் தம்மைக் கூட்டுவிப்பார் ஒருவருமின்றி நாமே கூடினோம் என்னும் தனிமையுணர்வுடன் தம்மிருவர் அளவிலேயே பொலிவு பெற்று நிகழ்தலின் அவ்விருவரும் தம் கருத்தினைப் புலப்படுத்தும் நிலையில் ஒருவர்க்கொருவர் தூதாகித் தம்முட் கூடுதலும் உரித்து என்பதாம். இவ்வாறு பாங்கனும் தோழியும் நிமித்தமாக அன்றி இவ்வாறு தாமே தூதாதல் மெய்ப்பாட்டியலுள் புகுமுகம் புரிதல் முதலிய பன்னிரண்டு மெய்ப்பாடுகளானும் நிகழும். இக்கூட்டத்தின் பின்னர்த் தலைவன் தலைவியை வரைந்தெய்தலும் உண்டு என்பது இந்நூற்பாவின் பயன் என்பர் நச்சினார்க்கினியர்.

உதவிபெற்றுக் கூடுதலும் தோழியின் உடன்பாடு பெற்றுக் கூடு-தலுமாகிய இவை யாவரிடத்தும் தவறாது நிகழவேண்டும் என்னும் வரையறையில்லையென்பது பெறப்படும்.

௩௰, அவன்வரம் பிறத்த லறந்தனக் கின்மையின்[1]
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
தான்செலற் குரியவழி யாக லான

**இளம்பூரணம்**

இது சொல்லப்பட்ட கூட்டத்திற்குக் குறியிடம் கூறுவா-னுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்பு, தலைவனெல்லையை மறத்தல் தலைவிக்கு அறமாக லின்மையானே குறியிடம் கூறுதல் தலைமகள்தாம்; அது தான் சேறற் குரிய இடமாதலான் என்றவாறு.

எனவே, இத்துணைக்கூறின் மிகையன்று என்றவாறாம்.[2] (௩௰)

**நச்சினார்க்கினியம்**

இது முன்னர்க் களனும் பொழுதும் என்றவற்றுட் களங்கூறு தற்கும் உரியாள் தலைவியென்கின்றது.

(இ-ள்.) அவன் வரம்பு இறத்தல் - தலைவன் கூறிய கூற்றின் எல்லையைக் கடத்தல்; தனக்கு அறமின்மையின்-தலைவிக்கு உரித்தெனக் கூறிய தருமநூலின்மையின்; களஞ்சுட்டுக் கிளவி கிழவி யது ஆகும்-தலைமகனை இன்னவிடத்து வருக வென்று ஓரிடத்தைத் தான் கருதிக் கூறுங்கூற்று அவன் குறிப்புவழி ஒழுகுந் தலைவியதாம்; தான் செலற்கு உரியவழி ஆகலான்-தான் சென்று கூடுதற்குரிய இடந் தானே உணர்வள் ஆதலான் (எ-று).

1. அவன் வரம்பு இறத்தல் தனக்கு அறமின்மையின் என இயையும்.

2. இத்துணை — இவ்வளவில்.

3. அவன் வரம்பு இறத்தல் தனக்கு அறமின்மையின், தான் செலற்குரிய வழி ஆகலான் களம் சுட்டுக் கிளவி கிழவியது ஆகும் என இயைத்துப் பொருள் வரையப்பட்டது. இன்னும் ஆனும் ஏதுப் பொருளிற் பயின்றன.

களம் — களவொழுக்கத்தில் தலைவனும் தலைவியும் நேர்படும் இடம். சுட்டுதல் — கூற்றால் அன்றிக் குறிப்பாற் புலப்படுத்தல்.

'சுட்டுக்கிளவி' என்றதன் கருத்துத் தலைவன் இருவகைக் குறியும் வேண்டியவழி அவனை மறாது தான் அறிந்த விடத்தினைக் கூற்றானன்றிக் குறிப்பானாதல் சிறைப்புறத்தானாதல் தோழியானாதல் உணர்த்துமென்பதாம். தலைவன் களஞ்சுட்டு மாயின் யாண்டானும் எப்பொழுதானும் அக் களவொழுக்கம் நிகழ்ந்து பிறர்க்கும் புலனாய்க் குடிப்பிறப்பு முதலியவற்றிற்குத் தகாதாம். ''விரியிணர் வேங்கை'' என்னும் (38) அகப்பாட்டுத் தலைவி களஞ்சுட்டியது : ''மறந்திசின் யானே'' என்றலின் இது குறிப்பான் உணர்த்திற்று. பிறவும் வந்துழிக் காண்க. (உ௰)

**ஆய்வுரை**

இது, களவொழுக்கத்திற் குறியிடமிதுவெனக் குறிக்கும் பொறுப்பு தலைமகட்குரியது என்கின்றது.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவனதுசொல்லின் வரம்பினைக் கடத்தல் தலைமகட்கு அறமன்றாகலானும் தான் செல்லுதற்குரிய வழி அவ்விடமாதலானும் தாங்கள் இருவரும் மீண்டும் கண்டு அளவளாவுதற்குரிய இடத்தைக் குறிப்பிடும் பொறுப்பு தலைமகளைச் சார்ந்ததாகும எ-று.

அவன் என்றது, தலைவனை. வரம்பு என்றது அவன் பணித்த சொல்லாகிய எல்லை. இறத்தல் - கடத்தல். அறம்-கற்புறயாகிய நெறிமுறை. 'தனக்கு அறமன்மையின்' என இன்னும், 'தான் செலற்குரிய வழி ஆகலான்' என ஆனும் ஏதுப் பொருளில் வந்தன.

தலைவியின் உடன்பாடு பெற்றுத் தோழியாற் குறியிடம் சுட்டப்பட்டுத் தலைவன் தலைவியைக் கூடும் இடம் என்றது, பாங்கியின் உதவிபெற்றுத் தலைமகளைக் கண்டு அளவளாவும் பாங்கியிற் கூட்டத்தின் பகற்குறி இரவுக் குறியாகிய இடங்களை.

௩௧. தோழியின் முடியும் இடனுமார் உண்டே.

**இளம்பூரணம்**

இது, தோழியிற் கூட்டத்திற் காயதொரு சிறப்புவிதி உணர்த்து-தல் நுதலிற்று.

(இ-ள்.) மேல், 'காமக்கூட்டந் தனிமையிற் பொலிதலிற் றாமே தூதுவ ராகலும் உரித்' தெனக் கூறிப்போந்தார்; அவ்வாறன்றி மேற் சொல்லப்பட்ட இயற்கைப் புணர்ச்சியாவது

தோழியின் முடியுமிடத்து ஓரிடத்து உண்டு என்றவாறு. ''அன்பொடு புணர்ந்த வைந்திணை'' (இறையனார் களவியல்-க) என்றதனால் யாண்டும் உள்ளப் புணர்ச்சியான் வேட்கைமீ தூர்ந்த வழியே தோழியின் முடியப் பெறுவது என்று கொள்க.[1] அல்லாக்காற் பெருந்திணைப்பாற்படும்.[2] (௬௪)

**நச்சினார்க்கினியம்**

இது தோழிக்குங் களஞ்சுட்டுக் கிளவி உரித்தென்று எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) களஞ்சுட்டுக் கிளவி தலைவி குறிப்பால் தோழி கூறுதலன்றித் தானேயுங் கூறப்பெறும் ஒரோவழி என்றவாறு. தோழி குறித்த இடமுந் தலைவி தான் சேறற்குரிய இடமா மென்பது கருத்து.[3]

''வண்டுபட
*விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்ப்*
*பூவேய் புன்னையந் தண்பொழில்*
*வாவே தெய்ய மணந்தனை செலற்கே''* (அகம்.240)

எனத் தோழி களஞ்சுட்டியவாறும் காண்க. (௬௰)

**ஆய்வுரை**

இது, தோழியிற் கூட்டத்திற்குரியதோர் சிறப்பு விதி கூறு-கின்றது.

(இ-ள்.) தோழியாற் குறியிடம் அறிவிக்கப்பட்டுப் பொருந்து மிடமும் உண்டு எ-று.

௬உ. **முந்நா ளல்லது துணையின்று கழியாது**
**அந்நா ளகத்தும் அதுவரை வின்றே.**

**இளம்பூரணம்**

இது, பாங்கற் கூட்டம் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இயற்கைப் புணர்ச்சியில் எதிர்ப்பட்டு உள்ளப்புணர்ச்சியளவில் நின்ற தலைவன் தலைவி இருவர்க்கும் மெய்யுறு புணர்ச்சி தோழியினால் முடியும் இடனும் உண்டு.

2. தலைமகளொடு உள்ளப் புணர்ச்சி பெறாதான் தோழியின் துணை பெற்று அவளைக் கூட முயல்வது பெருந்திணையாகிய பொருந்தா ஒழுக்கமாம் என்பது கருத்து.

3. தோழி சுட்டிய இடமும் தலைவி செல்லுதற்குரிய இடமாதலால் தலைவியுடன் ஒத்த உணர்வினளாகி தோழிக்கும் களஞ்சுட்டுக் கிளவி உரியதாகும் என்கின்றது இந்நூற்பா.

(இ-ள்.) மேல், தோழியிற் கூட்டத்தின் விகற்பங்கூறினா ராகலின், ஈண்டுத் துணை யென்றது பாங்கன் ஆயிற்று.[1] மூன்று நாளல்லது துணையின்றிக் களவிற் புணர்ச்சி செல்லாது;[2] அந் நாளகத்தும் துணையை நீக்கவும் படாது என்றவாறு.

எனவே, எதிர்ப்பட்ட தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்வதன் முன் பாங்கற்கு உணர்த்தவும் பெறும் என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டது. (௩௨)

நச்சினார்க்கினியம்

இதுவும் அதிகாரத்தால் தலைவிக்கெய்தியதோர் இலக் கணங் கூறுகின்றது.

(இ-ள்.) முந்நாள் அல்லது துணையின்று கழியாது- பூப்பெய்திய மூன்றுநாளும் அல்லது கூட்டமின்றி[3] இக்கள வொழுக்கம் கழியாது; அந்நாளகத்தும் அது வரைவு இன்றே- அம் மூன்றுநாளில் அகப்பட்ட நாளாகிய ஒருநாளினும் இரண்டு நாளினுந் துணையின்றிக் கழிதல் நீக்கப்படாது (எ-று).

'அது' என்றது துணையின்று கழிதலை[4]. பூப்பினால் துணை யின்றிக் கழிதல் பொருந்திற்றாயினும், பூப்பின்றி ஒருநாளும்

---

1. 'ஈண்டுத் துணையென்றது பாங்கனாயிற்று' என்பர் இளம்பூரணர். ''எதிர்ப்பட்ட தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்வதன் முன் பாங்கற்கு உணர்த் தவும் பெறும்'' என்னும் இவ்வுரை பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. பாங்கற்கு உணர்த்துவானாயின் அது பாங்கற் கூட்டமாகுமேயன்றி இயற்கைப் புணர்ச்சியாகாது.

2. இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என மூன்று நாள் என்னும் எல்லைக்குளன்றிக் களவிற்புணர்ச்சி கூட்டுவிப்போர் துணையின்றி நடவாதென்பது கருத்து

3. இங்கு 'முந்நாள்' என்றது, மூன்று நாட்களாகிய காலவெல்லையைக் குறித்ததேயன்றிப் பூப்பின் புறப்பாடாகிய ஈறாறு நாட்களில் முதல் மூன்று நாளைக் குறித்தது எனக் கொள்ளுதற்கு இடமில்லை. அன்றியும் 'துணை' என்பது துணையாவாரைக் குறிப்பதன்றிக் கூட்டம் என்ற பொருளைத் தராது.

4. 'அது' என்னும் சுட்டு 'துணை' என்னும் பெயர்ப் பொருளையோ அன்றித் 'துணையின்று கழியாது' என்னும் எதிர்மறைவினையையோ சுட்டாது 'கழியாது' என்னும் எதிர்மறையின் முதனிலையாகிய கழிதலைச் சுட்டிற்று என்பர் நச்சினார்க்கினியர். 'அது' என்னுஞ் சுட்டு 'துணை' யென்னும் பெயரைச் சுட்டுதலே இயல்பாகும்.

இரண்டுநாளுந் துணையின்றிக் கழிதல் வழுவாமெனக் கருதின் அதுவும் புறத்தார்க்குப் புலனாம் என்று அஞ்சுதலாற் கழிதலின் வழுவாகாவென்றற்கு 'வரைவின்று' என்றார். இன்னோரன்ன காரணந் தலைவற்கின்மையின் அவனால் துணையின்றிக் கழிதல் இன்றாயிற்று.

உ-ம்: *''குக்கூ வென்றது கோழி அதனெதிர்*
*துட்கென் றற்றென் றூஉ நெஞ்சம்*
*தோடோய் காதலர்ப் பிரிக்கும்*
*வாள்போல் வைகறை வந்தன் றா லெனவே''* (குறுந்.157)

இது முந்நாளைப் பிரிவாகிய பூப்பிடைப் பிரிவு வந்துழித் தலைவி கூறியது.

இனி அல்லகுறிப்பட்டுழி ஒருநாளும் இரண்டுநாளும் இடையீடாமென்றுணர்க. பூப்புநிகழாத காலத்துக் களவொழுக்கம் பூப்பு நிகழ்காலம் வரையப்பட்டதென்று உரைப்பாரும் உளர்; இவ் விதி அந்தணர்க்குக் கூறியதன்று; அரசர் வணிகராதியவர்க்குச் சிறுபான்மையாகவும், ஏனை வேளாளர், ஆயர், வேட்டுவர் முதலியோர்க்குப் பெரும்பான்மையாகவுங் கூறிய விதியென்றுணர்க.[1] என்னை? பூப்பு நிகழுங்காலத்து வரையாது களவொழுக்கம் நிகழ்த்தினார்க்கு,

*''அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான*
*வந்த குற்றம் வழிகெட வொழுகலும்''* (தொல்.கற்பியல்,5)

என்பதனாற் பிராயச்சித்தம் விதிப்பாராதலின்.

---

1. 'இவ்விதி அரசர் வணிகர் முதலியோர்க்குச் சிறுபான்மையாகவும் ஏனை வேளாளர், ஆயர், வேட்டுவர் முதலியோர்க்குப் பெரும்பான்மையாகவும்கூறப்பட்டது' எனவும்,' அந்தணர்க்கு,

'அந்தரத் தெழுதிய எழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட வொழுகலும்' (கற்பியல் - ரு.)

என்பதனாற் பிராயச்சித்தம்விதிப்பர்' எனவும் நச்சினார்க்கினியர் கூறும் வருணவேறுபாட்டிற்குரிய குறிப்பெதுவும் இந்நூற்பாவில் இடம் பெறாமையின் இவ்வுரை தொல்காப்பியர் கருத்துக்கு மாறுபட்டதெனத் தெளிதல் எளிதாம்.

இதனானே அந்தணர் மகளிர்க்கும் பூப்பெய்தியக்கால் அறத்தொடு நின்றும் வரைதல் பெறுதும். (௯௪)

**ஆய்வுரை**

இது, தோழியின் துணைபெற்றாலன்றிக் களவொழுக்கம் தொடர்ந்து நிகழ்தல் இயலாது என்கின்றது.

(இ-ள்) களவிற் புணர்ச்சி மூன்று நாட்கள் என்னும் கால எல்லைக்கு உட்பட்டல்லது தோழியின் துணையின்றித் தொடர்ந்து நிகழாது. மூன்று நாட்களாகிய கால எல்லைக்குள்ளும் தோழியின் துணை கிடைக்குமாயின் வரைவின்றி ஏற்றுக் கொள்ளப்படும் எ-று.

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்னும் மூன்று நாள் எல்லையளவும் தலைவன் தோழியின் துணையின்றித் தலைமகளைக் கண்டு அளவளாவுதல் கூடும் என்பதும், மூன்று நாட்களுக்கு மேலாயின் தோழியின் இசைவின்றித் தலைமகன் தலைமகளை எதிர்ப்படுதல் அரிது என்பதும், மூன்று நாட்களாகிய அவ்வெல்லைக்குள்ளேயே தோழியின் துணையினைப் பெறுதலும் உண்டென்பதும் இந்நூற்பாவாற் புலனாம்.

இங்குத் 'துணை' என்றது தோழியை. இது, 'துணைச் சுட்டுக் கிளவி' என அடுத்து வரும் நூற்பாவால் இனிது புலனாம்.

௯௫. பன்னூறு வகையினுந் தன்வயின் வருஉம்
நன்னய மருங்கின் நாட்டம் வேண்டலின்
துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்[1]
துணையோர் கரும மாத லான.

**இளம்பூரணம்**

இது, தலைவிக்கு உரியதோரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பன்னூறு வகையினும் என்பது - பலவகையானும் என்றவாறு. நூறு, பத்து, ஆயிரம் என்பன பல்பொருட் பெயர்.

1 'துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாகும்' என்றமையால் ஈண்டுத் 'தன்' என்றது தலைவியை எனக்கொள்ளுதலே பொருத்தம்.

தன்வயின்வருஉ....மாதலான என்பது—தன்னிடத்து வரும் நல்ல நயப்பாட்டுப் பக்கத்தினை ஆராய்தல் தலைவன் மாட்டு வேண்டுமாதலால், துணையைச் சுட்டிக்கூறலுறும் சொல் தலைமகளதாகும்; தான் கூறும் கருமம் துணையோராற் செய்யப்படும் கருமமாதலான் என்றவாறு.

எனவே, தலைமகன் களவுக்காலத்துப் பாங்கற்கு உற்றதுரைத்த பின்பு பாங்கனைச் சுட்டி யாது செய்வாமெனக் கூறப்பெறும் என்றவாறாயிற்று[1] (௧௧)

**நச்சினார்க்கினியம்**

இது, தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) தன்வயின் வருஉம் நன்னய மருங்கின் - தலைவியிடத்தே தோழிக்குஞ் செவிலிக்கும் வருகின்ற அன்பு மிகுதிக் கண்ணே; பல்நூறு வகையினும் நாட்டம் வேண்டலில் - பல நூறாகிய பகுதியானும் ஆக்கமுங் கேடும் ஆராய்தலை அவர் விரும்புதலாலே; துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாகும் - இவள் ஒரு துணையுடையளென அவர் சுட்டுதலிடத்துக் கிளக்குங்கிளவி தலைவியதாம்; துணையோர் கருமம் ஆகலான - அக் கிளவி அத் தோழியானுஞ் செவிலியானும் முடியுங்காரியம் ஆகலான் (எ - று).

என்றது, தோழி 'பலவேறு கவர்பொருணாட்டம்' (114) உற்றவழியுஞ் செவிலி களவு அலராதல் முதலியவற்றான் (115) நாட்டமுற்ற வழியுந் தலைவி அறத்தொடு நிற்குமென்று அறத்தொடு நிலைக்கு இலக்கணங் கூறியவாறாயிற்று.[2] தோழிக்குத்

---

1. இந்நூற்பாவுரையின் கீழ்க்காணப்படும் 'எனவே ... என்றவாறாயிற்று' என்னும் இவ்வுரைத்தொடர் பொருட்பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

2. இந்நூற்பா, அறத்தொடு நிலைக்கு இலக்கணம் கூறியவாறாயிற்று என்பர் நச்சினார்க்கினியர். 'உயிரினுஞ் சிறந்தன்று நாணே ...... தாவினன் மொழி கிழவி கிளப்பினும்'' எனத் தலைவி கூற்றாகவும், 'முன்னிலையறனெனப் படுதல் என்றிருவகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' எனத் தோழி கூற்றாகவும் அறத்தொடு நிலையினை யெடுத்துரைத்த தொல்காப்பியர் ஈண்டு மீண்டும் 'துணைச் சுட்டுக் கிளவி கிழவியதாகும்' என அதனையே கூறினாரென்றல் கூறியது கூறல் என்னும் குற்றத்திற்கு இடனாதல் காண்க.

இந்நூற்பாவில் தலைவியாற் சுட்டப்படுந் துணையென்றது தலைவியுடன் தோன்றித் தோன்றும் தோழியையே என்பதும் தாயாவாள் செவிலியே என்பதும் இந்நூற்பாவாலும் அடுத்துவரும் நூற்பாவாலும் நன்கு தெளியப்படும்.

தலைவி அறத்தொடு நிற்ப, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்குமென்று உணர்க. இதனானே பாங்கற்கு உற்றதுரைத்த பின்னர்த் தலைவன் உரையாமையும் பெற்றாம்[1]. "புனையிழை நோக்கியும்" (கலி. 76) என்னும் மருதக் கலியுள், "வினவுதியாயின்" என நாட்டம் நிகழ்ந்தவாறும், அதன் சுரிதகத்துக் கூட்டமுண்மை கூறுதலின் துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாயவாறுங் காண்க.

"கொடியவுங் கோட்டவும்" (கலி. 54.) என்பதன் சுரி தகத்துச் செவிலிக்கு உரையாயெனக் கூறியவாறுங் காண்க. (௩௨)

**ஆய்வுரை**

இது, களவொழுக்கத்துக்குரிய துணையினைச் சுட்டுதல் தலைவியின் கடமை என்பது உணர்த்துகின்றது.

(இ-ள்.) பல்நூறு வகையாலுந் தலைமகள் பால் உளவாகும் நன்மைப் பகுதியாகியவிரும்பத்தக்க சூழ்நிலைகளை ஊன்றிநோக்கும் உணர்வு தலைவனுக்கு வேண்டுமாதலானும், தாங்கள் இருவரும் மேற்கொண்ட அன்பின் வழிப்பட்ட களவொழுக்கம் ஒன்றிய அன்புடைய துணையாகிய தோழியால் புறத்தாரறியாது தொடர்ந்து நிகழ்தல் வேண்டுமாதலானும், தனக்குத் துணையாவாள் இவள் எனத் தன் ஆருயிர்த் தோழியைத் தலைவனுக்குச்சுட்டிக்கூறுஞ்சொல் தலைவிக்கு உரியதாகும் எ-று.

தலைமகளுக்கு நன்மைகள் உளவாதற்குரிய திறங்கள் எல்லாவற்றையும் எஞ்சாமல் தொகுத்துக் கூறும் முறையிற் 'பன்னூறு வகையினும்' என்றார். நாட்டம் - ஊன்றிநோக்கும் உணர்வு. துணையோர் கருமம் - உள்ளம் ஒன்றிய நண்புடைய துணைவரால்

---

1. "பாங்கற்கு உற்றதுரைத்த பின்னர்த் தலைவன் உரையாமையும் பெற்றாம்" எனவரும் இவ்வுரைத் தொடர் சங்கவிலக்கிய ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன் தருவதாகும். இதனால் களவொழுக்கத்தில் தலைவன் தலைவி யிருவரைத் தவிர மூன்றாமவராக இடைநின்று நிறைவேற்றும் பொறுப்பு பாங்கியொருத்திக்கே யுண்மையும், தலைவனது அன்பின் வழிப்பட்ட களவொழுக்கத்திற்கு இசைவளித்தலொன்றே பாங்கன் செயலாதலின் அதுபற்றிப் பின்னுந் தலைவனை வினவுங்கருத்து பாங்கற்கு இல்லையென்பதும், பாங்கனுள்ளத்தில் அக்கருத்துத் தோன்றி மறைபுலப்படுத்தியவாறாம் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதல் நன்கு புலனாம்.

நிறைவேற்றுதற்குரிய செயல். 'நாட்டம் வேண்டலின்' என்புழி இன்னும், 'துணையோர்க் கருமம் ஆகலான்' என்புழி ஆனும் ஏதுப் பொருளில் வந்தன.

௩௪. ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவாள் செவிலி யாகும்.

இளம்பூரணம்

இது, செவிலிக்கு உரியதொரு சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நல்ல பெரிய சிறப்பினையுடைய அறிதற்கரிய மறைப்பொருள் யாவற்றையுங் கூறும் கடப்பாடுடையளாதலின் தாய் எனப்படுவாள் செவிலியாகும் என்றவாறு.

நற்றாய் இத்துணைச் சிறப்பிலள் என்றவாறு. இதனாற் பயன் களவுக் காலத்தையச் சொ......செவிலித்தாய்க்குங் கைத்தாய்க்கும் பொதுவாயினும், தாயென்று வேண்டப்படுவாள் செவிலி என்றறிவித்தல்.[1] (௩௪)

நச்சினார்க்கினியம்

(இ - ள்.) ஆய்பெருஞ் சிறப்பின் - தாய்த்தாய்க்கொண்டு உயிர் ஒன்றாய்வருகின்றாளென்று[2] ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ்சிறப்புக் காரணமாக; அருமறை கிளத்தலின் - கூறுதற் கரிய மறைபொரு ளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றாற் கூறத் தக்காளாதலின்; தாயெனப்படுவாள் செவிலி ஆகும் - தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம் (எ - று).

---

1. கைத்தாய் என்பவள், தலைவியை எடுத்து வளர்க்கும் பணியினை மேற்கொண்ட பணிப்பெண் எனவும், செவிலித்தாய்க்குரிய சிறப்பு இவட்கு இல்லை எனபதும் இளம்பூரணர் கருத்தெனத் தெரிகிறது.

2. தாய்த்தாய்க்கொண்டு உயிரொன்றாய் வருகின்றாள் என்றது தோழியின் தாயாகிய செவிலியும் அவளுக்குத் தாயும், தலைவியின் தாயாகிய நற்றாயும் அவளுக்குத் தாயும் என இவர்கள் உயிரொன்றிய கேளிராய் வருதல்போலத் தோழியும் தலைவிக்கு உயிரொன்றாய் வருகின்றாள் என்பதாம்.

எனவே ஈன்ற தாயினும் களவின்கட் சிறந்தாள் இவளென்றார்[1]. கற்பிற்கு இருவரும் ஒப்பாராயிற்று. செவிலி சிறந்தமை சான்றோர் செய்யுளுட் பலருங் கூறியவாறு காண்க. (௩௩)

**ஆய்வுரை**

இது, களவொழுக்கத்தில் தாய் எனக் குறிக்கப்படுபவள் செவிலியே என்கின்றது.

(இ-ள்.) ஆராய்தற்குரிய பெருஞ்சிறப்பினையுடைய அருமை வாய்ந்ததாய் உலகத்தாரறியாது மறைவில் நிகழும் அன்புரிமை ஒழுகலாற்றினைக் கூறுதற்குரிமை யுடையவளாதலின் (தலைவி தோழி என்னும் இருவராலும்) தாய் எனச் சிறப்பாகக் கூறப்படுபவள் செவிலித்தாய் ஆவாள் எ-று.

அறிவால் நிரம்பிய சான்றோர்களால் ஆராய்ந்து துணிதற்குரிய பெருஞ் சிறப்புடையதாய் ஒத்த அன்பினராகிய ஒருவன் ஒருத்தி என்னும் இருவரிடையே மறையில் நிகழும் கேண்மை என்பார், 'ஆய் பெருஞ்சிறப்பின் அருமறை' என்றார். மறைந்த ஒழுக்கமாகிய இதனை உய்த்துணர்ந்து தோழியை வினவிக் கேட்டற்கும் அவ்வருமறையை நற்றாய்க்குக் கூறுதற்கும் உரிய பழங்கேண்மையுடையாள் செவிலி என்பார், 'அருமறைகிளத்தலின் தாயெனப்படுவோள் செவிலியாகும்' என்றார். 'கிளத்தல்' என்றது தோழியாற் செவிலிக்குக் கிளக்கப் படுதலையும் நற்றாய்க்குச் செவிலி கிளத்தலையும் பொதுப்படச் சுட்டி நின்றது.

௩௫. தோழி தானே செவிலி மகளே.

**இளம்பூரணம்**

இது, தோழிக்கு உரியதொரு சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) களவுக்காலத்தும் இன்றியமையாளாகத் தலைவி யால் வேண்டப்பட்டாள் செவிலிமகள் என்றவாறு

---

1. களவொழுக்கத்தில் பெற்ற தாயினும் சிறந்தாளாகித் தாயென்று பேசப் படும் உரிமையுடையாள் செவிலியே என்றவாறு.

எனவே, பயின்றா ரெல்லாருந் தோழியராகார். அருமறை கிளக்கப் படுதலான் உடன் முலையுண்டு வளர்ந்த செவிலி மகளே தோழி எனப்படுவாள் என்றவாறு. அருமறை கிளத்தல் என்பதனை யீண்டு வருவிக்க[1]

நச்சினார்க்கினியம்

இது தோழியது சிறப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) தோழி தானே - தோழியர் பலருள்ளும் ஒருத்தி யெனப் பிரிக்கப்படுவாள்; செவிலி மகளே - முற்கூறிய செவிலி யுடைய மகள் (எ-று)

இதற்கும் அருமறை கிளத்தல் அதிகாரத்தாற் கொள்க.[2] தாய்த்தாய்க் கொண்டு வருகின்றமையின் உழுவலன்பு போல்வ தோர் அன்பு உடையர் இருவருமென்று கொள்க. இதனானே களவிற்குத் தோழியே சிறந்தாளாயிற்று; அது சான்றோர் செய்யுளுட் காண்க. (௩௰)

ஆய்வுரை

இது, தோழியாவாள் இவள் என்கின்றது.

(இ-ள்.) தலைமகளது உணர்வுடன் ஒன்றிய வுணர்வினளாகிய தோழியாவாள் செவிலியின் மகள் எ-று.

'தோழிதானே' என்புழி ஏகாரம் 'ஒன்றித் தோன்றும் தோழி' என அகத்திணையியலிலும் 'தாங்கருஞ் சிறப்பின் தோழி' என இவ் வியலிலும் சிறப்பித்துரைக்கப்பெற்ற தோழியைத் தனித்து வாங்கிக் கூறுதலின் பிரிநிலையேகாரம்.

---

1. மேலைச் சூத்திரத்தில் அருமறை கிளத்தல் எனச் செவிலிக்குக் கூறிய உணர்வு உரிமை அவள் மகளுக்கும் உரியதாதலின் தோழிதானே செவிலிமகள் என்றார் என்பார் 'அருமறைகிளத்தல் என்பதனை ஈண்டு வருவிக்க' என்றார்.

2. மேலைச் சூத்திரத்தில் செவிலிக்குரியதாகக் கூறப்பட்ட அருமறை கிளத்தலை அதிகாரத்தால் தோழிக்குங் கொள்க என்பதாம்.

௩௬. சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே.

**இளம்பூரணம்**

இது, தோழிக்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட தோழி தான் சூழ்தற்கும் தலைவி சூழ்ச்சிக்கு உசாத்துணையாகியும் வரும் நிலைமையாற் பொலிவுபெறும் என்றவாறு.[1]

எனவே, செவிலிமகள் என்னுந் துணையாற் பொலிவுபெறாள்; என்றும் தோழியாவாள் செவிலிமகளாதலேயன்றிச் சூழவும் உசாத் துணையாகவும் வல்லள் ஆதல்வேண்டும் என்றவாறு.

செய்யுள் மேற்காட்டப்பட்டன. (௩௬)

**நச்சினார்க்கினியம்**

இதுவுந் தோழி சிறப்பினையே கூறுகின்றது.

(இ-ள்.) உசாத்துணை நிலைமையின் - தலைமகனுந் தலை மகளும் உசாவுதற்குத் துணைமைசான்ற நிலைமையினாலே; சூழ்-தலும் பொலிமே-புணர்ச்சி யுண்மையை ஏழுவகையானுஞ் சூழ்தற் கண்ணும் பொலிவுபெறும் (எ-று).

எனவே, இம்மூன்று நிலைக்குந் தோழி உரியள் என்றார்.[2] உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. (௩௫)

**ஆய்வுரை**

இது, தோழிக்கு இன்றியமையாததோர் இயல்புணர்த்து கின்றது.

(இ-ள்.) மேற்குறித்த தோழியாவாள் செவிலியின் மகள் என்ற அளவிலன்றித் தலைமகளைக் குறித்துத் தன் மனத்துள்ளே ஆராய் தற்கும், தலைமகளுக்குச் சூழ்ச்சித்துணையாக இருந்து அறிவுரை வழங்குதற்கும் உரிய தோழமை நிலைமையிற் பொழிவுபெற்று விளங்குவாள் எ-று.

1. சூழ்தலாவது ஆராய்தல். உசாத்துணை நிலைமையாவது அங்ஙனம் ஆராயும் ஆராய்ச்சிக்கு உடனிருந்து வினாவும் விடையும் நிகழ்த்தித் துணையாதல் 'பொலியும்' என்னும் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றின் உயிர்மெய்கெட்டுப் பொலிம் என நின்றது. ஏகாரம் ஈற்றசை.

2. அருமறை கிளத்தல், சூழ்தல், உசாத்துணையாதல் என்னும் இம் மூன்றற்கும் உரிமையுடையாள் தோழி என்றவாறு.

தோழியின் சிறப்பிலக்கணம் கூறும் இத்தொடரும் அவள் இன்ன தொடர்புடையாள் எனச் சுட்டும் மேலை நூற்பாவும் தொல்காப்பியனாரால் ஒரே சூத்திரமாக இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது;

> ''தோழி தானே செவிலி மகளே
> சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே''

என ஒரேதொகையில் அமைந்து ஒருபொருள் குறித்து வருதலால் இனிது புலனாகும். தோழியாவாள் இவள் எனவும் அவளது சிறப்பியல்பு இதுவெனவும் பகுத்துரைக்கும் நோக்கில் இரு சூத்திரங்களாகப் பிரித்து உரைவரையப் பெற்றதெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். உசா — சூழ்ச்சி; இனிச் செய்ய வேண்டுவது யாது என எண்ணி ஆராயும் ஆராய்ச்சி. துணை- அவ்வாராய்ச்சிக்குத் துணையாயிருந்து அறிவுரை பகர்தல். 'செய்யும்' என்னும் வாய்பாட்டு முற்றாகிய 'பொலியும்' என்பது, ஈற்றுமிசையுகரம் மெய்யொடு கெட்டுப் 'பொலிம்' என நின்றது. 'செய்யுமென்னும் பெயரெஞ்சுகிளவிக்கு ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங் கெடும்' (தொல்.சொல்.238). எனவே ''செய்யும் என்னும் முற்றுச் சொல்லுக்கு ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெடும்; மெய்யொழிந்துங்கெடும்'' என வரும் சேனாவரையர் உரைவிளக்கம் இங்கு நினைக்கத் தகுவதாகும்.

௩௫. குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென்
மதியுடம் படுதல் ஒருமூ வகைத்தே.

இளம்பூரணம்

இது தலைவன் புணர்ச்சி யுண்மை தோழி அறியுந் திறன் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தலைவன் குறையுற வுணர்தலும் அவன் குறையுறாவழித் தலைவி குறிப்புக்கண்டு உணர்தலும் தானும் தலைவியுங் கூடியிருந்துழித் தலைவன் வரவு கண்டு உணர்தலும் என மூவகைத்துத் தோழி அறிவுடம்படுதற்கண் என்றவாறு.

மதியுடப் படுதல் எனினும் புணர்ச்சியுணர்தல் எனினும் ஒக்கும் இம்மூன்றினும் ஒன்று கண்டுழி அவாவர் குறிப்பினாற் புணர்ச்சியுணரும் என்றவாறு. 'குறையுணர்தல்' முன்வைத்தார் நன்கு புலப்படுதலின். 'முன்னுறவுணர்தல்' அதன்பின் வைத்தார், தலைவி வேறுபாடுகண்டு பண்டையிற்போலாள் என்னும் நிகழ்ச்சியான் முற்றத்துணிவின்மையின், 'இருவரு முள்வழி யவன் வரவுணர்தல்' அதன் பின் வைத்தார். ஆண்டுப் புதுவோன்போலத் தலைவன் வருதலானும் தலைவி கரந்த உள்ளத்தளாய் நிற்குமாதலானும் அத்துணைப் புலப்பாடின்மையின். அக்கருத்தினானே மேற்சொல்லப்பட்ட தோழிகூற்று மூவகையாகப் பொருள் உரைத்ததென்று கொள்க[1]. (கூஎ)

நச்சினார்க்கினியம்

இஃது, அந்தோழி சூழ்ச்சி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ - ள்.) குறையுற உணர்தல் - தலைவன் தோழியை இரந்து குறையுற்றவழி உணர்தல்; முன் உற உணர்தல் - முன்னம் மிக உணர்தல்; இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் - தலைவியுந் தோழியும் ஒருங்கிருந்தவழித் தலைவன் வருதலால் தலைவன் குறிப்புந் தலைவி குறிப்புங் கண்டுணர்தல்; என மதியுடம் படுத்தல் ஒரு மூவகைத்தே - என்று இருவர் கருத்தினையுந் தன் கருத்தினோடு ஒன்றுபடுத்துணர்தல் ஒருமூன்று கூற்றினையுடைத்து (எ - று).

எண்ணுதல் எண்ணென்றாற்போல முன்னுதல் 'முன்' னென நின்றது. உயிர்கலந்தொன்றலிற் குறிப்பின்றியும் பாக முணர்வாள் குறிப்புப் பெற்றுழி மிகவுணரும் என்று கொள்க. இது மூவர் மதியினையும் ஒன்றுபடுத்துதலின் மதியுடம்படுத்தலென்று பெயராயிற்று.[2] இம் மூன்றுங் கூடிய பின்னரல்லது மதியுடம்படுத்த லின்றென்றற்கு மூவகைத்தென்று ஒருமையாற் கூறினார். 'முன்னுற' வென்றதனை

1. தோழி கூற்று மூவகையாகப் பொருளுரைத்தமை களவியல் 24—ஆம் நூற்பாவின் உரைமுடிவிற் கண்டு தெளிக.

2. மதி—அறிவு. உடம்படுத்தல் — ஒன்றுபடுத்து உணர்தல். மதியுடம்படுத்தலாவது, தலைவன் தலைவியாகிய இருவர் கருத்தினையும் தோழி தன் கருத்தினோடு ஒன்றுபடுத்தி உணர்தல். இவ்வாறு மூவர் மதியினையும் ஒன்றுபடுத்துதலின் மதியுடம்படுத்தல் என்னும் பெயர்த்தாயிற்று.

'முந்துற' வென்றாரோவெனின்[1] குறையுறுதலான் உணர்தல் அவன் வருதலான் உணர்தலென்று இரண்டற்குக் காரணங் கூறுதலின். இதற்குங் குறிப்புமிகுதலான் உணர்தலெனக் காரணங் கொடுத்தல் வேண்டுமென்றுணர்க.[2] 'நாற்றமுந் தோற்றமும்' (தொல். பொ. 114) என்பதனுட் கூறியவாறன்றி முன்னுறலை இடைவைத்தார், அவ்விரண்டினான் உணருங்காலும் இக் குறிப்பான் உணரவேண்டு மென்றற்கு. இம்மூன்றும் முற்கூறிற்றேனும் ஒரோவொன்றாற் கூட்டமுணரில் தலைவியை நன்கு மதித்திலளாமென்றற்கு இம் மூன்றும் வேண்டுமென்று ஈண்டுக் கூறினார்.[3]

உ-ம்: *"கோனே ரெல்வளை தெளிர்ப்ப நின்போல்*
*யானு மாடிக் காண்கோ தோழி"*   (ஐங்குறு.99)

இது கூட்டமுணராதாள்போல நாணிற்கு மாறாகாமற் கூறலின் முன்னுற வுணர்தல்.

*"நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவாய்*
*என்னீ பெறாத திதென்."*   (கலி.61)

இது குறையுற வுணர்தல்.

---

1. முன் உற உணர்தல் எனப் பிரித்துப் பொருள் கொள்ளாமல், முன் உறவு உணர்தல் எனப் பிரித்துத் 'தலைவன் தலைவி இருவர்க்கும் இயற்கைப் புணர்ச்சிக்கண் உண்டாகிய முந்தைய உறவினைத் தோழி உணர்தல்' எனப் பொருள் உரைத்தால் வரும் குற்றம் என்னையெனின்' என வினவுதல் இத் தொடரின் கருத்தாகும்.

2. இந்நூற்பாவிற் கூறப்பட்ட மூவகையுணர்வுகளில் முன்னுறவுணர்தல் என்பதன் முன்னும் பின்னும் வந்த செயவெனெச்சங்கள், குறையுறுதலான் உணர்தல், அவன் வருதலான் உணர்தல் என ஏதுப்பொருளவாய் நின்று காரணங் கூறுதலால் இவற்றிடையே நின்ற 'முன்னுறவுணர்தல்' என்னும் இத் தொடர்க்கும் 'முன் உற உணர்தல்-குறிப்பு மிகுதலான் உணர்தல்' எனக் காரணங்கொடுத்தல் வேண்டும் என்பது நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாகும்.

3. இம்மூன்றும் இவ்வியல் 23-ஆம் நூற்பாவில் தோழி கூற்றிற் கூறப்பட்டன வாயினும் இம்மூன்றனுள் ஒவ்வொன்றே பற்றி இருவர்க்குங் கூட்ட முண்மையைத் தோழி துணிவாளாயின் அத்துணிவு தலைவியை நன்கு மதியாமையாய் முடியுமாதலால் தலைவனொடு தலைவிக்குக் கூட்ட முண்மையுணர்தற்கு இம்மூவகையுணர் வுகளும் ஒருங்கு வேண்டப்படும் என்பதாம்.

''ஏனல் காவ லிவளு மல்லள்''
என்பது அவன் வரவுணர்தல். (௩௯)

**ஆய்வுரை**

இது, பாங்கிமதியுடப்பாடு முத்திறப்பட்டு நிகழும் என்கிறது.

(இ-ள்.) தலைவன் தன்பால் வந்து இரந்து குறையுற்று நிற்றலால் அவனது உள்ளக் கருத்தினையுணர்தலும், தலைவியின் உள்ளக் குறிப்பினைக் கண்டுணர்தலும், தலைவியும் தானும் ஒருங்கிருந்த நிலையில் வர அந்நிலையில் அவ்விருவரது உள்ளக் கருத்தினையுணர்தலும் எனத் தோழி, தன் கருத்துடன் அவ்விருவரது கருத்தினையும் வைத்து ஒன்றுபடுத்து உணரும் உணர்ச்சி மூவகைப்படும் என்பர் ஆசிரியர் எ-று.

பாங்கிமதியுடம்பாடாவது தலைவன் தலைவி யென்னும் காதலர் இருவரது அறிவினையும் தோழி தன்னறிவினால் ஒருங்கு வைத்து ஆராய்ந்து அவ்விருவரிடையே நெருங்கிய தொடர்புண்மை துணிதல். குறையுறவுணர்தல் என்பது, தலைவன் தோழியின்பால் குறையிரந்து நின்றநிலையில் 'இவன் என்னை இரந்து பின்னிற்கின்றது எதுகருதியோ?' என ஆராய்ந்துணர்தல். முன்னுறவுணர்தல் என்பது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர்த் தலைமகளது வேறுபாடு கண்ட தோழி, 'இவளது மேனி வேறுபாடு தெய்வத்தால் ஆயிற்றோ? பிறிதொருவாற்றான் ஆயிற்றோ?' என ஐயுற்றுக் குறிப்பினால் உணர்தல். இருவரும் உள்வழி அவன்வர உணர்தல் என்பது, மேற்குறித்த ஐயவுணர்வுகளோடு நின்ற தோழி, தானும் தலைவியும் ஆகிய இருவரும் உடனிருந்த நிலைமைக்கண் தலைவன் அங்கு வந்து தோழியை நோக்கி ஊரும் பெயரும் பிறவும் வினவி நின்றானாக, அந்நிலையில் அவ்விருவர் குறிப்பும் உணர்ந்து தலைவியொடு தலைவனிடை முன்னமேயுள்ள தொடர்பினையுணர்ந்து துணிதல். தொல்காப்பியனார் தோழிக்குரியவாகச் சுட்டிய இவ் மூவகையுணர்வுகளையும்,

''முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென்
றம்மூன் றென்ப தோழிக் குணர்ச்சி'' (7)

எனவரும் நூற்பாவில் இறையனார் களவியலாசிரியர் எடுத்தாண்டுள்ளமை இங்கு ஒப்புநோக்கியுணரத்தகுவதாகும்.

இங்ஙனம் பாங்கி தன் அறிவினுடன் தலைவன் தலைவி என்னும் இருவர் அறிவினையும் ஒன்றுபடுத்துணர்தலின் மதியுடம் படுத்தல் என்று பெயராயிற்று. மதி - அறிவு. உடம்படுத்தல் - ஒன்று படுத்தி உணர்தல்.

௩௮. அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது
பின்னிலை முயற்சி பெறாள்என[1] மொழிப.

**இளம்பூரணம்**

இதுவும் தோழிக்கு உரியதொரு திறன்உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட கூறுபாட்டான் இருவர் மாட்டும் அன்புடைமை உணர்ந்தபின் அல்லது வழிபாட்டு நிலைமையாற் கூட்டத்திற்கு முயலப்பெறாள் தோழி என்றவாறு.

அஃதேல், உள்ளப்புணர்ச்சியானின்று மெய்யுறாது கூட்டத்திற்கு முயல்வார் உளர். ஆயின், அஃதெற்றாற்பெறும் எனின் ஆண்டும் இருவர் மாட்டுளதாகிய அன்புடைமையான் மனநிகழ்ச்சியுளவாக அந்நிகழ்ச்சி கண்டுழியும் முயலப்பெறுமென்று கொள்க. அதனானே யன்றே 'முன்னுறவுணர்தல்' என்னும் சூத்திரத்தினும் 'புணர்ச்சி யுடம்படுதல்' என்னாது 'மதியுடம்படுத லொரு மூவகைய' எனப் பொதுப்பட ஓதுவாராயிற் றென்க அவ்வன்பினான் வருநிகழ்ச்சி யுள்ளவழியும் இவ்விடமூன்றினும் காணுமுண்மை அறியலாகும்.[2]
(௩௮)

**நச்சினார்க்கினியம்**

இது மதியுடம்பட்ட பின்னல்லது தலைவன் கூற்று நிகழ்த் தப் பெறானென்கிறது.

---

1. இந்நூற்பா தோழிக்குரியதோர் திறனுரைத்ததாகக் கருத்துரைத்த இளம்பூரணர், 'பின்னிலை முயற்சி பெறாளெனமொழிப' எனப் பாடங்கொண்டார். "மேற் சொல்லப்பட்ட மூவகையால் தலைவன் தலைவியிருவரும் ஒத்த அன்புடையராதலைத் தோழி உணர்ந்த பின் அல்லது இரந்து பின்னிற்கும் தலைவனது விருப்பத்தினை மட்டும் ஏற்றுக் கூட்டத்திற்கு முயலப் பெறாள்" என்பது இந்நூற் பாவுக்கு இளம்பூரணர் கூறும் பொருளாகும்.

2. தலைவன் தலைவியிருவரும் இயற்கைப் புணர்ச்சியில் உள்ளப் புணர்ச்சியளவில் அன்புசெய்தொழுகினாராயினும் அந்நிகழ்ச்சி, குறையுறவுணர்தல், முன்னுறவுணர்தல், இருவருமுள்வழி அவன் வரவுணர்தல் என்னும் இவ்விடம் மூன்றினும் அறியலாகும் என்பதாம்.

(இ-ள்.) அன்னவகையான் உணர்ந்தபின் அல்லது-அம் மூவகையானுந் தோழி மதியுடம்படுத்த பின்னல்லது; பின்னிலை-இவன் ஒரு குறையுடையனென்று தோழி உய்த்துணர நிற்கு மிடத்து; முயற்சிபெறான் என மொழிப - கூற்றான் அக்குறை முடித்தல் வேண்டுமென்று முடுக்குதல் பெறானென்று கூறுப ஆசிரியர் (எ-று).

தோழி தன்னை வழிபட்டவாறு கண்டு மதியுடம்பட்ட வாறுணர்ந்து கூற்றான் உணர்த்தும்.[1]

அது "நெருநலு முன்னாள்" என்பதனுள் "ஆரஞர்வருத் தங் களையாயோ" என்றவாறு காண்க. (௩௭)

**ஆய்வுரை**

இதுவும் தோழிக்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்குறித்த மூவகையாலும் தலைவன் தலைவி என்னும் இருவர்பாலும் ஒத்த அன்புடைமையுணர்ந்த பின்னன்றித் தன்னை இரந்து பின்னிற்கும் தலைவனது முயற்சிக்குத் தோழி இடந்தரமாட்டாள் எ-று.

அகனைந்திணையொழுகலாற்றில் இடம் பெறும் தோழியின் செறிவும் நிறையும் செம்மையும் அறிவும் அருமையுமாகிய பெண்மைப் பண்புகள் இந்நூற்பாவால் புலப்படுத்தப்பெற்றமை உணர்தற் குரியதாகும். இத்தொல்காப்பிய நூற்பாவின் கருத்தை அடியொற்றி யமைந்தது,

*"முன்னுற வுணரினும் அவன்குறை யுற்ற*
*பின்ன ரல்லது கிளவி தோன்றாது"* (௯)

---

1. 'பின்னிலை முயற்சி பெறானென மொழிப' எனப் பாடங்கொண்ட நச்சினார்க்கினியர், இந்நூற்பா, களவொழுக்கம் ஒழுகும் தலைவனுக்குரிய திறன் உணர்த்துவதாகக் கொண்டு, 'மேற்கூறியவாறு மூவகையுணர்வால் தோழி மதியுடம்படுத்த பின்னன்றித் தலைமகன் தன் குறை முடித்தல் வேண்டும் எனத் தோழிக்கு வெளிப்படக்கூறி இரந்து பின்னிற்கும் முயற்சியை மேற்கொள்ளப் பெறுவானல்லன்' எனவும், 'தலைவியொடு தனக்குள்ள அன்பின் திறத்தையுணர்ந்து தோழி தன்னை வழிபடும் குறிப்பினளாதலையுணர்ந்த பின்னரே தன் குறையினைத் தோழிக்குச் சொல்லால் வெளியிட்டுரைத்தற்குரியன்' எனவும் விளக்கிய திறம் உளங்கொளத்தகுவதாகும்.

என வரும் இறையனார் களவியலாகும். மதியுடம்படுப்பக் கூட்ட முண்மையுணர்ந்த தோழி தலைவன் இரந்து பின்னின்ற பின்னன்றி அவன் குறையினை முடிப்பேன் எனக் கூற மாட்டாள் என்பதாம்.

இனி, 'பின்னிலை முயற்சி பெறான்' எனப் பாடங் கொண்டு 'குறையுறவுணர்தல் முதலாக மூவகையுணர்வால் தலைமகளொடு தனக்குள்ள அன்புரிமைத் தொடர்பினைத் தோழி உணர்ந்து வேண்டித் தோழியை இரந்து பின்னிற்கும் முயற்சியை மேற்கொள்ளப்பெறான்' எனப் பொருள் வரைந்து தலைவனது மறைபிறரறியா நிறையுடைமையைப் புலப்படுத்தியதாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

௩௯. முயற்சிக் காலத் ததற்பட நாடிப்
புணர்த்த லாற்றலும் அவள்வயி னான.[1]

**இளம்பூரணம்**

இதுவும் அது.

(இ-ள்) தோழி வழிமொழிந்து முயலுங்காலத்து அவன் நினைவின்கட்படுந்திறன் ஆராய்ந்து புணர்த்தலைச் செய்யும் அவளிடத்து என்றவாறு.

அஃதாவது, 'இன்னுழிச் செல்' எனவும் 'இன்னுழி வா' எனவும், தலைவியை ஆயத்துணின்றும் பிரித்துத் தனி நிறுத்திப் பட்டாங்கு[2] கூறியும் பிறவாற்றானும் ஆராய்ந்து கூட்டுதல்.

இவ்வைந்து சூத்திரத்தானுந் தோழிக்குரிய மரபு உணர்த்தியவாறு காண்க. (௩௯)

**நச்சினார்க்கினியம்**

இது தலைவன் முயற்சி கூறிய முறையே தோழி முயற்சி பிறக்குமிடங் கூறுகின்றது.

(இ-ள்.) முயற்சிக்காலத்து - தலைவன் அங்ஙனங் கூடுதற்கு முயற்சி நிகழ்த்துங்காலத்தே; நாடி அதற்படப் புணர்த்தலும் - தலைவி கூடுதற்கு முயலுங் கருத்தினை ஆராய்ந்து அக் கூட்டத்திடத்தே உள்ளம்படும்படி கூட்டுதலும்; அவள் வயின் ஆன ஆற்றல்- தோழியிடத்து உண்டான கடைப்பிடி (எ-று.).[3]

1. 'அவன்வயின்னா' எனப் பாடங்கொள்வர் நச்சினார்க்கினியர்.

2. பட்டாங்கு—உள்ளவாறு.

3. தலைவன் அங்ஙனம், தன்னைப் பின்னின்று முயலுங்காலத்தே அம் முறையே தலைவியின் மனக் குறிப்பையும் நாடி ஆராய்ந்து அவ்விருவரையும் மனை வாழ்க்கையில் ஒன்று படுத்தலாகிய கடைப்பிடியும் அத்தோழியின் கண்ணதேயாம் என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.

ஆற்றல் ஒன்றனை முடிவுபோக்கல்.[1] உம்மை, எச்சவும்மை.[2] மதியுடம்படுத்தலே யன்றிக் கூட்டவும் பெறுமென்க. (௩௮)

**ஆய்வுரை**

இதுவும் தோழிக்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைவன் தோழியை இரந்து பின்னின்று தலைவியை அடைய முயலுங்காலத்து அம்முயற்சியின் வழிநின்று (அவ்விருவரது உள்ளக் கருத்தினையும்) ஆராய்ந்த அவ்விருவரும் தம்முட்கூடி அன்பினால் அளவளாவும் வண்ணம் கூட்டுவித்தலும் அத்தோழிக்குரிய கடமையாம் எ-று.

புணர்த்தல் ஆற்றல் - கூடுமாறு செய்தல்.

அவள் என்றது சுட்டு மேலை நூற்பாவிற் குறிக்கப்பட்ட தோழியை.

தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி, 'இவள் கூட்டமுண்மை உணர்ந்தாள் போன்று குறையுறுகின்றாள்' என்று தலைமகட்குப் புலனாகாமை தன் உள்ளத்துணர்ச்சியை நன்குமறைத்துத் தலைமகனது ஆற்றாமைக் குறிப்பினை மட்டும் தலைமகட்கு அறிவுறுத்துத் தலைமகளைக் குறைநயப்பிக்கும் வண்ணம் செய்து தலைவனது குறை முடிக்கவல்லள் என்பதனை அறிவுறுத்துவது,

> "உள்ளத் துணர்ச்சி தெள்ளிதிற் கரந்து
> கிழவோள் தேஎத்துக் குறையுறூஉம் உளவே
> குறிப்பறி வுறூஉங் காலை யான" (௧௦)

எனவரும் இறையனார் களவியலாகும்.

௩௰. குறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக் கிளந்த ஆற்ற தென்ப.

**இளம்பூரணம்**

என்றது, மேல் 'களஞ்சுட்டுக் கிளவி கிழவியதாகும்' என்றார், அதற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. ஒன்றனை முடிவுபோக்கலாவது, நன்றெனத் துணிந்த ஒரு செயலை இடையூறின்றி இனிது நிறைவேறுமாறு இறுதிவரை உடனிருந்து முடித்து வைத்தல்.

2. 'புணர்த்தல் ஆற்றலும்' என்புழி உம்மை முற்கூறிய மதியுடம்படுத்தலாகிய உணர்த்தலேயன்றி என இறந்தது தழீஇ நின்றமையின் எச்சவும்மை.

(இ-ள்.) குறி என்று சொல்லப்படுவது[1] இரவினானும் பகலினானும் இருவரும் அறியச் சொல்லப்பட்ட இடத்தை யுடைத்து என்றவாறு.

எனவே, இரவிற்குறி, பகற்குறி என இருவகைப்படும் என்பது கொள்ளப்படும். (௪௰)

நச்சினார்க்கினியம்

அங்ஙனங் கூட்டுகின்றவட்குக் கூடுதற்குரிய காலமும் இடனுங் கூறுகின்றது.

(இ-ள்.) குறியெனப் படுவது - குறியென்று சொல்லப் படுவது; இரவினும் பகலினும் . இரவின்கண்ணும் பகலின் கண்ணும்; அறியத் தோன்றும் ஆற்றது என்ப - தலைவனுந் தலைவியுந் தானும் அறியும்படி தோன்றும் நெறியையுடைய இடம் (எ-று).[2]

நெறியென்றார் அவன் வருதற்குரிய நெறி இடமென்றற்கு. அதுவென்று ஒருமையாற் கூறினார், தலைப்பெய்வதோரிடமென்னும் பொதுமைபற்றி. இரவு களவிற்குச் சிறத்தலின் முற்கூறினார். அறியத் தோன்றுமென்றதனாற் சென்று காட்டல் வேண்டா நின்று காட்டல் வேண்டுமெனக் கொள்க[3] (௯௧)

ஆய்வுரை

இது, களவொழுக்கத்தில் தலைவன் தலைவி இருவரும் மறைவிற் கலந்து அளவளாவுதற்குரிய குறியிடமாவது இதுவெனக் கூறுகின்றது.

(இ - ள்.) குறி என்று சொல்லப்படுவது இரவிலும் பகலிலும் தலைவன் தலைவி இருவரும் தம்முள் அறியச் சொல்லப்பட்ட வழியினையுடைய இடம் என்பர் ஆசிரியர் எ - று.

ஆற்றது - வழியினையுடையது : குறிப்பு வினைமுற்று. ஈண்டு ஆறு என்றது குறியிடத்தை எளிதிற் சென்று சேர்தற்குரிய வழியினை. இத்தகைய வழியமையாத இடம் எதுவும் குறியாகாது என்பார்

---

1. குறி என்பது குறிக்கப்பட்ட இடத்தையுணர்த்தியது.

2. அறியத்தோன்றுதலாவது, குறியிடத்துச் செல்லுதற்கு உரியராகிய தலைவனும் தலைவியும் தெளிவாக அறிந்து கொள்ளும் அடையாளமுடையதாகப் புலப்படுதல்.

3. இது மறைவில் நிகழும் ஒழுகலாறாகிய களவாதல் தோன்றச் 'சென்று காட்டல் வேண்டா, நின்று காட்டல் வேண்டுமெனக் கொள்க' என்றார்.

'ஆற்றது' என்றார். 'இரவிலும் பகலிலும்' எனவே களவொழுக்கத்திற் காதலர் இருவரும் தம்முட் கண்டு அளவளாவுதற்குரிய வகையிற் குறித்த இடம் இரவுக்குறி, பகற்குறி என இருவகைப்படும் என்பதாம். இத்தொல்காப்பிய நூற்பாவை அடியொற்றி யமைந்தது,

"குறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக் கிளந்த இடமென மொழிப" (கஅ)

என்வரும் இறையனார் களவியலாகும்.

சக. இரவுக் குறியே இல்லகத்[1] துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான.

**இளம்பூரணம்**

என்றது, இரவுக்குறிக்கு இடமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இரவுக்குறியாம் இடமே இல்லகத்துள் மனையகம் புகாவிடத்துக்கண் மனையோர் கிளவிகேட்கும் அணிமைத்தாம் என்றவாறு;

எனவே, மனைக்கும் எயிற்கும் நடுவணதோரிடம் என்று கொள்ளப் படும். (சக)

**நச்சினார்க்கினியம்**

இது, நிறுத்தமுறையானே இரவுக்குறியிடம் உணர்த்துகின்றது.

(இ-ள்.) அகமனைப் புகாக் காலை ஆன இரவுக்குறியே-உண்மனையிற் சென்று கூடுதற்கு உரித்தல்லாத முற்காலத்து உண்டான இரவுக்குறியே;[2]

ஏகாரம், பிரிநிலை.

இல்லகத்துள்ளும் மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே-இல்வரைப்பினுள்ள தாகியும் மனையோர் கூறிய கிளவி கேட்கும் பிறமனை[3] யிடத்ததாம் (எ-று).

---

1. இல்லகம்—வீட்டினைச் சூழவுள்ள மனைப்பரப்பு.

2. இல்லகத்துள் மனையோர் கிளவி கேட்கும் வழியது இரவுக்குறி எனவே, ஒருகால் மனையின் அகமாகிய உள்ளிடமும் இரவுக்குறியாதற்கு ஏற்றதுபோலும் என ஐயுறாமைப் பொருட்டு மனையின் உள்ளிடத்தை மறுத்தற்கு 'மனையகம் புகாக்காலையான்' என்றார் ஆசிரியர். எனவே தலைவியின் வள்மனை எல்லைக்குள் அகமனைக்கும் புறமதிலுக்கும் இடையே மனைப்புறத்தேயமைவது இரவுக் குறியாதல் நன்கு புலனாம்.

3. 'புறமனையிடத்ததாம்' என்றிருத்தல் வேண்டும்.

அல்லகுறிப்பட்டதனை ஒருவாற்றான் உணர்த்திய காலத்து அவன் அதுகேட்டு ஆற்றுவனென்பது கருதி, 'மனையோர் கிளவி கேட்கும் வழியது' என்றார்; ஏகாரம் ஈற்றசை: என்றது, இரவுக் குறி அம் முயற்சிக்காலத்து அச்சநிகழ்தலின், அகமனைக்கும் புறமதிற்கும் நடுவே புணர்ச்சி நிகழுமென்றதாம். அகமனையிற் புகாக்காலையெனவே, இரவுக்குறி அங்ஙனஞ் சிலநாள் நிகழ்ந்த பின்னர், அச்சமின்றி உண்மனையிற் சென்று கூடவும் பெறு மென்பதுங் கூறியதாம்.[1]

உ-ம்: ''அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்'' (அகம்.198)

எனவும்,

''மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
அலையல் வாழிவேண் டன்னை'' (அகம். 158)

எனவும்,

''அட்டி லோலை தொட்டனை நின்மே'' (நற்றிணை,300)

எனவும் வருவன பிறவும் மனையோர் கிளவி கேட்கும் வழியது.

''உளைமான் துப்பி னோங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊர் விருங்கதுப்பு

1. 'இரவுக்குறி அங்ஙனஞ் சில்நாள் நிகழ்ந்தபின்னர் அச்சமின்றி உள் மனையிற் சென்று கூடவும் பெறும்' எனவரும் இவ்வுரைவிளக்கம், ஆசிரியர் குறித்த இரவுக்குறியிலக்கணத்திற்கு முரண்பட்டதாகும். களவில் தலைவன் இரவுக் குறியில் மனையகம்புக்கதாக இவ்வுரையில் எடுத்துக் காட்டப்பட்ட அகநானூறு 102. ஆம் பாடலில் வீழாக்கதவம் அசையினன் என்பது அடிக்கடி திறக்கப்படாத புறமனைச் கதவினையேயாதலின் அஃது ஆசிரியர் குறித்த இரவுக்குறிக்குரிய இடமாக[illegible]வ கொள்ளற்பாலதாகும். தலைவி இரவுக் குறியில் இவ்வரைப்பினைக் கடந்து புறத்துப் போயினாள் எனின் அஃது இரவுக் குறியெனப் படாது என்பதும், தலைவி மனையகத்தை நீங்கி மனைப்புறத்தே போகின்றாள் எனச் செவிலிக்கு அச்சம் நிகழ்ந்து அவள் துயிலாளாகிய பின்னரும் அச்சமின்றி மனையகத்துப் புணர்ச்சி நிகழும் என்பதும், அச்சமும் நாணமும் மடனும் உடைய தலைவியையும்-பெருமையும் உரனும் உடைய தலைவனையும் மலரினும் மெல்லிதாகிய காமப் புணர்ச்சியின் செவ்வியறியாத பொதுமக்கள் குழுவில் சேர்க்குமாதலின் இவ்வுரை, விளக்கம் ஏற்புடைத்தன்று என உணர்தல் வேண்டும்.

ஐதுவர லசைவளி மாற்றக் கைபெயரா
ஒலியியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகன் மழகளி றுறங்கு நாடன்
ஆர மார்பின் அணிமிஞி றார்ப்பத்
தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன்
காவல ரறிதல் ஓம்பிப் பையென
வீழாக் கதவ மசையினன் புகுதந்
துயங்குபட ரகல முயங்கித் தோண்மணந்
தின்சொ லளைஇப் பெயர்ந்தனன் தோழி
இன்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவன்
நல்கா மையின் அம்ப லாகி
ஒருங்குவந் துவக்கும் பண்பின்
இருஞ்சூ ழோதி ஒண்ணுதற் பசப்பே.'' (அகம், 102)

இது மனையகம் புக்கது.

தலைவி புறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐயம் நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்துப் புணர்ச்சி நிகழுமென்றுணர்க, (௩௰)

**ஆய்வுரை**

இரவுக்குறியின் இயல்பு உணர்த்துகின்றது.

(இ-ள்.) இரவுக்குறியாவது, தலைமகளது இல்வரைப்பினுள் மனையிலுள்ளோர் கூறும் சொற்கள் கேட்கும் அணிமைக்கண் மனைப்புறத்து அமைவதாகும்; மனையின் உள்ளிடத்துத் தலைவன் புகாதநிலைமைக்கண் எ-று.

இரவுக்குறியே என்பதன் ஏகாரம் இருவகைக் குறியிடங்களுள் ஒன்றினைப் பிரித்துக் கூறலின் பிரிநிலையேகாரம். மனையோர்கிளவி - வீட்டினுள்ளே வாழும் தலைவி, தோழி, செவிலி முதலியோர் தம்முட் பேசிக்கொள்ளும் சொற்கள். களவொழுக்கம் ஒழுகும் தலைவன் தலைமகளது இல்வரைப்பினுள் மனைப்புறத்தன்றி மனையகத்தே புகுதல் இரவுக் குறியாகாதென விலக்குவார்

'மனையகம் புகாக் காலையான' என்றார். எனவே இல்வரைப்பினுள் புறமதிற்கு உள்ளும் அகமனையின் புறமும் ஆகிய மனைப்படப்பையேஇரவுக்குறியாதற்குரிய இடமாம் என்பது ஆசிரியர் கருத்தாதல் நன்குபெறப்படும்.

> *"இரவுக் குறியே இல்வரை யிகவாது'* (கசுூ)

எனவும்,

> *"இரவு மனையிகந்த குறியிடத் தல்லது*
> *கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை'* (உ௧)

எனவும் இறையனார் களவியற் சூத்திரங்கள் இத்தொல்காப்பியச் சூத்திரப்பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தமை காண்க.

௪உ பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான.

**இளம்பூரணம்**

என்றது பகற்குறி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பகற்குறியாகிப்புணருமிடம் எயிற்புறன்[1] என்று சொல்லுவர்; ஆண்டுந் தலைமகள் அறிவுற்றுவரும் இடனாகல் வேண்டும் என்றவாறு. (௪உ)

**நச்சினார்க்கினியம்**

இது முறையானே பகற்குறி உணர்த்துகின்றது.

(இ-ள்.) அவள் அறிவு[2] உணர வருவழிஆன பகற்புணர் களனே-களஞ்சுட்டிய தலைவி அறிந்தவிடந் தலைவன் உணரும்படியாக வருவதோரிடத்து உண்டான பகற்புணருங்குறியிடத்தை; புறன் என மொழிப- மதிற்புறத்தேயென்று கூறுவர் அசிரியர் (எ-று).

அறிவு: ஆகுபெயர்.

---

1. இங்குப் புறன் என்றது தலைமகள் வீட்டைவிட்டு மதிற்புறம் போந்து தோழியர்களுடன் விளையாடுமிடத்தை.

2. 'அவளறிவு' என்புழி அறிவு என்றது, அவள் அறிந்த இடத்திற்காகினமையின் ஆகுபெயர்.

உ-ம்: ''புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த
மின்னே ரோதியென் றோழிக்கு''

எனவும்,

''பூவே புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே'' (அகம். 239)

எனவும் வருவன பிறவுங் கொள்க. (சச)

**ஆய்வுரை**

இது, பகற்குறியாவது இதுவென்க் கூறுகின்றது.

(இ-ள்.) பகலிற் காதலர் இருவரும் தனிமையில் கண்டு அளவளாவுதற்குரிய பகற்குறியாகிய இடம் ஊரின் புறம் என்பர் ஆசிரியர். அதுதானும் தலைமகள் அறிவுற்று உணர்ந்து வரும் வழியினையுடையதாம் நிலைமைக்கண் எ-று.

அவள் என்றது தலைமகளை. புறம் என்றது, இளமகளிர் புறத்தே போய் விளையாடுதற்குரிய பொழில் சூழ்ந்த ஊர்ப்புறத்தினை. தலைமகள் அறிவுற்று உணர்ந்து தலைவனைத் தலைப்படுதற்குரிய வழியுடன் கூடியவிடமே பகற்குறியாகக் கொள்ளத்தக்கது என்பார், 'அவள் அறிவு உணர வருவழியான புறமே பகற் புணர்களன்' என்றார் ஆசிரியர். ''பகற்குறிதானே யிகப்பினும் வரையார்'' (உ௰) எனவரும் இறையனார் களவியற் சூத்திரம் 'பகற் புணர்களனே புறம்' ஆதலைப் புலப்படுத்துவதாகும்.

சரு. அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே
அவன்குறி[1] மயங்கிய அமைவொடு வரினே.

**இளம்பூரணம்**

இதுவுமது.

(இ - ள்.) அல்லகுறிப்படுதலுந் தலைமகட்கு உரித்து: தலைவன் செய்த குறிமயங்கிய பொருத்தத்தொடு வரின் என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டது.

மயங்கிய அமைவு ஆவது—அவன் செய்யும் குறியோடமைவுடையன. (சரு)

1. அவன்குறி—புள்ளெழுப்புதல் முதலாக தலைவன் செய்த அடையாளம். மயங்குதலாவது அவ்வடையாளம் பிறிதொன்றால் இயற்கையாகவே ஒத்து நிகழ்தல்.

நச்சினார்க்கினியம்

இது தோழி அல்ல குறிப்படுமாறு கூறுகின்றது. இரு வகைக் குறி பிழைப்பாகியவிடத்தும் என்புழித் தலைவி அல்ல குறிப்படுதல் கூறிற்று.

(இ - ள்.) அவன் குறி - தலைவன் தன்வரவு அறிவிக்குங் கருவிகள்; மயங்கிய அமைவொடு வரின் - அவன் செயற்கை யானன்றி இயற்கைவகையானே நிகழ்ந்து தோழி மயங்கிய அமைதியோடே வருமாயின்; அல்லகுறிப் படுதலும் - குறியிடத்துக் கூட்டுங்கால் அவ்வல்லவாகிய குறியிலே மயங்குதலும்; அவள்வயின் உரித்து - அத் தோழியிடத்து உரித்து[1] (எ - று).

வெறித்தல் வெறியாயினாற்போலக் குறித்தல் குறியாயிற்று. அக் கருவி புனலொலிப்படுத்தல் முதலியன.

உ-ம்: *"கொடுமுண் மடற்றாழைக் கூன்புற வான்பூ*
*இடையு ளிழுதொப்பத் தோன்றிப்—புடையெலாம்*
*தெய்வம் கமழும் தெளிகடற் றண்சேர்ப்பன்*
*செய்தான் றெளியாக் குறி."* (ஐந்திணை ஐம். 49)

இஃது அல்லகுறிப்பட்டமை சிறைப்புறமாகக் கூறியது.

*"எறிசுறா நீள்கடல் ஓத முலாவ*
*நெறியிறாக் கொட்கு நிமிர்கடற்றண் சேர்ப்பன்*
*அறிவுறா வின்சொ லணியிழையாய் நின்னிற்*
*செறிவுறா செய்த குறி"* (திணை. ஐம். 43)

இஃது அவன்மேற் குறிசெய்கின்றமை தலைவிக்குக் கூறியது.

---

1. 'அவள்' என்னும் சுட்டு, மேற்சூத்திரத்திற் குறிக்கப்பட்ட தலைமகளைச் சுட்டுமேயன்றித் தோழியைச் சுட்டாது. அன்றியும் அகத்திணையொழுகலாற்றில் 'அவன்' எனவும் 'அவள்' எனவும் வரும் சுட்டுப் பெயர்கள் முறையே தலைவனையும் தலைவியையும் குறித்து வழங்குதலே மரபாகும் என்பது 'தன்னும் அவளும் அவனும் சுட்டி' என்றாங்கு வரும் தொல்காப்பியத் தொடர்களால் நன்கு துணியப்படும். அல்ல குறியிற் சென்று மீள்வாள் தலைமகளேயன்றித் தோழியல்லள் என்பதும் இங்குக் கருதத் தகுவதாகும். தலைவன் செய்த அடையாளங்கள் இயற்கைச் சூழல்களால் மயங்கிய நிலைமைக்கண் அல்லகுறிப்படுதலும் தலைமகட்கு உரித்து என்பதே இதன் பொருளாகும்.

''இடுமண லெக்க ரகன்கானற் சேர்ப்பன்
கடுமான் மணியரவ மென்று—கொடுங்குழை
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடியர்
உள்ளார்வ நானுவ ரென்று.'' (ஐந்: எழு 59)

இஃது இவன் இனி ஆண்டுவரிற் சுற்றத்தார் அறிவ ரென்றது.

''வீழ்பெயற் கங்குலின் விளியோர்த்த வேட்டுக்கத்தால்
வாழுநாள் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பிற் றாய்முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போ லொள்வளை யுகுபவால்.'' (கலி. 48)

இது தலைவற்குப் பிற்றைஞான்று கூறியது.

''அன்னை வாழியோ வன்னைநம் படப்பை
மின்னென நுடங்கிடைக் கின்னிழ லாகிய
புன்னை மென்காய் போகுசினை யிரிய
ஆடுவளி தூக்கிய வசைவிற் கொல்லோ
தெண்ணீர்ப் பொய்கையுள் வீழ்ந்தென
எண்ணினை யுரைமோ வுணர்குவல் யானே.''

இது தோழி தாய்க்குக் கூறுவாளாய் அல்லகுறி அறிவித்தது.

''மணிநிற நெய்தல் இருங்கழிச் சேர்ப்பன்
அணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்போல்
திணிமண லெக்கர்மே லோதம் பெயர்த்
துணிமுந்நீர் துஞ்சா தது'' (ஐந்.எழு.60)

இது தோழி இல்லுளிருந்து சிறைப்புறமாகக் கூறியது.

திங்கள்மேல் வைத்துக் கூறுவனவும் ஓதத்தின்மேல் வைத்துக் கூறுவனவும் பிறவுங் கொள்க.

''அரவளை மென்றோ ளனுங்கத் துறந்து
கரவல மென்றாரைக் கண்ட திலையால்
இரவெலா நின்றாயா லீர்ங்கதிர்த் திங்காள்''

*"புன்னை நனைப்பினும் பூஞ்சினை தோயினும்*
*பின்னிருங் கூந்தலென் றோழி நடையொக்கு*
*மன்னை நனையாதி வாழி கடலோதம்"*

என வருவன பிறவுங் கொள்க. 'படுதல்' எதிர்ப்படாமையை உணர்த்திற்று.[1]ஆண்டுத் தன்மேல் தவறேற்றாது தலைவன் பொழுதறிந்து வாராமையின் மயங்கிற்றென்று அமைவு தோன்றலின் 'அமை' வென்றார்.[2]அது,

*"தான்குறி வரயாத் தப்பற்குத்*
*தாம்பசந் தனவென் றடமென் றோளே"* (குறுந். 121)

என்றாற்போல வரும். இதன் பயன் தலைவி துன்பந் தனதாகத் துன்புறுதலாயிற்று. (௪௨)

**ஆய்வுரை**

இது, தலைமகள் அல்ல குறிப்படுமாறும் அதற்குரிய காரணமும் கூறுகின்றது.

(இ-ள்.) தலைவன் தன்னாற் குறிக்கப்பட்ட அடையாளங்களோடு இயற்கை நிகழ்ச்சிகள் ஒத்துத் தோன்றி மயங்கிய நிலையில் இரவுக்குறிக்கண் வருவானாயின் அவன் செய்த குறியல்லாத இயற்கை நிகழ்ச்சிகளை அவனாற் செய்யப்பட்ட குறிகளாகப் பிறழவுணர்ந்து குறியிடத்துச் சென்று தலைவனைக் காணாது திரும்புதலும் தலைமகட்கு உரித்து எ-று.

குறிமயங்கிய அமைவொடு அவன் வரின் அல்ல குறிப்படுதலும் அவள்வயின் உரித்து என இயையும். புள்ளெழுப்புதல், புனலொலிப்படுத்தல் முதலாகத் தலைவன் செய்யும் அடையாளங்களையொத்துப் பறவைகள் வேற்றினப் பறவைகண்டு எழுதலும் காய் முதலிய நீர்நிலையில் துடுமென வீழ்தலும் முதலிய இயற்கை நிகழ்ச்சிகள் மயங்கித் தோன்றிய நிலைமைக்கண் அவற்றைத்

---

1. அல்லகுறிப்படுதல் என்பது குறியல்லாததனைக் குறியெனக் கொண்டு சென்று தலைவனை எதிர்ப்படாமையை உணர்த்தியது. குறிமயங்கினமை தலைவனது குற்றமன்று.

2. பொழுதறிந்து வாராமையின் இயற்கையில் நிகழ்ந்ததே என்பது தோன்ற அமைவு என்றார் என்னும் இவ்வுரை விளக்கம் பொருத்தமுடையதேயாகும்.

தலைவன் செய்த அடையாளங்களாக எண்ணிக் குறியிடத்தே சென்று தலைவனைக் காணப்பெறாது அல்ல குறிப்பட்டு மீளுதலும் தலைமகட்கு உரியதாகும் என்பது இந்நூற்பாவினால் உணர்த்தப்படும் செய்தியாகும்.

> ''அல்ல குறிப்படுதலும் அவ்வயின் உரித்தே
> அவன்வர வறியும் குறிப்பி னான' (கஎ)

எனவரும் இறையனார் களவியல் இத்தொல்காப்பிய நூற்பாவை அடியொற்றியமைந்தமை காண்க.

சச. ஆங்காங் கொழுகும் ஒழுக்கமும் உண்டே
ஓங்கிய சிறப்பின் ஒருசிறை யான.

**இளம்பூரணம்**

இதுவுமது.

(இ - ள்.) அவ்வவ்விடத் தொழுகும் ஒழுக்கமுந் தலைவி மாட்டு உண்டு, ஓங்கிய சிறப்பினையுடைய ஒருபக்கத்து என்றவாறு.

ஒருசிறை யென்றது மனத்தானும் மொழியானும் மெய்யானும் கற்புடை மகளிர் ஒழுகும் ஒழுக்கத்தின் மனத்தான் ஒழுகும் ஒழுக்கமும் உண்டு என்றவாறு.[1] (சச)

**நச்சினார்க்கினியம்**

இது தலைவனும் அல்லகுறியால் வருந்துவனென்கின்றது.

(இ - ள்.) ஓங்கிய சிறப்பின் - தனது மிக்க தலைமைப் பாட்டினாலே பொழுதறிந்து வாராமையின்; ஒருசிறை ஆன ஆங்கு- தான் குறிசெய்வதோரிடத்தே தன்னானன்றி இயற்கையான் உண்டான அவ்வல்ல குறியிடத்தே; ஆங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டு - தலைவியுந் தோழியுந் துன்புறுமாறு போலத் தலைவனுந் துன்புற்று ஒழுகும் ஒழுக்கமும் உண்டு எ - று.[2]

1. இங்கு 'ஒருசிறை' என்றது, கற்புடைமகளிர்க்குரிய மன மொழி மெய்களானாகிய ஒழுகலாறுகளுள் மனத்தான் ஒழுகும் ஒழுக்கத்தினைக் குறித்தது என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

2. இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை தொல்காப்பியர் கருத்தினை அறியவொட்டாது தமது கருத்தினை ஏற்றியுரைக்கும் வகையில் வலிந்து எழுதப்பட்டதாகும். 'குடங்கொண்டாள் வீழ்ந்தாள்' என்புழி குடமும் வீழ்ந்ததுஎன்பது பெறப்படுமாறு போல, 'அல்ல குறிப்படுதலும் அவன்வயின்

முன்னர் நின்ற ஆங்கு' முன்னிற்சூத்திரத்து அல்லகுறியைச் சுட்டிற்று; பின்னர் நின்ற 'ஆங்கு' உவமவுருபு. (௩௯)

ஆய்வுரை

இது, மேற்கூறிய இருவகைக் குறிகட்கும் எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) காதலர் இருவருள்ளத்தே உயர்ந்து வளர்தற்குரிய சிறப்பினதாகிய பேரன்பினைப் பேணி வளர்க்கும் காவல்மைந்தன் தனிமையிடமாகிய நிலைமைக்கண் அவ்வப்பொழுதும் இடமுமாகிய சூழ்நிலைக்கேற்ப மறைந்த ஒழுக்கமாகிய களவிற்கூட்டம் நிகழ்தலும் உண்டு எ - று.

இரவுக்குறி, பகற்குறி எனத் தம்மாற் குறித்துக் கொள்ளப்பட்ட குறியிடங்களேயன்றி, அவ்வாறு குறித்துக் கொள்ளப்படாது காதலர் இருவர் தனிமையிற் கண்டு அளவளாவுதற்கு ஏற்ற சூழ்நிலையும் பாதுகாப்பும் உடையதாய்த் தன்னியல்பில் நேர்படும் இடமும் பொழுதும் களவிற் கூட்டம் நிகழ்தற்குரிய பகற்குறி இரவுக்குறிகளுக்குரிய குறியிடங்களாக அமைதலும் உண்டு என்பது இந்நூற்பாவிற் கூறப்படும் சிறப்பு விதியாகும்.

'ஓங்கிய சிறப்பின் ஒரு சிறையான ஆங்காங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டு' என இயைத்துப் பொருள் கொள்க. ஓங்கிய சிறப்பாவது, காதலர் இருவரது உள்ளமும் மேன்மேல் உயர்ச்சி பெறுதற்குரியதாய் அவ்விருவருள்ளத்தே கிளர்ந்து தோன்றும் பேரன்பாகும். ஒருசிறை - பிறர் அறியாவாறு பாதுகாவலமைந்த தனியிடம். 'ஒருசிறை நெஞ்சோடுசாவுங்காலை' (கற்பியல்-௪) என்புழி 'ஒருசிறை' என்னுஞ் சொல் 'தனித்து' என்ற பொருளில் வழங்கப் பெறுதல் இங்கு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும்.

---

உரித்து, எனவே அவன்வயின் உரித்தாதலும் தானே பெறப்படும். ஆதலின் தலைவனும் அல்ல குறியால் வருந்துவன் என்பதற்குத் தனியொரு நூற்பா கூற வேண்டியதில்லை.

இருவகைக் குறி பிழைப்பாகியவிடத்துத் தலைவனது கலக்கம் இவ்வியல் 16-ஆம் நூற்பாவில் கூறப்பட்டுள்ளமை இளம்பூரணர் உரையால் புலனாகும்.

சுடு. மறைந்த ஒழுக்கத்[1] தோரையும் நாளுந்
துறந்த ஒழுக்கங் கிழவற் கில்லை.

**இளம்பூரணம்**

என்றது, தலைவற்கு உரிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) களவொழுக்கத்துமுகூர்த்தமும் நாளும்துறந்தொழுகும் ஒழுக்கம் தலைவற்கு இல்லை என்றவாறு.

என்றதனான், ஆண்டு அறத்தின் வழுவினானல்லன் தலைவி மாட்டுத், தலையளி குறைதலான் என்றவாறு[2] (சுடு)

**நச்சினார்க்கினியம்**

இது தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) ஓரையும் நாளுந் துறந்த ஒழுக்கம்-தீய இராசியின் கண்ணுந் தீய நாளின்கண்ணுங் கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம்[3] கிழவோற்கு மறைந்த ஒழுக்கத்து இல்லை தலைவற்குக் களவொழுக்கத்தின்கண் இல்லை; எனவே கற்பின்கணுள (எ-று).

ஒழுக்கமாவது சீலமாதலிற் சீலங்காரணத்தால் துறப்பது தீதாகிய இராசியும் நாளுமென்பது பெற்றாம். நாளாவது அவ்விராசி மண்டில முழுவதும் கிழத்தி துறந்த ஒழுக்கம் முந்நாளல்லதென

1. மறைந்த ஒழுக்கம்—களவொழுக்கம்.

2. முகூர்த்தமும் நாளுந்துறந்தொழுகுதல் தீதாமாதலின், களவொழுக்கம் ஒழுகாநின்ற தலைவன் முகூர்த்தத்தையும் நாளினையும் வழுவி ஒழுக மாட்டான் என்பதாம்.

3. துறத்தற்குச் செயப்படுபொருள் ஓரையும் நாளுமேயாகவும், கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம் எனக் கூட்டம் என்பதனைச் செயப்படு பொருளாக வருவித்துரைத்தல் பொருந்தாது.

ஓரையை முகூர்த்தம் எனக் கொண்ட இளம்பூரணர் உரையிலும், ஓரையும் நாளும் துறந்த ஒழுக்கம் என்பதற்கு முகூர்த்தமும், நாளும் துறந்து ஒழுகும் ஒழுக்கம் என ஓரையும் நாளும் துறத்தற்குச் செயப்படுபொருளாகக் கூறப்பட்டமை காணலாம்.

மறைந்த ஒழுக்கத்தின்கண் ஓரையும் நாளுமாகியவற்றைத் துறந்தொழுகும் ஒழுக்கம் தலைவனுக்கு இல்லையென்பதே இந்நூற்பாவின் பொருள். மறைந்த ஒழுக்கம் என்றது உலகத்தார் அறியாது மறைந்து ஒழுகும் ஒழுக்கமாகிய களவினை.

(122) முற்கூறிற்று இதனான் அன்பு மிகுதி கூறினார். இதற்குப் பிராயச்சித்தம் அந்தணர் முதலிய மூவர்க்கும் உண்மை 'வந்த குற்றம் வழிகெட வொழுகலும்' (தொல். பொ. 146) எனக் கற்பியலிற் கூறுப. (சச)

**ஆய்வுரை**

இது, களவொழுக்கத்தின்கண் தலைமகனுக்காவதோர் கடமையுணர்த்துகின்றது.

(இ-ள்.) உலகத்தாரறியாது காதலர் இருவரும் மறைந்-தொழுகும் ஒழுகலாறாகிய களவொழுக்கம் காரணமாகத் தான் மேற்கொள்ளுதற்குரிய விளையாட்டும் விழாவும் ஆகிய சிறப்புடைய நிகழ்ச்சிகளைநீங்கியொழுகும்ஒழுகலாறு தலைவனுக்கு இல்லை எ-று.

மறைந்த ஒழுக்கம் என்றது களவொழுக்கத்தினை. ஓரை என்னுஞ் சொல், விளையாட்டு என்னும் பொருளில் வழங்கும் தனித்-தமிழ்ச் சொல்லாகும். "கோதையாயமொடு ஓரைதழீஇ" (அகம் 49) எனவும், "ஓரையாயம்" (அகம்.219;(குறுந்.48) எனவும், "விளை-யாடாயத்து ஓரையாடாது" (நற்றிணை 2) எனவும் ஓரையென்னுஞ் சொல் விளையாட்டு என்னும் பொருளில் சங்கச் செய்யுட்களிற் பயின்றுள்ளமை காணலாம். இந்நூற்பாவில் இடம்பெற்றுள்ள ஓரை-யென்னுஞ் சொல்லும் விளையாட்டு என்னும் பொருளிலேயே ஆளப்-பெற்றுள்ளமை கூர்ந்துணர்தற்குரியதாகும். நாள்-திருவிழா. "மா-யோன்மேயஓண நன்னாள்" (மதுரைக் காஞ்சி-591) எனவும், "ஆதிரை நாள் காணாதே போதியோபூம்பாவாய்" (தேவாரம் 3-47-4) எனவும், நாள் என்பது திருவிழா என்னும் பொருளிற் பயில வழங்குதல் இங்கு ஒப்புநோக்கற்பாலதாகும்.

தலைவன் தான் விரும்பி மேற்கொண்டொழுகும் களவொழுக்-கம் காரணமாகத் தான் தன் தோழர்களுடன் தவறாது கலந்து கொள்ளுதற்குரிய சிறப்புடைய விளையாட்டினையும் ஊர்மக்கள் பலரும் காணத் தான் மேற்கொண்டு நிகழ்த்துதற்குரிய திருவிழாச் செயல்முறைகளையும் கைவிட்டு விலகியொழுகுவானாயின், அந்-நிகழ்ச்சிகளில் அவன் கலந்து கொள்ளாமைபற்றி அவனைக் குறித்துப் பலரும் வினவாநிற்க, அது காரணமாக அவனது கள-வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாமாதலின். களவொழுக்கம் ஒழுகு ந்

தலைவன் ஓரையும் நாளும் ஆகிய இவற்றை நீங்கியொழுகுதல் கூடாது எனத் தலைவனுக்குரிய இன்றியமையாத கடமையினை வற்புறுத்தும் நிலையில் அமைந்தது இந்நூற்பாவாகும்.

௪௬. ஆறின தருமை[1]யும் அழிவும் அச்சமும்
ஊறும் உளப்பட அதனோ ரற்றே.

**இளம்பூரணம்**

இதுவுமது.

(இ-ள்.) நெறியினது அருமையும் மனன் அழிவும் அஞ்சுதலும் இடையூறும் தலைவன்மாட்டு நிகழா என்றவாறு. (௪௬)

**நச்சினார்க்கினியம்**

இதுவுந் தலைவற்கு இல்லன கூறுகின்றது.

(இ-ள்) உளப்பட-நிலவும் இருளும் பகைவரும் போல்வனபற்றிச் செலவழுங்குதல் உளப்பட; ஆறினது அருமையும்-நெறியினது அருமை நினைந்து கூட்ட நிகழ்ந்தவழிக் கூறுதலும்; அழிவும் -குறைந்த மனத்தனாதலும்; அச்சமும்-பாம்பும் விலங்கும் போல்வன நலியுமென்று அஞ்சுதலும்; ஊறும்- அக் கருமத்திற்கு இடையூறு உளவாங்கொலென்று அழுங்குதலும்; அதனோர் அன்ன -கிழவற்கு இல்லை (எ-று.)

கிழவற்கில்லையெனவே கிழத்திக்குந் தோழிக்கும் உளவாயிற்று.[2] அவை முற்காட்டியவற்றுட் காண்க. (௪௫)

**ஆய்வுரை**

இதுவும் தலைமகனுக்குரியதோர் இயல்புணர்த்துகின்றது.

(இ-ள்.) நெறியினது அருமையும் மனன் அழிவும் அச்சமும் இடையூறுகளும் உட்பட உளவாகுந் தடைகள் காரணமாகத் தான் மேற்கொண்டுள்ள களவொழுக்கத்தினைத் தவிர்தலும் தலைவனுக்கு இல்லை எ று.

ஆற்றினது அருமையாவது, நடத்தற்கியலாதவாறு ஏற்றிழிவும் பரலும் முள்ளும் புதரும் கடும் புனலாறும் செறிந்தவிருளும்

1. ஆற்றினது அருமை-நடத்தற்கியலாத வழியின் அருமை. களவொழுக்கத்தில் வழியருமை பற்றிய எண்ணமும் அச்சமும் இடையூறும் தலைமகனுக்கு இல்லை என்பதாம்.

2. மறைந்த வொழுக்கத்து ஆறினது அருமையும் ...... ஊறும் உளப்பட கிழவோற்கு இல்லை என்பார், 'அதனோரன்ன' என்றார். கிழவற்கு இல்லை. யெனவே கிழத்திக்கும் தோழிக்கும் உளவாயிற்று என்னும் இவ்விளக்கம் பொருந்தமுடையதே.

உடைய அரியவழியினது ஆதல். அழிவு - மனன் அழிவு; சோம்பல். அச்சம் — ஆடவனுக்கு ஏலாத அச்சவுணர்வு. ஊறு - கொடிய விலங்கு முதலியவற்றால் வழியிடையே யுளவாம் இடையூறுகள். உளப்பட - இவை காரணமாக. ஆற்றினது அருமையும் அழிவும் அச்சமும் ஊறும் காரணமாக மறைந்த ஒழுக்கத்தினைத் துறந்து தலைமகளைக் களவிற் காணாது தவிர்தல் தலைவனுக்கு இல்லை என்பார், 'அதனோரற்றே' என்றார். களவொழுக்கம் ஒழுகும் தலைவன் ஆற்றினது அருமை முதலிய தடைகளை எண்ணித் தன் ஆருயிர்க் காதலியாகிய தலைவியைக் கண்டு அளவளாவும் காதற் கேண்மையினைத் தவிர்வான் அல்லன் என அவனது காதற் கடமையினை வற்புறுத்தும் முறையில் அமைந்தது இந்நூற்பாவாகும்.

சஎ. தந்தையுந் தன்னையும்[1] முன்னத்தின் உணர்ப.

**இளம்பூரணம்**

என்றது, தந்தையும், தன்னையரும் களவு உணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தந்தையரும் தன்னையரும் குறிப்பின் உணர்ப என்றவாறு.

எனவே, கூற்றினான் உரைக்கப்பெறார் என்றவாறாம். (சஎ)

**நச்சினார்க்கினியம்**

இது தந்தையுந் தன்னையுங் களவொழுக்கம் உணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) தந்தையுந் தன்னையும் ஒருவர் கூறக்கொள்ளாது உய்த்துக் கொண்டுணர்வர்[2] (எ - று).

நற்றாய் அறத்தொடு நின்ற வழியும்,

''இருவர்கண் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை'' (கலி.39)

என்றலின், முன்னர் நிகழ்ந்த வெகுட்சி நீங்கி உய்த்துக் கொண்டு உணர்ந்தாராயிற்று. (சகூ)

1. தன்ஐ—தமையன். முன்னம்-குறிப்பு. என்வே இவர்கட்குக் குறிப்பினானன்றிக் கூற்றினால் உரைத்தல் கூடாதென்பதாம்.

2. உய்த்துக் கொண்டுணர்தலாவது, குறிப்பினால் உணர்ந்துரைத்தல்.

**ஆய்வுரை**

இது, களவொழுக்கம் தலைவியின் தந்தை தன்னையர்க்குப் புலனாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்.) தலைவியின் தந்தையும் தமையன்மாரும் களவொழுக்கத்தினைக் குறிப்பினால் உணர்வர் எ-று.

முன்னம் - குறிப்பு. எனவே இவர்க்கு நற்றாய் அறத்தொடு நிற்குங்காலை உரையினால் வெளிப்படக் கூறவேண்டிய இன்றியமையாமை இல்லையென்பதாம்.

> *"தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும்*
> *முன்னம் அல்லது கூற்றவண் இல்லை"*

என்பது இறையனார் களவியல்.

## சஅ. தாய் அறிவுறுதல் செவிலியோ டொக்கும்.

**இளம்பூரணம்**

என்றது, நற்றாய்க்கு உரியதொரு மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நற்றாய் களவொழுக்கம் அறிவுறுதல் செவிலியோ டொக்கும் என்றவாறு. செவிலி கவலுந்துணைக் கவலுதலல்லது தந்தையையும் தன்னையன்மாரையும்போல வெகுடலிலள்[1] என்றவாறு. அவர் வெகுள்வரோ எனின்,

"காமர் கடும்புனல்" எனத் தொடங்கும் கலித்தொகைப் பாட்டினுள்,

> *"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
> *என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்"* (கலித்.௩௯)

எனத் தாய்வெகுளாமை காணப்பட்டது.

> *"அவரும் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து*
> *ஒருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி"* (கலித்.௩௯)

என்றதனான் வெகுட்சி பெற்றாம். (சஅ)

---

1. நற்றாய் தன்மகளது ஒழுகலாறு குறித்துச் செவிலி கவலைப்படுமளவிற் கவலைப்படுதலல்லது தலைமகளை மறைவிற் கூடியொழுகும் தலைவன் மேற் சினமுறாள் என்பதாம்.

**நச்சினார்க்கினியம்**

இது தந்தை தன்னைக்கு நற்றாய் களவொழுக்கம் உணர்த்துமாறு கூறுகின்றது.

(இ-ள்.) தாய் அறிவுறுதல் - நற்றாய் களவொழுக்கம் உண்டென்று அறிந்த அறிவு தந்தைக்குந் தன்னைக்குஞ் சென்று உறுந்தன்மை;[1] செவிலியோடு ஒக்கும்-செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்று உணர்த்திய தன்மையோடு ஒக்கும் (எ-று).

என்றது, செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றாற்போல, நற்றாயுந் தந்தைக்குந் தன்னைக்கும் அறத்தொடு நிற்கும் என்றவாறாயிற்று. அது,

> *"எனவாங், கறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
> *வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்"* (கலி.39)

என்பதனான் உணர்க.

இனி இதற்கு நற்றாயுஞ் செவிலி உணர்ந்தாற்போல உணருமென்று பொருள் கூறில் 'தாய்க்கும் வரையார்' (தொல். பொ.116) என்னுஞ் சூத்திரம் வேண்டாவாம். (௪எ)

**ஆய்வுரை**

இது நற்றாய் உணருமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்.) நற்றாய் தலைமகளது களவொழுக்கத்தினை அறிதல் செவிலியுணரும் முறைமையினோடு ஒக்கும் எ-று.

> *"அவருள், தாயறிவுறுதலின் ஏனோரும் அறிப"* (௨௩)

எனவரும் இறையனார் களவியல் தாய்வழியாகவே தந்தை தன்னையர் உணர்வர் என்பதனை வற்புறுத்துவதாகும்.

௪௮. அம்பலும் அலருங் களவுவெளிப் படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவ னாகும்.

**இளம்பூரணம்**

என்றது களவு வெளிப்படுப்பார் அவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

1. தாயறிதல் என்னாது 'தாய் அறிவுறுதல்' என்றமையால் 'தாய் களவொழுக்கம் உண்டென்று அறிந்த அறிவு தந்தைக்கும் தன்னைக்கும் சென்று உறும் தன்மை' என நச்சினார்க்கினியர் கூறிய இவ்வுரை ஆசிரியர் கருத்திற்கு ஒத்ததேயாம்.

(இ-ள்.) அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவரொருவர் முகக்குறிப்பினாற் றோற்றுவித்தல். அலராவது சொல்லுதல்.[1] அதனானே இவை இரண்டும் களவினை வெளிப்படுத்தலின் அதற்குக் காரணமாவான் தலைவன் என்றவாறு. என்னை, அவனை யறிந் துழியல்லது இவை நிகழாமையின். தலைவி வேறுபாட்டான் ஆகாதோ எனின், ஆண்டு எற்றினான் ஆயிற்று என ஐய நிகழ்தலல்லது துணிவு பிறவாதாம் என்று கொள்க. (சசு)

நச்சினார்க்கினியம்

இது களவு வெளிப்படுத்தற்கு நிமித்தமாவான் தலைமக-னென்கின்றது.

(இ-ள்.) அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின் முகிழ்த்தலும் பலரறியச் சொல் நிகழ்த்தலுங் களவொழுக்கத்தினை வெளிப்படுத்தலான்; அங்கதன் முதல்வன்[2] கிழவன் ஆகும் - அவ்-விடத்து அவ்வெளிப்படை நிகழ்த்துதற்கு நிமித்தமாயினான் தலைமகனாம் (எ-று).

தலைவனை அறிந்தபின் அல்லது முற்கூறிய ஐயம் நிக ழாமையின் தலைவிவருத்தம் நிமித்தமாகா. ஆண்டு ஐயம் நிகழ்த லன்றித் துணிவு தோன்றாமையின். வரைவு நீட்டிப்போனுந், தலைவி தமர்க்குக் கூறி வெளிப்படுப்போனுந் தலைவனே என்று ணர்க. அது,

> ''நீரொலித் தன்ன பேஎர்
> அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே''
>
> (அகம். 211)

எனவும்,

> ''நெறியறி செறிகுறி புரிதிரி பறியா
> வறிவனை முந்துறீஇ'' (கலி.39)

என்றாற்போல வருவனவும் பிறவும் வெளிப்படையாமாற்றாற் கண்டுணர்க. (சஅ)

---

1. அம்பல் - அரும்புதல், அலர் - விரிதல்.

2. முதல்வன் - காரணமாவான்: முதல் - காரணம்,

'ஆயெட்டென்ப தொழில் முதல்நிலையே' (சொல்-வேற்றுமையியல் - 21) என்புழி முதல் என்பது காரணம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கற்பாலதரம்.

**ஆய்வுரை**

இது, களவு வெளிப்படுதற்குக் காரணமாவார் இவர் என்பது உணர்த்துகின்றது.

(இ-ள்.) இரவினும் பகலினும் வந்துசெல்லும் தலைவனைக் கண்டு புலப்படுத்தும் அம்பலும், இன்னானோடு இன்னாளிடையது நட்பு எனச் சொல்லால் விரித்துரைப்பதாகிய அலரும் காதலர் இருவரது களவொழுக்கத்தினைப் பலரும் அறிய வெளிப்படுத்தலால் அத்தகைய களவு வெளிப்படுதற்குக் காரணமாவான் தலைவனே எ-று.

அம்பல்-அரும்பல்; மகளிரது முகக் குறிப்பினால் களவொழுக்கம் அரும்பு போன்று சிறிது வெளிப்படுதல்: அலர்-அலர்போன்று கூற்றினால் விரிந்து வெளிப்படுதல். அங்கு அதன் முதல்வன்-அந்நிலையில் அக்களவின் வெளிப்பாட்டிற்குக் காரணமாவான். முதல்-காரணம். அம்பலும் அலரும் தோன்றிய பின்னரல்லது இம்மறை வெளிப்படாதாதலின், இக்களவு வெளிப்பாட்டிற்குத் தலைவனே காரணமாவான் என்பது கருத்து.

> ''*அம்பலும் அலரும் களவு வெளிப்படுத்தலின்*''

எனவரும் இத் தொல்காப்பியத் தொடரை,

> ''*அம்பலும் அலருங் களவு*'' (22)

எனவும்,

> ''*வெளிப்பட்ட பின்றையும் உரியகிளவி* (23)

எனவும் இரண்டு சூத்திரங்களாக இறையனார் களவியலாசிரியர் அமைத்துக் கொண்டுள்ளார்.

௫௧. வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று
ஆயிரண் டென்ப வரைதல் ஆறே.

**இளம்பூரணம்**

இது, வரையும் பகுதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) களவு வெளிப்பட்டபின் வரைதலும் களவு வெளிப்படாமை வரைதலும் என அவ்விரண்டென்று சொல்லுவர் வரையும் நெறி என்றவாறு.[1]

---

1. வெளிப்பட - களவு வெளிப்பட்ட நிலையில், படாமை - வெளிப்படாத நிலையில் வரைதல். ஆறு - மணந்துகொள்ளும் நெறி.

இதனால் சொல்லியது இருவாற்றானும் அறன் இழுக்கா-தென்றவாறு. அஃது இழுக்காதவாறு வருகின்ற சூத்திரத்தான் உணர்க. (௩௰)

நச்சினார்க்கினியம்

(இ - ள்.) வெளிப்பட வரைதல் - முற்கூறியவாற்றானே களவு வெளிப்பட்டபின்னர் வரைந்து கோடல்; படாமை வரைதல் - அக்களவு வெளிப்படுவதன் முன்னர் வரைந்துகோடல்; என்று ஆ இரண்டு என்ப வரைதல் ஆறே - என்று கூறப்பட்ட அவ்விரண்டே என்று கூறுவர் ஆசிரியர் வரைந்துகொள்ளும் வழியை (எ-று).

*"சேயுயர் வெற்பனும் வந்தனன்*
*பூவெழில் உண்கணும் பொலிகமா இனியே."* (கலி. 39)

இது வெளிப்பட்டபின் வரைவுநிகழ்ந்தது.

*"கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து*
*வானின் அருவி ததும்பக் கவினிய*
*நாட னயனுடைய னென்பதனான் நீப்பினும்*
*வாடன் மறந்தன தோள்."* (ஐந்திணை எழு. 2)

இது வெளிப்படாமல் வரைவு நிகழ்ந்தது.

*"எம்மனை முந்துறத் தருமோ*
*தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே"* (அகம். 195)

என்றாற்போல்வன வெளிப்படுவதன்முன்னர்க் கொண்டு தலைக் கழிந்துழிக் கொடுப்போரின்றியுங் கரணம் நிகழ்ந்தமையின், அது வும் வெளிப்படாமல் வரைந்ததாம். (சக)

ஆய்வுரை

இது, தலைவன் தலைவியை வரைந்துகொள்ளும் பகுதி இத்துணை என்பது உணர்த்துகின்றது.

(இ - ள்.) களவு வெளிப்பட்ட பின்னர்த் தலைவியை மணந்து கொள்ளுதலும் அது வெளிப்படுதற்கு முன்ரே மணந்து கொள்ளு தலும் என மணந்து கொள்ளும் நெறி இரு திறப்படும் எ - று.

இந்நூற்பாவை விரித்துரைக்கும் முறையிலமைந்தது,

*"களவு வெளிப்படா முன்னுற வரைதல்*
*களவு வெளிப்பட்ட பின்றை வரைதலென*
*ஆயிரண் டென்ப வரைத லாறே"* (24)

எனவரும் இறையனார் களவியற் சூத்திரமாகும்.

௫௧. வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை.

**இளம்பூரணம்**

இது, தலைவற்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) களவு வெளிப்படுதல் கற்பினோடொப்பினும்-மேற்சொல்லப்பட்ட மூன்று பொருளாக வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை என்றவாறு.[1]

அவையாவன முற்கூறிய ஓதற்பிரிவும், பகைவயிற்பிரிவும். தூதிற்பிரிவும். எனவேபொருள்வயிற் பிரிதலும் வேந்தர்க்குற்றுழிப்பிரிதலும் காவற்பிரிதலும் நிகழப்பெறும் என்றவாறாம்.[2] (௫௧)

**நச்சினார்க்கினியம்**

இது முதற்கூறிய வரைவு நிகழ்த்தாது பிரியும் இடம் இதுவெனவும் பிரியலாகா இடம் இதுவெனவுங் கூறுகின்றது.

(இ-ள்.)வெளிப்படைதானே கற்பினொடு ஒப்பினும்-முற்கூறிய வெளிப்படைதானே கற்பினுள் தலைவி உரிமை சிறந்தாங்கு அருமை

---

1. களவு வெளிப்பட்ட நிலையில் இவள் இவனுக்குரியவளாயினாள் என எல்லார்க்கும் புலனாகிய நிலையில் அவ்விருவரது உறவு கற்பியல் எனக் கருதப் படுமாயினும் தலைவியைத் தலைவன் உலகறிய மணந்து கொள்வதன் முன்னும் கற்பியலுக்குரிய ஓதல் பகை தூது காரணமாகத் தலைமகளைப் பிரிந்து செல்லுதல் கூடாது என வற்புறுத்துவது இந்நூற்பாவாகும்.

2. முன்னர்க் கூறப்பட்ட ஓதல் பகை தூது என்னும் மூன்றும் காரணமாக வரையாது பிரிதல் இல்லையெனவே திருமணத்தின் பொருட்டுப் பொருள்வயிற் பிரிதலும் நாட்டின் பாதுகாப்புக்கு இன்றியமையாத வேந்தற்குற்றுழிப் பிரிதலும் காவற்குப் பிரிதலும் தலைமகன்மாட்டு நிகழப்பெறும் என்பதாம்.

சிறந்து கற்போடொத்த தாயினும்; ஞாங்கர்க் கிளந்த மூன்று[1] பொருளாக - முற்கூறிய ஓதல் பகை தூதென்ற மூன்றும் நிமித்தமாக; வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை-வரைவிடைவைத்துப் பிரிதல் தலைமகற்கில்லை (எ-று).[2]

மூன்றுமென முற்றும்மை கொடாது கூறினமையின், ஏனைப் பிரிவுகளின் வரையாது பிரியப்பெறும் என்றவாறாயிற்று. அவை வரைதற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தற்குற்றுழிப் பிரிதலுங், காவற்குப் பிரிதலுமென மூன்றுமாம்.

உ-ம்: *''பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்*
*பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையன்*
*திணிமண லடைகரை யலவ னாட்டி*
*அசையின ளிருந்த வாய்தொடிக் குறுமகள்*
*நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்*
*பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து*
*நாமுறை தேஎ மரூஉப் பெயர்ந் தவனொ*
*டிருநீர்ச் சேர்ப்பி னுப்புடனு ழந்தும்*
*பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்*
*படுத்தனம் பணிந்தன மடுத்தன மிருந்தபிற்*
*றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்*
*கண்டிரண் முத்தங் கொண்டு ஞாங்கர்த்*
*தேனிமிர் தண்கரைப் பகுக்குங்*
*கானலம் பெருந்துறைப் பரதவன் நமக்கே.''* (அகம். 280)

இதனுள் ஈண்டுள்ள பொருள் கொடுத்தாற் பெறல் அரியளாயின் தன்னை வழிபட்டால் தந்தை தருவனோ? அது நமக்கரிதாகலின் இன்னும் பொருள் நாம் மிகத் தேடிவந்து வரைதுமெனப் பொருள்வயிற் பிரியக் கருதியவாறு காண்க.

*''பூங்கொடி மருங்குற் பொலம்பூ ணோயே*
*வேந்து வினைமுடித்து வந்தனர்*
*காந்தண் மெல்விரற் கவையினை நினைமே.''*

1. 'ஓதல் பகையே தூதிவை பிரிவே' (அகத்-25) என இப்பிரிவு மூன்றும் முன்னர்க் கூறப்பட்டமையின் 'ஞாங்கற் கிளந்த மூன்று' என்றார். ஞாங்கர்— முன்பு. பொருளாக — காரணமாக.

2. 'வரையாது பிரிகவென்னார்' என்றிருத்தல் வேண்டும்.

இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தான் வரைவு மலிந்தமை தோழி கூறியது ஏனைய வந்துழிக் காண்க. ஓதுதற்கு ஏவுவார் இரு முது குரவராதலின், அவர் வரையாமற் பிரிகவென்றார். பகைவென்று திறைகோடற்குப் பிரியுங்கால், அன்புறு கிழத்தி துன்புற்றிருப்ப வரையாது பிரிதலின்று. இது தூதிற்கும் ஒக்கும். 'மறைவெளிப்படுதல்' (499) கற்பென்று செய்யுளியலுட் கூறுதலின், இதனை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தார். கற்பினோ டொப்பினும் பிரிவின்றெனவே, கற்பிற்காயிற் பிரிவு வரைவின்றாயிற்று. (௩௰)

ஆய்வுரை

இது, தலைவனுக்கு உரியதோர் இயல்பு உணர்த்துகின்றது.

(இ-ள்.) களவு வெளிப்பாடு கற்பியல் வாழ்க்கையோடு ஒப்ப-தாயினும் முன்னர்க் கூறப்பட்ட ஓதல், பகை, தூது என்னும் இம்-மூன்றும் காரணமாகத் தலைவியை மணந்து கொள்ளாது நெட்டிடைப் (நெடுந்தூரம்) பிரிந்து செல்லுதல் தலைவனுக்கு உரிய செயலாதல் இல்லை எ-று.

ஞாங்கர்க் கிளந்த மூன்று என்பன : 'ஓதல் பகையே தூது இவை பிரிவே' (தொல். அகத்.27) என முன்னர்க் கூறப்பட்ட மூவகைப் பிரிவுகள். ஞாங்கர் - முன். பொருள் - காரணம். ஓதல், பகை, தூது என்னும் இம்மூன்றும் காரணமாகத் தலைமகளை வரையாது பிரிதல் இல்லை; எனவே வரைவிடைவைத்துப் பொருள் வயிற் பிரிதலும் வேந்தற்கு உறுதுணையாகப் பிரிதலும் நாடு காத்தற்குப் பிரிதலும் தலைமகனுக்கு உண்டு என்றவாறாம்.

களவு வெளிப்பட்ட பின் வரையும் காலத்து 'இவற்குரியவள் இவள்' என எல்லாரானும் முன்னமே அறியப்பெற்றமையால் அவ்-விருவரும் வரைதற்கு முன்னரே கற்புக்கடம் பூண்டவராயினமை யின் அவர்தம் வாழ்க்கை கற்பியல் வாழ்க்கையொடு ஒத்ததாயிற்று என்பார், 'வெளிப்படைதானே கற்பினோடொப்பினும்' என்றார் ஆசிரியர். இத்தொடரை,

*"வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்*
*தந்தைதாயே தன்னைய ரென்றாங்*
*கன்னவ ரறியப் பண்பா கும்மே"* (26)

எனவரும் நூற்பாவில் இறையனார் களவியலாசிரியர் இவ்வாறே யெடுத்தாண்டுள்ளமை தொல்காப்பியத்திலுள்ள களவியலையும் கற்பியலையும் அடியொற்றியெழுந்தது இறையனார் களவியல் என்னும் உண்மையை நன்கு புலப்படுத்துவதாகும்.



# நூற்பா முதற்குறிப்பு அகர வரிசை

(எண் பக்கத்தைக் குறிக்கும்)